

உ

சிவமயம்.



ஸ்ரீலஸ்ரீ நடேச ஞான தேசிக ஸ்வாமி

## தமிழகம்

# அலையும் கலையும்



டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி.



பழனியப்பா பிரதர்ஸ்
சென்னை - 5. : : திருச்சி - 2.

# முகவுரை

தமிழகத்தின் கடல் மாட்சியையும், கலை மாட்சியையும் ஒருவாறு விளக்கிக் காட்டும் நோக்கத்துடன் எழுந்தது இந்நூல். இதில் அடங்கிய இருபத்தொரு கட்டுரைகளுள், முதல் மூன்று கட்டுரைகளும் இலங்கை வானொலி நிலையப் பேச்சுக்கள். 'சென்னைக் கடற்கரை' கல்கித் தீபாவளி மலரில் வந்த கட்டுரை. ஆனந்த விகடன் தீபாவளி மலரில் வெளியிடப்பட்டது 'பரங்கியர் போன வழி'. 'மேலை நாட்டு அறிஞரின் கலைத்தொண்டு' என்னும் கட்டுரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் ஆய்வு மலரிலும், 'நான் கண்ட சோழவந்தான்' சுதேசமித்திரன் பொங்கல் மலரிலும் வெளி வந்தவை. 'கலைச்சொல்லாக்கம்' கோவையில் நிகழ்ந்த சென்னை மாநிலத் தமிழாசிரியர் மாநாட்டில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம். உள்ளுறையில் உடுக்குறியிட்ட கட்டுரைகள் சென்னை வானொலி நிலையப் பேச்சுக்கள்.

இக்கட்டுரைகளையும், பேச்சுக்களையும் இந்நூலில் சேர்த்துக்கொள்வதற்கு இசைவு தந்த நிலையங்களுக்கும், இவற்றைத் திரட்டி நூல் வடிவாக வெளியிடுவதற்கு இசைவு அளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

சென்னை,
5—11—'58

ரா. பி. சேதுப்பிள்ளை

# உள்ளுறை

## அலை மாட்சி (முதற்பகுதி)

### தமிழ் நாட்டுப் பட்டினங்கள் :



## கலை மாட்சி (இரண்டாம் பகுதி)

# தமிழ் நாட்டுப் பட்டினங்கள்

## சேரநாடு

தமிழகம் என்று முன்னாளில் பெயர் பெற்றிருந்த நன்னாடு, சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தரால் ஆளப்பட்டது. மலை வளமும் அலை வளமும் பெற்றது சேரநாடு; நீர் வளமும் நிலவளமும் நிறைந்தது சோழநாடு; முத்து வளமும் முத்தமிழ் வளமும் கொழித்தது பாண்டி நாடு.

சேரநாடாகிய மலை நாடு, இந்நாளில் மலையாளம் என்று வழங்குகின்றது. அருந்தவ முனிவனாகிய பரசுராமன் அருளால் அந்நாடு உருப் பெற்றது என்பது பழங்கதை.

"திரைசெய் கடலின் பெருவளனும்
திருந்து நிலனின் செழுவளனும்
வரையின் வளனும் உடன்பெருகி
மல்கும் நாடு மலைநாடு"

என்று மலையாள நாட்டின் செழுமையைப் பாடினார் சேக்கிழார் பெருமான்.

## முசிரி

இத்தகைய வளமார்ந்த மலை நாடு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வாணிகத்தில் தலைசிறந்து விளங்கிற்று. அக்காலத்தில் சேரநாட்டுக் கடற்கரையில் முசிரி என்ற துறைமுக நகரம் செழிப்

புற்றிருந்தது. சோழநாட்டுப் பெருந்துறைமுகம் காவேரியின் ஆற்று முகத்தில் அமைந்திருந்தது போலவே சேரநாட்டுத் துறைமுகமாகிய முசிரியும் பெரியாறு மேற்கடலில் கலக்கும் இடத்தில் அமைந் திருந்தது. சேரநாட்டு விளைபொருள்கள் எல்லாம் அத்துறைமுக நகரத்தில் போந்து குவிந்தன. அவற்றை நாடிப் பிற நாட்டு வணிகர்கள் கடல் வழி யாகவும் தரை வழியாகவும் வந்து மொய்த்தார்கள். 'பொய்யறியாப் புலவர்' என்று தமிழ் நாடு போற்றும் பரணர், முசிரியின் சிறப்பினைப் பாடினார். அப் பாட்டைப் புறநானூற்றிலே காணலாம். அவர் பாட்டிற் கண்ட செய்தியை அயல் நாட்டார் எழுதி வைத்துள்ள குறிப்புக்கள் வலியுறுத்துகின்றன.

ஏறக்குறைய ஆயிரத்து எண்ணூறு ஆண்டு களுக்கு முன்னே வாழ்ந்த யவனநாட்டு அறிஞர்க ளாகிய பிளினியும் தாலமியும் இத்துறைமுக நகரத்தை 'முசிரிஸ்' என்று குறித்துள்ளார்கள். சேரநாட்டு மன்னர்க்கு முசிரி தலைசிறந்த துறைமுகமாய் இருந் தமையால், 'முசிரியார் கோமான்' என்னும் சிறப்புப் பெயர் அன்னவர்க்கு உரியதாயிற்று.

இத்தகைய முசிரித் துறைமுகத்தில் சோனகரும் யவனரும் பிறரும் சிறந்த வாணிகம் செய்தனர். ஏற்றுமதியும் இறக்குமதியும் இடையறாது நிகழ்ந்தன. ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களுள் மிகச் சிறந்தது மிளகு. மலையாளத்தைச் சேர்ந்த குட்ட நாட்டில் விளைந்த மிளகு, மேலை நாட்டார்க்கு மெத்தப் பிடித்திருந்தது. பெரிய கப்பல்களில் அச் சரக்கை அவர்கள் ஏற்றிக்கொண்டு சென்றார்கள் ;

அதற்குப் பண்டமாற்ருகச் செம்பொன்னைத் தந்தார்கள்.

> " சுள்ளியம் பேர்யாற்று வெண்ணுரை கலங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> வளங்கெழு முசிறி."

என்று தாயங்கண்ணனுர் பாடிய பாட்டை அகநானூற்றிலே காணலாம். செம்மையான பொன்னைச் சேரநாட்டார்க்குத் தந்து, கருமையான மிளகைக் கப்பல்களில் ஏற்றிச் சென்ற யவன நாட்டு வணிகரின் சீர்மையை இப்பாட்டு நயமுற எடுத்துக் காட்டுகின்றது. 'முசிறித் துறைமுகத்தின் செழுமையால் சேர நாடுபொன்னுடாயிற்று,' என்று புலவர் புகழ்ந்து பாடுவாராயினர்.

நாளடைவில் முசிரி என்ற பெயர் மழுங்கி மறைந்தது. மகோதைப் பட்டினம் என்ற பெயர் அதற்கு வழங்கலாயிற்று. கடற்கரையிலே களித்திலங்கிய மகோதைத் துறைமுகமும், அதனை அடுத்து நின்ற அஞ்சைக்களம் என்ற திருக்கோயிலும் தேவாரத் திருப்பாசுரத்திலே குறிக்கப் பெற்றுள்ளன.

> " மலைக்கும்நிகர் ஒப்பன வன்திரைகள்
> வலித்துஎற்றி முழங்கி வலம்புரிகொண்டு
> அலைக்கும்கட லங்கரை மேல்மகோதை
> அணியார்பொழில் அஞ்சைக் களத்துஅப்பனே!"

என்று பாடினர் சுந்தரர்.

மகோதை என்ற பெயரும் சில நூற்றண்டுகளில் மறைந்தது. கொடுங்கோளூர் என்ற

பெயர் அந்நகருக்கு அமைந்தது. ஐரோப்பியர் நாவில் கொடுங்கோளூர் என்பது 'கிராங்கனூர்' எனச் சிதைந்தது. தமிழில் வல்லோசையுடைய டகரம், வெள்ளையர் வாயில் பெரும்பாலும் ரகரமாக மாறும். இவ்வாறு மாறிச் சீரழிந்த சொற்கள் எத்தனையோ தமிழ் மொழியில் உண்டு. குடகு என்ற நாட்டின் பெயர் 'கூர்க்' (coorg) என்று ஆங்கிலத்தில் வழங்குகின்றது. கள்ளிமேடு என்பது 'காலிமீர்' ஆயிற்று ; தரங்கம்பாடியைத் 'திராங்குபார்' என்றும், தூத்துக்குடியைத் 'தூத்துக்குரின்' என்றும் ஆக்கியவர்கள் வெள்ளையர்களே. இந்த வகையில் கொடுங்கோளூர் 'கிராங்கனூர்' ஆயிற்று.

இவ்வாறு முசிறி என்றும், மகோதை என்றும், கொடுங்கோளூர் என்றும் வெவ்வேறு காலங்களில் பெயர் பெற்று விளங்கிய துறைமுக நகரம் நாளடைவில் அழிந்து போயிற்று. பெரியாறு கவர்ந்து வந்த மண்ணும் மணலும் துறைமுகத்தை மேடாக்கித் தூர்த்துவிட்டன. சேரமான் சிறப்புடன் வாழ்ந்த மாளிகை, இப்போது மண்ணுள்ளே மூழ்கி மறைந்து கிடக்கின்றது. சேரமான் பறம்பு என்று அம்மாளிகையிருந்த இடத்தைக் குறிக்கின்றனர் மலையாள மக்கள்.

## கொச்சி

'உயர்வும் தாழ்வும் ஒருவழி நில்லா,' என்பது இந்நாட்டுப் பழமொழி. உயர்ந்தது தாழும், தாழ்ந்தது உயரும். இஃது உலகத்து இயற்கை. இவ்வுண்மைக்குச் சான்றாய் நிற்பன முசிறியும் கொச்சியும். ஒரு காலத்தில் உயர்ந்திருந்த முசிறி இன்று தாழ்ந்தது;

தாழ்ந்திருந்த கொச்சி இன்று உயர்ந்துவிட்டது. மலையாள மொழியில் 'கொச்சி' என்ற சொல்லுக்குச் 'சின்னது' என்பது பொருள். முன்னாளிலே பென்னம் பெரிய நகரமாய் விளங்கிய முசிரியிலிருந்து இருபது மைல் தூரத்தில் கடற்கரையில் எழுந்த சின்னஞ் சிறிய ஊருக்குக் 'கொச்சி' என்று பெயர் கொடுத்தார் மலை நாட்டார். அவ்வூர் நாளடைவில் வளர்ந்து ஓங்கிச் சிறந்து, இப்போது உலகறிந்த துறைமுக மாய்த் திகழ்கின்றது. இந்நாளில் கொழும்புக்கும் பம்பாய்க்கும் இடையே உள்ள துறைமுகங்களுள் மிகச் சிறந்தது இதுவே.

கொச்சி நாட்டிலே இருநூறாயிரவருக்கு மேற் பட்ட தொகையினராய் ஈழவர் என்ற வகுப்பார் வாழ்கின்றனர். இவர்கள் ஈழநாடாகிய இலங்கையி லிருந்து ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மலை நாட்டில் குடியேறிய மக்கள். இவர்கள் மலை யாளிகளாகவே அந்நாட்டில் வாழ்ந்து வருகின் றார்கள். சிங்கள நாட்டுக்கும் சேரநாட்டுக்கும் இடையே சமூகத் தொடர்பு நெடுங்காலமாய் உண்டு என்பதற்கு ஈழவர் குலம் ஒரு சான்றாகும்.

## குமரி

தமிழ் நாட்டின் தென்னெல்லையாய் விளங்குவது கன்னியா குமரி. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கன்னியா குமரிக்குத் தெற்கே பல நாடுகளும் மலை களும் ஆறுகளும் இருந்தன என்று பண்டைத் தமிழ் வரலாறு கூறுகின்றது. அவற்றைக் கருங்கடல்

கவர்ந்துகொண்ட செய்தி சிலப்பதிகாரத்திலே குறிக்கப்பெற்றுள்ளது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள"

என்று சிலம்பு பாடிற்று. எனவே, சிலப்பதிகாரக் காலத்தில் குமரிக்கடல் தமிழ் நாட்டின் தென்னெல்லையாய்விட்டது. யவன நாட்டு அறிஞர்களாகிய தாலமி முதலியோர் கன்னியா குமரித் துறையைக் குறித்துள்ளார்கள். ஆயினும், இப்பொழுது கன்னியாகுமரியில் துறைமுகம் இல்லை; கடற்கரையில் பகவதி என்னும் குமரியின் கோயில் ஒன்றே காட்சி தருகின்றது. பாரதநாட்டின் தென்னெல்லையில் நின்று தமிழகத்தைக் காத்தருளும் கன்னித் தெய்வத்தை,

"நீலத் திரைக்கடல் ஓரத்திலே நின்று
நித்தம் தவம்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடை யேபுகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு"

என்று கவிஞர் பாரதியார் பாமாலை அணிந்து போற்றினர்.

கத்தும் தரங்கம் எடுத்தெறியும் கருங்கடல் தமிழகத்திற்கு இன்னும் கேடு செய்யலாகாதென்று அதன் கரையோரத்திலே கண்ணும் கருத்துமாய் நின்று, நெடுந்தவம் புரிந்து, கன்னித் தெய்வம் காவல் புரிகின்றது என்று கருதி மகிழ்கின்றார் பாரதியார். அவர் பாடிய வண்ணம் வடவேங்கடமும் தென்குமரியும் தமிழ் நாட்டின் எல்லைகளாய் அமையும் நாளே தமிழ் மக்களுக்கு நன்னாள் ஆகும்.

# சோழநாடு

பாரத நாட்டிலே சிறந்த ஆறுகள் பல உண்டு. அவற்றுள் கங்கையும் காவிரியும் தலை சிறந்தனவாகும். வடநாட்டை வளமுறச் செய்வது கங்கை. தென்னாட்டை வாழ்விப்பது காவிரி. பொன்னி என்று புலவர் போற்றும் காவிரியாறு குடகு மலையிலே பிறந்து, மைசூர் வழியாகத் தவழ்ந்து, சோழநாட்டிலே நடந்து குணகடலில்[1] கலக்கின்றது. பொன்னியாறு செல்லும் இடமெல்லாம் செழுஞ்சோலைகளும், கழனிகளும் காட்சி தருகின்ற அழகினைக் கண்டு அகமகிழ்ந்து பாடிய கவிஞர் பலராவர்.

> "உழவர் ஓதை, மதகோதை,
> உடைநீர் ஓதை, தண்பதங்கொள்
> விழவர் ஓதை சிறந்தார்ப்ப
> நடந்தாய் வாழி காவேரி!
> விழவர் ஓதை சிறந்தார்ப்ப
> நடந்த வெல்லாம், வாய்காவா
> மழவர் ஓதை வளவன் தன்
> வளனே வாழி காவேரி!"

என்று சிலப்பதிகாரம் இயற்றிய செஞ்சொற்கவிஞர் காவிரியாற்றைப் புகழ்ந்து பாடிய இசைப்பாட்டு நெஞ்சை அள்ளுவதாகும்!

[1] குணகடல் என்று தமிழிலக்கியங்களிற் குறிக்கப்படும் கீழ்க்கடல் இப்பொழுது வங்காளக் குடாக்கடல் என வழங்குகின்றது.

இவ்வாறு சேர முனிவராகிய இளங்கோவடிகளால் வாழ்த்தப் பெற்ற காவிரியின் இரு மருங்கும் தெய்வ மணங்கமழும் திருக்கோயில்கள் அமைந்து அழகு செய்கின்றன. தேவாரப் பாமாலை பெற்ற பாலைத்துறையும் பராய்த்துறையும், கடம்பந் துறையும் குரங்காடு துறையும், மாந்துறையும் மயிலாடுதுறையும், இன்னோரன்ன பிற துறைகளும் காவிரிக் கரையில் ஈசனார் அமர்ந்துள்ள பதிகளாகும். இப்போது மாயவரம் என வழங்கும் மயிலாடு துறையில் காவிரியாறு களிநடம் புரிந்து செல்லும் காட்சியைக் கண்ட திருஞான சம்பந்தர், 'கந்தமலி சந்திெனாடு காரகிலும் வாரிவரு காவிரி' என்று சந்தத் தமிழ்ப்பாட்டிசைத்துப் போற்றினார். தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம் என்னும் ஸ்ரீரங்கத்தில் கருமுகில் வண்ணனாகிய திருமால் பள்ளி கொண்டருளும் கோலத்தைக் கண்டு உள்ளம் உருகிப் பாடினார் தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

"கங்கையிற் புனித மாய
காவிரி நடுவு பாட்டுப்
பொங்குநீர் பரந்து பாயும்
பூம்பொழில் அரங்கந் தன்னுள்
எங்கள்மால், இறைவன், ஈசன்,
கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன்,
ஏழையேன் ஏழை யேனே!"

என்பது அவர் பாட்டு. இங்ஙனம் ஆழ்வார் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பாடிய கவிதையின்

கருத்தை மனத்திற்கொண்டு, கண்டி அரசனுகிய பரராச சிங்கன், 'காவி ரித்திரு நதியி லேஒரு கருணை மாமுகில் துயிலுமே,'[2] என்று பாடி மகிழ்ந்தான்.

## காவிரிப்பூம்பட்டினம்

இத்தகைய பெருமை வாய்ந்த காவிரியாறு கடலொடு கலக்கும் இடத்தில் சோழநாட்டுப் பழைய துறைமுக நகரம் ஒன்று அமைந்திருந்தது. காவிரிப் பூம்பட்டினம் என்பது அதன் பெயர். கடற்கரை நகரத்தைப் பட்டினம் என்ற சொல்லாற்குறிப்பது பழந்தமிழ் வழக்கு. அந்த முறையிலே காவிரியின் கழி முகத்தில் எழுந்த திருநகரம் காவிரிப்பூம் பட்டினம் என்னும் பெயர் பெற்றது. பழங்காலத்துச் சோழ மன்னர்களுள் புலவர் பாடும் புகழுடைய கரிகால் சோழன் என்னும் திருமாவளவன் காவிரிப் பூம்பட்டினத்தைத் திருத்தினுன்; பெருக்கினுன்; தலை நகரமாக்கினுன்; 'குணகடலின் கோமகள்' என்று பிற நாட்டாரும் புகழத் தக்க ஏற்றமும் தோற்றமும் அளித்தான். அதனுல் வாணிகம் சிறந்தது; செல்வம் செழித்தது; கடல் வழியாகவும் தரை வழியாகவும் பல நாட்டுப் பொருள்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் வந்து குவிந்த வண்ணமாயிருந்தன. அப்பொருள் களைத் தொகுத்துக் கூறுகின்றது பட்டினப்பாலை என்னும் பழந்தமிழ்ப் பாட்டு.

2 பெருந்தொகை, *1135*, ப. *261*.

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத்து உணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு"

என்பது பட்டினப்பாலை.

இப்பழம்பாட்டிலே குறிக்கப்பட்டுள்ள இறக்கு மதிப் பொருள்களுள் 'ஈழத்து உணவும்' ஒன்ருகும். ஈழநாடாகிய இலங்கையிலிருந்து எவ்வகையான உணவுப் பொருள்கள் காவிரித் துறைமுகத்திற்கு அனுப்பப்பட்டன என்பது இப்பொழுது தெளிவாகத் தெரியவில்லை. ஆயினும், செழுமையுற்று விளங்கிய சோழநாட்டில் வாழ்ந்த மக்களும் விரும்பி ஏற்றுக் கொண்ட உணவுப் பொருள்கள் இலங்கையிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட செய்தி குறிப்பிடத் தக்க தன்ருே? தமிழ் நாட்டிற்கும் இலங்கைக்கும் இடையே வாணிகத் தொடர்பு நெடுங்காலமாய் இருந்து வந்தது என்பதற்குப் பட்டினப்பாலை சிறந்ததொரு சான்ருகும்.

காவிரிப்பூம்பட்டினக் கடற்கரையிலே கப்பலுக்குத் துறை காட்டும் ஓர் ஒளி விளக்கு அமைந்திருந்தது. இக்காலத்தில் துறைமுக நகரங்களில் காணப்படும் 'Light House' என்னும் கடற்கரை விளக்கைப் போன்றதொன்று, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே காவிரிப்பூம்பட்டினத்தில் காட்சி

அளித்தது. 'கலங்கரை விளக்கம்' என்று அதற்குப் பெயரிட்டனர் பண்டைத் தமிழர். கடல் வழியாக வரும் மரக்கலங்களைத் துறைமுகத்திற்கு அழைக்கும் விளக்கு என்பது அச்சொல்லின் பொருளாகும்.

துறைமுகத்தில் நாள்தோறும் வந்து இறங்கிய பொருள்கள் நகர அங்காடி[3]யில் சென்று சேர்ந்தன. காவிரிப்பூம்பட்டினத்தின் நடுவே 'கொடுப்போர் ஓதையும், கொள்வோர் ஓதையும், நடுக்கின்றி நிலைஇய நாளங்காடி' அமைந்திருந்தது என்று சிலப்பதிகாரம் அழகுறப் பாடுகின்றது.

இத்தகைய பெருமை சான்ற காவிரிப்பூம் பட்டினத்தைப் புகார் நகரம் என்றும் புலவர் பலர் போற்றுவாராயினர். 'பூம்புகார் போற்றுதும்! பூம்புகார் போற்றுதும்!' என்று சிலம்பு பாடிற்று. பூம்புகார்த் துறையிலே காவிரியாறு கடலொடு கலக்கும் காட்சியைத் தமிழ்க்கவிதையிலே காண்பது ஓர் ஆனந்தம்! காவேரியாறு பரந்து பாய்ந்து கருங் கடலையும் புனிதமாக்கிய துறையில் அமைந்திருந்த பூம்புகார் நகரத்தைப் பாடினர் சேக்கிழார் பெருமான்:

"சென்னி வெண்குடை நீடந பாயன்
திருக்கு லம்புகழ் பெருக்கிய சிறப்பின்
மன்னு தொல்புகழ் மருதநீர் நாட்டு
வயல்வ ளந்தர இயல்பினில் அளித்துப்
பொன்னி நன்னதி மிக்கநீர் பாய்ந்து
புணரி தன்னையும் புனிதமாக் குவதோர்
நன்னெ டும்பெருந் தீர்த்தம்முன் னுடைய
நலஞ்சி றந்தது வளம்புகார் நகரம்."

3 இக்காலத்தில் அங்காடி என்னும் சொல் தமிழ் நாட்டில் பெரும்பாலும் வழங்குவதில்லை. 'பஸார்' என்ற பாரசீகச் சொல்லும், 'மார்க்கட்' என்ற ஆங்கிலப்பதமும் அங்காடியை வழக்காற்றினின்று அகற்றிவிட்டன. தெலுங்கில் இச்சொல் 'அங்கடி' எனவழங்குகின்றது.

இவ்வாறு புலவர் பாடும் புகழமைந்த பூம்புகார் நகரம் இப்பொழுது சீரும் சிறப்பும் இழந்த சிற்றூராய்க் கடற்கரையில் காட்சி தருகின்றது. கொடுமை வாய்ந்த கருங்கடல் பொங்கி எழுந்து காவிரிப்பூம்பட்டினத்தை விழுங்கிவிட்டது என்று சரித்திரம் கூறும்.

> "விரிதிரை வந்து வியன்நகர் விழுங்க
> ஒருதனி போயினன் உலக மன்னவன்"

என்று மணிமேகலையும் இச்செய்தியை வலியுறுத்துகின்றது.

## மாமல்லபுரம்

பழங்காலச் சோழர் ஆட்சியில் காவிரிப்பூம் பட்டினம் சிறந்த துறைமுக நகரமாய்த் திகழ்ந்தது போலவே, பல்லவ மன்னர் தமிழ் நாட்டில் ஆட்சி புரிந்த காலத்தில், சோழமண்டலக் கரையிலுள்ள[4] மாமல்லபுரம் ஒரு துறைமுகமாய் விளங்கிற்று. பல்லவ குலத்தைச் சேர்ந்த மன்னர்கள் ஏறக்குறைய அறு நூறாண்டுகள் தமிழ் நாட்டில் ஆதிக்கம் செலுத்தினார்கள். அன்னவர் காலத்தில் காஞ்சிபுரம் தலைநகரமாகவும், மாமல்லபுரம் துறைமுகமாகவும் திகழ்ந்தன. சென்னைக்குத் தெற்கே முப்பத்து மூன்று மைல் தூரத்தில் கடற்கரையில் அமைந்திருக்கின்றது மாமல்லபுரம். முன்னாளில் 'மல்லை' என்றும், 'மல்லையூர்' என்றும் பெயர் பெற்றிருந்த இந்நகரம், திரு

---

4 சோழமண்டலக் கரை என்பது ஆங்கிலத்தில் 'கோரமண்டல் கோஸ்ட்' ஆயிற்று.

மங்கை ஆழ்வார் முதலிய சான்ரேர்களால் பாடப் பெற்ற பழம்பதியாகும்.

“ புலங்கொள் நிதிக் குவையோடு
புழைக்கைம்மாக் களிற்றினமும்
நலங்கொள் நவ மணிக்குவையும்
சுமந்தெங்கும் நான்றுஒசிந்து
கலங்கள் இயங் கும்மல்லைக்
கடல்மல்லைத் தலசயனம்
வலங்கொள்மனத் தாரவரை
வலங்கொள்என் மடநெஞ்சே !”

என்று அக்கவிஞர் பாடுதலால் அந்நாளில் மல்லை என்னும் நகரம் ஒரு சிறந்த துறைமுகமாய்த் திகழ்ந் திருத்தல் வேண்டும் என்று தோன்றுகிறது.

இந்நகரின் கடற்கரையிலே குன்று போன்ற பாறைகள் பல உண்டு. மணற்பாங்கான நெய்தல் நிலத்தில் குறிஞ்சி நிலத்திற்குரிய குன்றுகள் காணப் படுதலால் மல்லை மா நகரம் குறிஞ்சியும் நெய்தலும் கொஞ்சிக் குலாவும் இடம் என்று கூறுவர் கவிஞர்.

இத்தகைய மல்லைத் துறைமுகத்தைத் திருத்தி ஞன் பல்லவ மன்னனுகிய நரசிம்ம வர்மன். அவ னுடைய பட்டப் பெயர்களுள் ஒன்று மாமல்லன் என் பது. அவன் ஆட்சி புரிந்த காலம் சற்றேறக்குறைய ஆயிரத்து இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முற்பட் டது என்று சொல்லலாம். சிற்பக்கலையில் சிறந்த ஆர்வம் உடையவனுகிய மாமல்லன், கடற்கரையில் அமைந்த குன்றுகளை அழகிய கற்கோயில் ஆக்கிஞன். அம்மன்னன் ஆற்றிய திருப்பணியின் செம்மையால் கடல் மல்லை ‘கவின் மல்லை’ ஆயிற்று; மாமல்ல

புரம் என்ற பெயரும் பெற்றது. நாளடைவில் அப் பெயர் மகாபலி புரம் என மருவியது. திருமாலின் சேவடியால் அழிவுற்ற மகாபலி மன்னனை அந் நகரத்தோடு இணைத்துப் புராணக் கதை பிறந்தது. இன்று மகாபலி புரம் என்றே அவ்வூர் வழங்குகின்றது.

காவிரிப்பூம்பட்டினத்தைப் போலவே மாமல்ல புரத் துறைமுகமும் நாளடைவில் தூர்ந்து போயிற்று. ஆயினும், மாமல்லனும் அவன் வழி வந்த மன்னரும் ஆக்கிய கற்கோயில்களையும் சிற்பப் பணிகளையும் காண்பதற்குப் பல்லாயிரக் கணக்கான மக்கள் பல நாடுகளினின்றும் மாமல்ல புரத்திற்கு வருகின்றார்கள்; ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தமிழகத்தில் சீர்மையுற்று விளங்கிய சிற்பக்கலைத் திறனைக் கண்ணாரக் கண்டு மனமாரப் புகழ்கின்றார்கள்.

இங்ஙனம் உலகம் புகழும் மல்லைமா நகர்ச் சிற்பங்களின் அழகினைச் சொற்களால் எடுத்துரைத்தல் எளிதன்று. எனினும், இரண்டொன்று கூறுதல் மிகையாகாது. ஒரு பாறையில் போர்க்கோலம் கொண்ட பராசத்தி சங்கு சக்கரம் ஏந்தி, சிங்கத்தின்மீது அமர்ந்து, எருமைத் தலையுடைய அசுரன் ஒருவனைத் தாக்கும் வீராவேசம் காணப்படுகின்றது. மற்றொரு பாறையில் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்துக் கோகுலத்தைக் காத்து நிற்கும் கருணை வடிவாகிய கண்ணன் கோலம் காட்சி தருகின்றது. இன்னும் ஒரு பாறையில் ஒற்றைக் காலையூன்றி, உச்சிமேல் கைகூப்பி நற்றவம் புரியும் ஒரு மாதவன் வடிவம் அழகாக வடிக்கப்பட்டுள்ளது. இன்னும் பஞ்ச

பாண்டவ ரதம் என்று பொது மக்கள் கருதுகின்ற ஐந்து கற்கோயில்களும் தமிழ் நாட்டுச் சிற்பக் கலையின் சீர்மைக்கு என்றும் அழியாத சான்றாய் இலங்குகின்றன.

பாரத நாட்டில் குடியரசு நிலை பெற்ற பின்பு மாமல்ல புரம் போன்ற கலைக் களஞ்சியங்களை அர சாங்கம் பாதுகாக்கத் தலைப்பட்டுள்ளது. சென்னை அரசாங்கமும், இந்திய அரசாங்கமும் மாமல்ல புரத்தைச் செப்பம் செய்வதற்குத் திட்டம் வகுத் துள்ளன. இன்னும் சில ஆண்டுகளில் இலங்கைக் கலைவாணரும் ஏனைய நாட்டு நல்லறிஞரும் மாமல்ல புரத்தின் கலைச்செல்வத்தை நன்கு அறிவதற்கு வசதியும் வாய்ப்பும் உண்டாகும் என்று நம்பு கின்றோம்.

# பாண்டி நாடு

தமிழ் நாட்டில் வாழ்ந்த நல்லிசைப் புலமை மெல்லியலார்களுள் தலைசிறந்தவர் ஔவையார். ஔவையார் வாக்கைத் தெய்வ வாக்காகப் போற்றினர் தமிழ் மக்கள். தமிழகத்தில் அவர் பாராத ஊரில்லை. வடவேங்கடம் முதல் தென்குமரி வரையுள்ள நாடுகளை நேரில் கண்ட அவ்வம்மையார், அவற்றின் சிறப்பியல்புகளை ஒரு செய்யுளால் உணர்த்துகின்றார்: சேர சோழ பாண்டியர் என்று நெடுங்காலமாக வழங்கி வரும் முறையினைப் பின் பற்றி, 'வேழம் உடைத்து மலைநாடு,' என்று சேரநாட்டின் பெருமையை எடுத்துரைத்தார். அவர் வாக்கின் திறத்தால் அன்று இருந்த யானைச் செல்வம் இன்றும் அந்நாட்டில் அழியாமல் நின்று நிலவுகின்றது. சோழநாடு நீர்வளமும் நிலவளமும் உடையது. ஆதலால், சோற்றுப் பஞ்சம் அந்நாட்டில் இல்லை. அச்சிறப்பினைக் கண்டு, 'சோழ வளநாடு சோறு உடைத்து,' என்று நெஞ்சாரப் புகழ்ந்துரைத்தார். பாண்டியர்க்குரிய தென்கடலிலே சிறந்த முத்து விளைந்தது. முத்துச் செல்வத்தைக் கண்டு மெத்த மகிழ்ச்சியுற்ற அம்மையார், 'தென்னாடு முத்துடைத்து,' என்று பாண்டியன் நாட்டைப் பாராட்டினார். இவ்வாறு முடியுடை வேந்தர் ஆண்ட நாட்டின் நலன்களைக் கூறிய பின்னர்த் தமிழகத்தின்

சென்னியாய்த் திகழும் 'தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து,' என்று சீராட்டினர்.

"வேழ முடைத்து மலைநாடு; மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து;–பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர் வயல்தொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து."

என்பது அவர் பாட்டு.

இப்பாட்டிலே ஔவையார் சுருங்கச் சொல்லி விளங்க வைத்த கருத்தைப் பழந்தமிழிலக்கியங்களிலே பரக்கக் காணலாம். பாண்டியர்க்குரிய செல்வங்களுள் முதலாக வைத்து எண்ணப்படுவது முத்துச் செல்வமே என்று பாடிய கவிஞர் பலராவர். முத்தார மார்பனாய் விளங்கினான் பாண்டியன். பாண்டிமாதேவியின் சித்திரச் சிலம்பினுள்ளே முத்தே பரலாய் அமைந்திருந்ததென்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. எனவே, பாண்டி நாட்டு மன்னர் அணியிலும், மாதர் நகையிலும் முத்தே முதலிடம் பெற்றிருந்ததென்பது தெற்றென விளங்கும்.

## கொற்கை

இத்தகைய முத்து எங்கெங்கே விளைந்தது என்ற வினாவிற்கு விடை தருகின்றார், தென்பாண்டி நாட்டைச் சேர்ந்த ஒரு பெருங்கவிஞர். முத்துக் கிடைக்கும் இடங்களையெல்லாம் அவர் தொகுத்துக் கூறுகின்றார். குமரித் துறையிலும், கொற்கைத் துறையிலும், பொருநையாற்றிலும், பொதிகை அருவியிலும் முத்து அகப்படும் என்றார் நெல்லை

நாட்டிலே பிறந்து எல்லையற்ற புகழ் எய்திய குமர குருபர அடிகள்.

"கோடும் குவடும் பொருதரங்கக்
குமரித் துறையில் படுமுத்தும்,
கொற்கைத் துறையில் துறைவாணர்
குளிக்கும் சலாபக் குவால்முத்தும்,
ஆடும் பெருந்தண் துறைப்பொருனை
ஆற்றில் படுதெண் ணிலாமுத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியும் குளிர்முத்தும்"

என்று கவிஞர் மிக அழகாகப் பாடிச் செல்கின்றார். நான்கு இடங்களிலே பிறக்கும் நன்முத்துக்களைக் குமரகுருபர அடிகள் இக்கவியில் கூறினாரேனும், கொற்கைத் துறையில் அமைந்த முத்துச்சலாபமே பிற நாட்டு நல்லறிஞர் குறிப்புக்களிற் பேசப் படுகின்றது.

கொற்கை என்ற கடற்கரை நகரம் பாண்டி நாட்டுச் சிறந்த துறைமுகமாகவும், முத்து விளையும் பதியாகவும் முன்னாளில் விளங்கிற்று. பொதிய மலையிலே பிறக்கும் பொருனை என்னும் தாம்பிர பரணி ஆறு கடலொடு கலக்கும் இடத்தில் கொற்கை மாநகரம் அமைந்திருந்தது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பாரறிந்த துறைமுக மாய்ப் பாண்டிக்கரையில் அமைந்திருந்தது கொற்கை நகரம். கொற்கையில் விளைந்த முத்து மரக்கலமேறி, கடல் கடந்து சென்று, பிற நாட்டு மன்னர் முடிகளிலும் மாதர் அணிகளிலும் இலங்கிய செய்தி யைப் பிற நாட்டார் குறிப்புக்களிலே காணலாம். தென்னாட்டு முத்துச் சென்றவிடங்களுக்கெல்லாம்

பாண்டியன் பெருமையும் உடன் சென்றது. முதல் நூற்றாண்டில் ரோமாபுரியில் அரசு வீற்றிருந்த அகஸ்தஸ் என்ற பெருமன்னனிடம் பாண்டிய அரசன் ஒரு தூது அனுப்பினான் என்றும், அத் தூதனை யவனவேந்தன் உரிய முறையில் வரவேற்றுப் பாராட்டிப் பரிசளித்தான் என்றும் இந்திய வரலாறு கூறுகின்றது. இவ்வாறு யவன மன்னனும் பாண்டிய அரசனும் நெருங்கி உறவாடியதற்கு முத்து வாணிகமே சிறந்த சாதனமாய் இருந்ததென்று சரித்திர ஆசிரியர் கூறுவர். கொற்கைத் துறை முகத்தால் பாண்டிய மன்னன் பெரும்புகழும் அரும் பொருளும் பெற்றமையால், அவனைக் 'கொற்கைக் கோமான்' என்றும், 'கொற்கைத் துறைவன்' என்றும், 'கொற்கை ஆளி' என்றும் தமிழ்க் கவிஞர்கள் பாராட்டினார்கள்.

கொற்கையம்பதியில் நிகழ்ந்த வாணிகத்திற்கு இன்றியமையாத அக்கசாலை ஒன்று துறைமுகத்தின் அருகே அமைந்திருந்தது. அக்கசாலை என்பது அரசன் ஆணையால் நடைபெறும் நாணயச்சாலை. ஆங்கிலத்தில் Royal mint என்று சொல்லப்படும் நாணயச்சாலையே அக்கசாலையாகும். இத்தகைய சாலை ஒன்று கொற்கையின் அருகே அமைந்திருந்த தென்றால், அந்நகரின் வாணிகப் பெருக்கத்திற்கு வேறு சான்றும் வேண்டுமோ?

## காயல்

இங்ஙனம் சிறப்புற்றிருந்த கொற்கை மாநகரம் நாளடைவில் நலமிழந்தது. பொருனையாறு மண்ணை

யும் மணலையும் கொண்டு துறைமுகத்தைத் தூர்த்து விட்டது. மெல்ல மெல்ல, கடல் கொற்கையினின்றும் விலகிற்று. பாண்டியனும், பயனற்ற கொற்கையைக் கைவிட்டு, காயல் என்னுமிடத்தில் துறைமுகம் அமைத்தான். சில ஆண்டுகளில் காயல் சிறந்த நகரமாயிற்று. முத்துச் சலாபமும் காயல் துறையிலே அமைந்தது. மார்க்கோ போலோ என்ற மேலை நாட்டு அறிஞர் தென்னாட்டிற்கு வந்த போது காயல் துறைமுகம் செழுமையுற்று விளங்கக் கண்டார். பெருமையும் மேன்மையும் வாய்ந்த நகரம் (great and noble city) என்று அவர் அந்நகரைக் குறித்துள்ளார். தமிழ் நாட்டுப் பரதவர் படகிலேறிச் சென்று கடலுள் மூழ்கி முத்துச் சிப்பிகளை அள்ளி வருவதையும், அவற்றைப் பங்கிடுவதையும் பற்றி விளக்கமாகவும் விரிவாகவும் அவர் எழுதியுள்ளார். அவர் கூறுகின்றார்:

"இளவேனிற் காலமே முத்துக் குளிப்பதற்கு ஏற்ற காலம். முத்துச் சலாபம் நடைபெறும்பொழுது காயல் மாநகரம் புத்துயிர் பெறுகின்றது. கடற்கரையில் பல நாட்டு மக்கள் குழுமுகின்றார்கள். முத்துச் சிப்பிகள் கடற்கரையில் வந்து குவிந்தவுடன் அவற்றைப் பங்கிடுகின்றார்கள். அகப்பட்ட சிப்பிகளில் அரசனுக்குப் பத்தில் ஒரு பாகம் பகிர்ந்து அளிக்கப் படுகின்றது. அடுத்தபடியாகக் கடலுள் மூழ்கி முத்தெடுக்கும் பரதவரைக் கொடிய மீன்கள் கடித்து விடாமல் மந்திர வலிமையால் பாதுகாக்கும் மறையவர்க்கு இருபதில் ஒரு பங்கு கொடுக்கப்படுகின்றது.

மிஞ்சிய முத்துச் சிப்பிகள் பாடு பட்டுத் தேடும் பரதவர்க்கு உரியனவாகும்.

"அழகிய முத்தைக் காணும் போது பாண்டி மன்னன் அடையும் இன்பத்திற்கு ஓர் அளவில்லை. அரிய முத்துக்களை அயல் நாட்டார்க்கு விற்கலாகாது என்ற அரசாங்க ஆணையும் பாண்டி நாட்டிலே உண்டு. நாட்டு மக்களுள் எவரிடமேனும் அருமையான முத்து அகப்பட்டிருந்தால், அதனைத் தக்க விலை கொடுத்து அரசனே வாங்கிக்கொள்வான். ஆதலால், எண்ணிறந்த நன்முத்து, பாண்டியன் கருவூலத்தில் உண்டு. சுந்தர பாண்டியன் மார்பில் ஓர் அழகிய முத்தாரம் இலங்குகின்றது. அது வழி வழியாக அவன் குலத்தில் வரும் அருங்கலம் என்று சொல்கின்றார்கள். ஆணி முத்துக்களை அணி பெறக் கோத்து அமைத்த அந்த மாலையின் விலையை யாவரே மதிக்க வல்லார்! இத்தகைய நல்லணிகள் எத்தனை எத்தனை!" என்று வியந்து, மேலும் மார்க்கோ போலோ எழுதுகின்றார்:

"காயல் துறைமுகத்தில் அயல்நாடுகளிலிருந்து ஆயிரக்கணக்கான குதிரைகள் வந்து இறங்குகின்றன. பாண்டியர் ஆண்டுதோறும் பத்தாயிரம் குதிரைகள் வாங்குகின்றனர்; அதிக விலையும் தருகின்றனர். ஆயினும், குதிரை விற்கும் பிற நாட்டு வணிகர்கள் நேர்மையாக நடந்துகொள்வதில்லை. தாங்கள் விற்ற குதிரைகள் பாண்டியரிடம் வாழவேண்டும் என்ற விருப்பம் அவர்கட்கில்லை. அக்குதிரைகள் ஓர் ஆண்டிற்குள் இறந்துவிட்டால், அடுத்த ஆண்டில் மேலும் பத்தாயிரம் குதிரைகள் விற்கலாமே என்ற

கெட்ட எண்ணம் அன்னார் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிறது. ஆதலால், குதிரைகளைப் பழக்கும் முறையை அவர்கள் உணர்த்துவதில்லை; பரி நோய்க்குரிய மருத்துவ முறையையும் பயிற்றுவதில்லை. இப்படி அரசனை வஞ்சித்துக் கொள்ளை ஊதியம் பெறுகின்றனர் குதிரை வர்த்தகர்,'' என்று கூறி முடிக்கின்றார் மார்க்கோ போலோ.

மார்க்கோ போலோ கண்ட காயல் துறையின் வாழ்வும் நீடித்து நிற்கவில்லை. கொற்கைக்கு நேர்ந்த கேடு காயலையும் தொடர்ந்தது. காயல் துறைமுகமும் தாம்பிரபரணி கடலொடு கலக்குமிடத்தில் அமைந்ததனால், நாலைந்து நூற்றாண்டுகளில் தூர்ந்து போயிற்று. ஆற்று முகத்தில் அமைந்த துறைமுகம் அழிந்துதான் போகும் என்ற உண்மையைக் கொற்கைக்கும் காயலுக்கும் நேர்ந்த கதியால் அறிந்துகொண்ட தென்பாண்டி நாட்டார், தூத்துக்குடியைத் துறைமுகமாகத் திருத்தினார்கள். எனவே, பாண்டி நாட்டின் பண்டைத் துறைமுக நகரம் கொற்கை; இடைக்காலத் துறைமுக நகரம் காயல்; இக்காலத் துறைமுக நகரம் தூத்துக்குடி என்று சொல்லலாம்.

இவ்வுண்மையை முதன்முதல் ஆராய்ந்து அறிந்தவர் கால்டுவெல் என்னும் ஆங்கிலநாட்டு அறிஞர். அவர் தமிழ் நாட்டைத் தம் தாய்நாடாக்கிக் கொண்டவர்; ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகள் திருநெல்வேலியிலுள்ள இடையன்குடி என்னும் சிற்றூரில் இருந்து தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டுக்கும் சிறந்த தொண்டு செய்தவர்; திராவிட மொழிகளின்

ஒப்பிலக்கணம் என்னும் ஒப்புயர்வற்ற நூலை ஆங்கிலத்தில் இயற்றித் தமிழ் மொழியின் செம்மையையும் தொன்மையையும் உலகறியச் செய்த வித்தகர்.

திருநெல்வேலிச் சரித்திரத்தை வரன்முறையாக எழுத ஆசைப்பட்டார் அவர்; அதற்காகத் தூர்ந்து கிடந்த பழைய துறைமுகங்களைத் துருவி ஆராயத் தொடங்கினர்; கொற்கையில் மண்ணுள்ளே மூழ்கி மறைந்து கிடக்கும் பொருள்களை அகழ்ந்து எடுத்து ஆராய்ந்தால் அவ்வூரின் பழம்பெருமை விளங்கும் என்று கருதி, சில பணியாளர்களோடு அங்கே சென்றார். அவர் கருத்தை அறியாத கொற்கை வாசிகள் மனம் பதைத்தார்கள்; 'வெள்ளைக்காரருள் ஒருவர் கொற்கைப் புதையல்களைக் கொள்ளையடித்துக் கொண்டு போக வந்தார்!' என்று எண்ணினர்கள். அவர்கள் கொண்ட ஐயத்தையும் அச்சத்தையும் மாற்றுவது கால்டுவெல்லறிஞருக்குப் பெரும்பாடாயிற்று. 'புதையல்களின் அருகே போவதில்லை,' என்று வாக்களித்த பின்னரே அவர் வேலை செய்ய அனுமதி பெற்றார்.

இத்துணைத் தொல்லையும் துன்பமும் பட்டு அவ்வறிஞர் செய்த ஆராய்ச்சியின் பயனாகப் பாண்டி நாட்டின் பழம்பெருமை துலங்கிற்று. கொற்கையில் தோண்டிப் பார்த்த பொழுது ஆறடி மண்ணின் கீழ் மணற்பாறை இருந்தது. அதற்கும் ஓரடியின் கீழே கடற்கரைக் குறுமணல் காணப்பட்டது. அவர் பட்ட பாடு பலனளித்தது. பொருநையாற்று மண் ஆறடி உயரம் துறைமுகத்தில் படிந்தமையால் கடல்

கொற்கையை விட்டு விலகிற்று என்ற உண்மை புலனுயிற்று. இப்பொழுது அக் கடல் கொற்கையி லிருந்து இரண்டு மைல் தூரத்தில் உள்ளது.

## தூத்துக்குடி

இக்காலத்தில் ஏறக்குறைய முந்நூறு ஆண்டுக ளாகத் தென்னுட்டுக் கடற்கரையில் முதன்மை பெற்று விளங்குவது தூத்துக்குடித் துறைமுகம். இந்தத் துறைமுகத்தால் வெள்ளைக்கார வணிகர்கள் கொள்ளை ஊதியம் அடைந்தார்கள். இருபதாம் நூற்ருண்டில் தூத்துக்குடியிலே விடுதலை இயக்கம் தோன்றிற்று. அவ்வியக்கத்தைப் பாட்டால் வளர்த் தார் பாரதியார்; பேச்சால் வளர்த்தார் சிதம்பரனுர்.

"சொந்த நாட்டில் பிறர்க்கடி மைசெய்தே
துஞ்சிடோம்; இனி அஞ்சிடோம்!
எந்த நாட்டிலும் இந்த அநீதிகள்
ஏற்குமோ? தெய்வம் பார்க்குமோ?"

என்ற சுதந்தரப் பாட்டால் தென்னுட்டிலே புதிய தோர் ஊக்கம் பிறந்தது. பாரதியார் பாடிய பாட்டு, சிதம்பரனுர் பேசிய பேச்சால் ஊற்றமுற்றது. கனலொடு காற்றும் கலந்தாற்போன்று தூத்துக் குடித் துறைமுகத்தின் அருகே நின்று பேசினுர் வீரசிதம்பரனுர்:

"தென்னுட்டுத் துறைமுகமே, முந்நூறு ஆண்டுகளாக நீயே இந்நாட்டில் முதன்மை பெற்று விளங்குகிருய்! முன்னுளில் வளமுற்றிருந்த கொற் கைத் துறைமுகத்தின் வழித் தோன்றல் நீயே

என்றறிந்து உன்னை வணங்குகின்றேன்! ஆயினும், அன்றிருந்த மாட்சியையும் இன்றுள்ள தாழ்ச்சியை யும் நினைக்கும்போது என் நெஞ்சம் குமுறுகின்றதே! பார் அறிந்த கொற்கைத் துறைமுகத்திலே அன்று பாண்டியனுடைய மீனக்கொடி உயர்ந்து பறந் தது. பழங்குடிகளாகிய பரதவர்கள், வாணிகத்தால் வளம்பெற்று, மாடமாளிகையில் வாழ்ந்தார்கள். இது சென்ற காலத்தின் சிறப்பு. இன்று அந்த மீனக் கொடி எங்கே? முத்துச் சலாபம் எங்கே? ஆங்கில நாட்டுக் கொடியன்றோ இன்று இத்துறைமுகத்தில் பறக்கின்றது? வெள்ளைப் பரங்கியர் கப்பலன்றோ வேலை எங்கும் பரந்து திரிகின்றது? கொள்ளை லாபம் அடிக்கின்ற வெள்ளையர் கப்பலில் கூலிகளாய் வேலை செய்கின்றார்கள் நம் நாட்டு மக்கள். சொந்த நாட்டிலே வந்தவர்க்கு அடிமை செய்து வயிறு வளர்ப்பது ஒரு வாழ்வாகுமா? பிறந்த நாட்டிலே பிறர்க்கடிமை செய்வது பேதைமையன்றோ? 'வசை யொழிய வாழ்வாரே வாழ்வார்,' என்ற வள்ளுவர் வாக்கை மறக்கலாமா?'' என்று உணர்ச்சியோடு பேசினார் சிதம்பரனார்.

பேச்சோடு நின்றுவிடவில்லை அப்பெரியார்; தூத்துக்குடியிலே சுதேசக் கப்பல் கம்பெனி யொன்றை உருவாக்கினார். பாரதநாட்டுச் செல்வரும் அறிஞரும் அக்கம்பெனியில் பங்கு கொண்டனர். பழங்காலப் பாண்டியரைப்போல மதுரை மாநகரில் ஒரு தமிழ்ச்சங்கம் அமைத்து, புலவர் பாடும் புகழுடைய வராய் விளங்கிய பாண்டித்துரைத்தேவர், அக் கம்பெனியின் தலைவர் ஆனார். அதன் செயலாளராய்

அமைந்து அரும்பணி செய்தார் சிதம்பரனுர்; சுதேசக் கப்பல் ஒன்று வாங்கினுர். வெள்ளோட்டம் பார்ப்பதற்காகத் தூத்துக்குடியிலிருந்து கொழும்புத் துறை முகத்தை நோக்கிப் புறப்பட்டது சுதேசக்கப்பல். நாட்டு மக்களின் உள்ளத்தில் சுதந்தர இன்பம் பொங்கி எழுந்தது. அன்று முதல் சுதேசக்கப்பல் வாணிகம் வளர்ந்தது; வெள்ளையர் வாணிகம் தளர்ந்தது. அது கண்டு வெள்ளையர் உள்ளம் எரிந்தது. அரசாங்கத்தின் உதவியை அவர் நாடினர்; அடக்குமுறையைக் கையாளுமாறு தூண்டினர். அன்னுர் கருத்திற்கிசைந்த வெள்ளை அரசாங்கம், சிதம்பரனுர்மீது பழிசுமத்திற்று. நாட்டின் அமைதியை அவர் கெடுத்தாராம்! நல்ல முதலாளிகளுக்குத் தொல்லை கொடுத்தாராம்! வெள்ளையர் குலத்தின் மேல் வெறுப்பை ஊட்டினுராம்! அடிமைத் தளைகளை உடைக்க வழி காட்டினுராம்! இக்குற்றங்களைச் சிதம்பரனுர்மீது சாட்டிற்று ஆங்கில அதிகார வர்க்கம்.

ஆங்கிலத் துரை மகன் வீற்றிருந்த நீதி மன்றத்திலே குற்ற விசாரணை நடந்தது. தீர்ப்பு அளிக்கப்பட்டது. இரட்டைத் தீவாந்தரத்தண்டனை சிதம்பரனுர்க்கு விதிக்கப்பட்டது. உயர்நீதி மன்றத்தில் அத்தீர்ப்புச் சிறைத் தண்டனையாய் மாறிற்று. தேசபத்தர்—தமிழறிஞர்—சிதம்பரனுர் சிறைக்கோட்டம் சேர்ந்தார்; கை வருந்தக் கருங்கல் உடைத்தார்; மெய் வருந்தச் செக்கிழுத்தார். இக்கொடும்பணிகளால் அவர் உடல் சலித்தது; எனினும், உள்ளம் ஒரு நாளும் சலித்ததில்லை. அவர் சிறைச்சாலையைத் தவச்சாலையாகக்

கருதினர். சிறைச்சாலை வாழ்க்கையைக் குறித்து அவர் பேசிய அமுத மொழிகளைக் கேளுங்கள் :

“சிறைச்சாலையில் செக்கிழுத்த துயரத்தை மாற்றியது என் செந்தமிழன்றே? கைத்தோல் உரியக் கல்லுடைக்கும்போது என் கண்ணீரை மாற்றியது கன்னித் தமிழன்றே? சிறைக்கோட்டத்தில் வேலை ஒழிந்த வேளையில் தொல்காப்பியத்தைப் படித்துப் படித்து என் தொல்லையெல்லாம் மறந்தேன்! வள்ளுவர் குறளைப் படித்து உள்ளம் தழைத்தேன்! 'பாரதநாடு, சுதந்தரம்' என்று துடிக்கின்ற என்னை அரசாங்கம் சிறைக்கோட்டத்தில் அடைக்கலாம்; துச்சமாக எண்ணித் தூறு செய்யலாம்; ஆயினும், நாட்டிலே வீர விடுதலை வெள்ளம் புறப்பட்டுவிட்டது! அதன் வேகத்தைத் தணிக்க யாரால் முடியும்? எரிமலையைத் தடுக்க—அதன் வாயை அடைக்க—எவரால் இயலும்?” என்று பேசினர் சிதம்பரனர்.

# சென்னைக் கடற்கரை

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே, ஒரு நாள் மாலைப் பொழுதில் சென்னைக் கடற்கரையிலே 'காற்றுவாங்க'த் தம் காதல் மனையாளோடு சென்றார் ஒரு கவிஞர். கண்ணுக்கு எட்டாத வெண்மணலின் பரப்பையும், எண்ணுக்கு அடங்காத மக்களின் சிறப்பையும், அடுத்தடுத்து நீர்த்துளிகளை அலைக்கையால் அள்ளி வீசி நிலமகளின் அடி பணிந்த நெடுங் கடலின் நீர்மையையும் கண்டு இன்புற்றிருந்தனர் இருவரும்.

அப்போது, வெள்ளைப் பரங்கியர் கூட்டம் ஒன்று அவர் இருந்த இடம் நோக்கி வந்தது. காற்சட்டையும் மேற்சட்டையும் போட்டுக்கொண்டு, வாயிலே சுருட்டுக் கட்டைகளை மாட்டிக்கொண்டு, உடம்பை இங்குமங்கும் ஆட்டிக்கொண்டு வந்த கூட்டத்தைக் கண்ட கவிஞர் ஒரு பாட்டுக் கட்டிவிட்டார்.

" வெள்ளைக் காரர்கள் பற்பலர்
மிக்கஉல் லாசக்
கள்ள ருந்திய படைஞர்கள்
கவினுற உலவ
எள்ளி னும்பிறர் அதைச்சிறி
தேனும்எண் ணுகிலாக்
கொள்ளி வாய்ப்புகைச் சுருட்டினர்
சிலர்அவண் குழும "

என்ற பாட்டு, கவிஞரின் மனைவிக்கு மிக்க மகிழ்ச்சியை அளித்தது.

மனைவி : இப்படிக் கள்ளுண்டு தள்ளாடித் திரியும் வெள்ளையர்களைத்தான் 'காலாடிகள்' என்று சென்னை வாசிகள் சொல்லுகிறார்களோ ?

கவிஞர் : சென்னையைச் சார்ந்த திருவொற்றியூரிலே 'காலாடிப் பேட்டை' இருக்கிறது, தெரியுமோ?

மனைவி : அங்குக் குடிகார வெள்ளையர்தாம் குடியிருக்கிறார்களோ ?

கவிஞர் : முற்றத் துறந்த பட்டினத்து அடிகளின் தெய்வ ஒளி வீசும் திருஒற்றியூரிலே வெள்ளைக்காரர்கள் தலை காட்டுவார்களா ? நெசவுத் தொழில் செய்யும் சாலியர்களே அங்கே குடியிருக்கின்றார்கள். ஆனால் அவர்களைக் குடியிருத்தியவன் ஒரு வெள்ளைக்காரக் கவர்னர்! 'காலெட்' என்பது அவன் பெயர். பேராசைபிடித்த அவ்வெள்ளையன் சென்னையிலே தன் பேரை நிலை நாட்ட ஆசைப்பட்டான்; திருவொற்றியூரில் ஒரு பேட்டையை உண்டாக்கினான். 'காலெட் பேட்டை' என்று அதற்குப் பேரிட்டான். அதைக் 'காலாடிப் பேட்டை'யாக்கிவிட்டார்கள் அவ்வூர் மக்கள்

மனைவி : வெள்ளையர்கள்மீது சென்னை மக்களுக்கு உள்ள வெறுப்பு இதனால் வெளிப்படுகிறதே! ஹாமில்டன் என்ற வெள்ளையன் பெயர் தாங்கிய வாராவதியை அம்பட்டன் வாராவதியாக்கி, அதை ஆங்கிலத்திலும் 'பார்பர்ஸ் பிரிட்ஜ்' என்று மொழி பெயர்த்துச் சென்னை வாசிகள் வழங்கி வருகின்றார்கள் என்று அடிக்கடி நீங்கள் சொல்லுவீர்களே !

கவிஞர் : ஆம்; வெள்ளையர்கள் நம் நாட்டுக்கும் நம் மொழிக்கும் செய்துள்ள சிறுமைகளுக்கு

இதுவும் செய்யலாம், இன்னமும் செய்யலாம். இக் கடற்கரையிலுள்ள திருவல்லிக்கேணியை 'டிரிப்பிளிக் கேன்' என்று சிதைத்துவிட்டார்கள்! 'வெள்ளேயர் இட்டது சட்டம்' எனக் கருதி நம்மவர்களும் அச் சொல்லேப் பணிந்து ஏற்றுக்கொண்டார்களே!

**மனேவி :** திருவல்லிக்கேணி 'கல்விக் களஞ் சியம்' என்று சொல்லப்படுகிறதே! அங்கே 'டிரிப்பிளிக்கேன்' என்ற பாழான பெயர் பரவியிருப் பது ஒரு விந்தைதான்!

**கவிஞர் :** திருவல்லிக்கேணி என்பதில் உள்ள 'கேணி'யின் அருமையைச் சிறிது கருத்தூன்றிப் பார்! மயிலாப்பூரில் வாழ்ந்த தெய்வப் புலமைத் திருவள்ளுவர்,

"தொட்டனைத்து ஊறும் மணற்கேணி"

என்று அழகாகப் பாடினர். அந்தக் காலத்தில் இந்தக் கடற்கரையிலே திருவள்ளுவரும் உலாவி யிருப்பார்; அழகிய தாமரைக் குளமாகிய திரு அல்லிக்கேணியைக் கண்டிருப்பார். அவர் கண்ட அல்லிக்கேணியின் அருகே எழுந்தது பெருமாள் கோவில். அத்திருக்கோவிலேப் பற்றிய பழம்பாட்டு ஒன்றைப் பாடுகின்றேன், கேள்:

"வந்துதைத்த வெண்திரைகள் செம்பவளம் வெண்முத்தம்
அந்தி விளக்கும் அணிவிளக்காம்—எந்தை
ஒருவல்லித் தாமரையாள் ஒன்றியசீர் மார்பன்
திருவல்லிக் கேணியான் சென்று"

என்று அருமையாகப் பாடினர் ஓர் ஆழ்வார். இந்த ஊர்ப் பெயரின் அழகை முற்றும் அழித்துவிட்டார்

களே வெள்ளையர்கள் என்று எண்ணும் பொழுது என் உள்ளம் எரிகின்றது!

மனைவி : வெள்ளைக்காரர்களுள் நல்லவர் ஒருவரும் இல்லையா ?

கவிஞர் : நல்லவர்களே இல்லை என்று சொல்லி விடலாமா ! வில்லியம் மில்லர் என்பவர் மிகவும் நல்லவர்; பல்லாயிரம் தமிழ் மாணவர்களுக்குக் கல்வியறிவு ஊட்டியவர்: நல்வழி காட்டியவர்.

> " உண்மைவழி காட்டியுல குய்விக்க வந்தவனை
> அண்மினர் உள்ளத்தில் அன்பு விதைப்பவனைப்
> பண்மலர யாம்ஆடிப் பாடுகம்வா நன்னெஞ்சே !"

என்று அப்பெருமகனாரை மனமாரப் பாடியுள்ளேன் நான். செய்ந்நன்றி மறவாத சென்னை மக்கள் அவர் பணிசெய்த கிறிஸ்தவக் கல்லூரி (Christian College) யின் முன்னே அவரது உருவச் சிலையை நிறுவியுள்ளார்கள். உயர்நீதி மன்றத்துக்கும் கிறிஸ்தவக் கல்லூரிக்கும் நடுவே நிற்கும் அவ்வுருவச்சிலை, வாழையடி வாழையெனக் கல்வி கற்கவரும் இளைஞர்களை நோக்கி, " மாணவர்களே, இக்கல்லூரியில் கற்கத் தகுந்த நூல்களைக் கற்ற பின் நீதி வழுவா நெறி முறையில் நீங்கள் வாழ்தல் வேண்டும்," என்று அறிவுரை கூறுவது போலத் தோன்றுகிறது.

மனைவி : நீங்கள் சொல்லிய நீதி மன்றத்தின் உச்சியில்தானே ' லைட் ஹவுஸ் ' இருக்கிறது?

கவிஞர் : மாதே, ஆங்கில மோகம் உன்னையும் விட்டபாடில்லையே! கடற்கரை விளக்கைக் குறிப்பதற்குத் தமிழ்ச்சொல் இல்லையா? இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே இந்நாட்டிலே கப்பல்கள் உண்டு;

துறைமுகங்க ளுண்டு ; கப்பல்களுக்கு நெறி காட்டும் விளக்குகளும் உண்டு. ' கலங்கரை விளக்கு ' என்று சிலப்பதிகாரம் கூறுவதை மறந்துவிட்டாயா? அருமை யான தமிழ்ச் சொல் ஒன்று இருக்க, ஆங்கிலத்தை எடுத்தாளுதல் அறிவீனம் அல்லவா ? கரும்பிருக்க இரும்பைக் கடிப்பார் உண்டோ ? ' கலங்கரை விளக்கு ' என்ற சொல்லின் பொருளைச் சிறிது சிந்தித்துப் பார்! 'கடலில் மிதந்து வரும் கப்பல்களைத் துறைமுகத்திற்கு அழைக்கும் விளக்கு ' என்ற அழகான பொருள் உடையதன்றோ அச்சொல் ? இத்துணை அழகான பெயர் மழுங்கி மறைந்து விடலாமா ?

**மனைவி :** அப்படியானால் ' ஹார்பர் ' என்ற ஆங்கிலச் சொல்லையும் விட்டொழித்து, துறைமுகம் என்று சொல்லலாமே !

**கவிஞர் :** அப்படிச் சொல்வதுதான் அறி வுடைமைக்கு அழகு. தமிழ் நாட்டிலே தமிழ் ஆட்சி புரியும் காலம் வரும். அப்போது ஆங்கிலச் சொற்கள் தாமாகவே நீங்கிவிடும். இந்நாட்டில் மகம்மதியர் ஆதிக்கம் பெற்றிருந்தபோது சென்னைத் துறைமுகத் திற்குப் ' பந்தர் ' என்று பெயரிட்டார்கள். பந்தர் என்பது துறைமுகத்தைக் குறிக்கும் பாரசீகச் சொல். அவர்கள் இட்ட பெயரை நம் முன்னோர் ஏற்றுக் கொண்டனர். பச்சையப்பர் கல்லூரிக்கு அருகே ' பந்தர் தெரு ' என்ற தெரு ஒன்று இருப்பது உனக்குத் தெரியுமல்லவா ? அத்தெருப் பெயரிலே தான் இப்போது 'பந்தர்' ஒட்டிக்கொண்டிருக்கிறது. அப்படியே 'ஹார்பர்' என்ற ஆங்கிலப் பெயர்

வெள்ளைக்காரர்களோடு வெளியேறிவிடும். சென்னைத் துறைமுகத்தின் அமைப்பைப் பார்! அது கடலின் உள்ளே இரு கைகளையும் நீட்டிச் சென்னையாகிய அன்னை கப்பல்களை வரவேற்பது போலத் தோன்றுகின்றதல்லவா? மணிக் குழந்தைகளாகிய மரக்கலங்களை அன்புடன் அணைக்கும் இத்துறைமுகத்தின் அழகு என் உள்ளத்தை அள்ளுகின்றது.

"சென்னைமகள் அருள்கூர்ந்து
செவ்விமுகம் மலர்ந்தொளிரத்
தன் இரண்டு கைகளையும்
தாய்குழவி அணைப்பதுபோல்
முன் இரையும் கடல்நோக்கி
மொய்த்துவரும் திரைவிலக்கி
நன்னர்வளைத் தேகலங்கள்
நயந்தணைத்தல் காணுதியால்!"

**மனைவி :** பாட்டு அழகாய் அமைந்துவிட்டதே! கடற்கரையிலே நல்ல கவிதை பிறக்கும் என்ற உண்மையை இன்று கண்டுகொண்டேன்!

**கவிஞர் :** கவிதைக்குக் கடற்கரை மட்டும் போதாது.

"பாட்டுக் கலந்திடவே—அங்கே ஒரு
பத்தினிப் பெண்வேணும்."

இந்தப் பாட்டைக் கேட்டு நாணித் தலை கவிழ்ந்த மனைவியோடு வீட்டை நோக்கிப் புறப்பட்டார் கவிஞர்.

# சென்னை
# விலங்ககம் - நூற்றாண்டு விழா

போற்றுதற்குரிய மேயர் அவர்களே! பெருமை சான்ற கவர்னர் அவர்களே! பெரியோர்களே!

தமிழ் நாட்டின் தலைநகராய் விளங்கும் சென்னை மாநகரத்தில் இன்று சிறந்த நூற்றாண்டு விழா ஒன்று நடைபெறுகின்றது. எத்தனையோ நூற்றாண்டு விழாக்களைக் கண்டிருக்கின்றது சென்னை மாநகரம். ஆயினும், இன்று நடக்கின்ற விழாவிலே ஒரு தனிச் சிறப்பு உண்டு. சென்ற ஒரு நூற்றாண்டாகக் காட்டு வாசிகளாகிய நண்பர் பலர் சென்னை மாநகரத்தின் நடுவேயுள்ள பூங்காவனத்தில் காட்சி தருகின்றார்கள்; கூட்டில் அடைபட்டிருந்தாலும் குறைவின்றி வாழ் கின்றார்கள்; பிள்ளை குட்டிகள் பெற்றுப் பெருகு கின்றார்கள். இவ்வாறு பல்லாண்டுகளாக நம்மிடையே வாழ்ந்து வரும் காட்டுத்தோழர்களைக் கனிவுடன் வாழ்த்திப் பல்லாண்டு கூறுதலே இந்நூற்றாண்டு விழாவின் நோக்கமாகும்.

பெரியோர்களே! இக்காட்சிச் சாலையில் உள்ள விலங்குகளும் பறவைகளும் நூறாண்டுகளாகத் தம்மை ஆதரித்து வளர்த்த நகரசபையார்க்கும், அவர்கள் மூலமாக நகரப் பொதுமக்களுக்கும் இன்று நன்றி செலுத்துகின்றன. ஏற்றமும் தோற்றமும் வாய்ந்த யானை கையெடுத்து வணங்குகின்றது. விலங்கின் வேந்தாகிய சிங்கம் வெம்மை ஒழித்துச் செம்மையாக நோக்குகின்றது. புள்ளிமான் துள்ளி மகிழ்கின்றது.

அழகிய மயில் தோகையை விரித்து ஆடுகின்றது. புள்ளினம் பாடுகின்றது. இந்தச் சூழ்நிலையைப் பார்க்கும் பொழுது, "காக்கை குருவி எங்கள் சாதி" என்று பாரதியார் பாடிய பாட்டின் உண்மை நன்கு விளங்குகின்றதன்றோ? அக்கவிஞர் பாடிய காக்கையைப்பற்றிச் சிறிது பார்ப்போம் :

நாள்தோறும் நம் வீட்டைச் சுற்றிக் 'கா கா' என்று காதடைக்கக் கத்தும் காக்கையின் வாழ்க்கையிலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டுவதொன்று உண்டு என்று கூறுகின்றார் திருவள்ளுவர். உண்ணத் தகுந்த பொருள் ஒன்று கிடைத்தால் அதைத் தன்னந் தனியாகத் தின்னும் சிறுமை காக்கையிடம் இல்லை. உடனே குரல் கொடுத்து, தன் இனத்தை அவ்விடத்திற்கு அழைக்கும். வந்த காகங்களோடு கலந்து உண்ணும். இந்த உண்மையைத் திருக்குறளிலே எடுத்துரைக்கின்றார் திருவள்ளுவர்.

> " காக்கை கரவா கரைந்துண்ணும்; ஆக்கமும்
> அன்னநீ ரார்க்கே உள "

என்பது அவர் வாக்கு. இவ்வுலகில் உண்ணும் பொருள் எல்லார்க்கும் பொதுவுடைமை என்ற உண்மையைத் தன் வாழ்க்கையால் உணர்த்துகின்றது காக்கை. இவ்வாறு காக்கையார் காட்டும் நல்ல வழியைக் கடைப்பிடித்து வாழும் மக்களுக்கே ஆக்கம் உண்டாகும் என்று கூறுகின்றார் திருவள்ளுவர்.

காக்கை கருநிறம் உடையது என்று கற்றவரும் மற்றவரும் கருதியிருந்தனர். ஆனால், இப்பொழுது

வெள்ளைக் காக்கையும் உண்டு என்பது தெரிகின்றது. திருவண்ணுமலையின் அருகேயுள்ள சிற்றூரிலிருந்து வெள்ளைக் காக்கை ஒன்று நமது கண் காட்சி விழாவிற்கு விருந்தாய் வந்திருக்கின்றது. அதற்கு நல்வரவு கூறுகின்ருேம்! வெள்ளைக் காக்கையை இல் பொருளுக்கு எடுத்துக்காட்டாக இதுகாறும் சொல்லி வந்த இலக்கண ஆசிரியர்கள், தங்கள் கருத்தை இனி மாற்றிக்கொள்ள வேண்டும் என்று கண் காட்சிச் சாலையிலுள்ள காக்கை கற்பிக்கின்றது.

காட்டு விலங்குகளில் அஞ்சாத நெஞ்சம் உடையது ஆண் சிங்கம். காட்டிலே ஆண் சிங்கம் பெருமிதமாக நடந்து செல்லும் அழகைக் கவிகள் வியந்து பாடியுள்ளார்கள். 'ஏறுபோல் பீடு நடை' என்று அந்நடையைப் புகழ்ந்துரைத்தார் திருவள்ளுவர். ஆண்மையுள்ள ஆடவனைப் 'புருஷ சிங்கம்' என்று புகழ்வதுண்டு. இந்நாட்டு அரசர்களுள் சிலர் 'ராஜ சிங்கம்' என்று பெயர் பெற்றிருந்தார்கள். அரசர்கள் வீற்றிருந்த ஆசனம், அரியாசனம் என்றும், சிம்மாசனம் என்றும் போற்றப் பெற்றது. கலை மகளின் அருள் பெற்ற கவிஞர் ஒருவர்,

"அரியா சனத்தில் அரசரோடு என்னைச்
சரியா சனம்வைத்த தாய்"

என்று பாடிய பாட்டு இங்கு நினைவிற்கு வருகின்றது.

சிங்கத்திற்கு அடுத்த வரிசையில் வீரத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாய் விளங்குவது புலி. 'புலி அடிக்கும் முன்னே கிலி அடிக்கும்,' என்பது ஒரு பழமொழி. பருத்த உடலும் கனத்த கொம்பும் உடைய

யானையே புலியைக் கண்டு அஞ்சும் என்றால், அதன் வீரத்திற்கு வேறு சான்றும் வேண்டுமோ?

“ பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின் ”

என்று திருக்குறள் பாடிற்று.

தென்னாட்டில் ‘ பெரும்புலி ’ என்பது ஒரு குறுநில மன்னனது குடிப் பெயராய் அமைந்தது. பெரும்புலி என்ற பட்டப் பெயர், ‘பெப்புலி’ என்று மாறி, இப்பொழுது பொப்பிலி என வழங்குகின்றது. எனவே, ஆந்திர நாட்டில் உள்ள பொப்பிலி அரசர் பெரும்புலிப் பட்டம் பெற்ற பழங்குடியைச் சேர்ந்தவர். தமிழ்நாட்டில் உள்ள காளையார்கோயில் என்னும் ஊர் முற்காலத்தில் ஒரு பெரிய கோட்டையாய் இருந்தது. கானப் பேரெயில் என்பது அதன் பெயர். அக்கோட்டையை ஆண்ட சிற்றரசன், வேங்கை மார்பன் என்ற பெயருடைய வீரனாய்த் திகழ்ந்தான் என்று சங்க இலக்கியம் கூறுகின்றது. இக்காலத்திலும் கலைகளில் வல்லாரைப் புலி என்று புகழும் வழக்கம் உண்டு. வெண்பாப் பாடும் திறமுடையார் ஒருவர், ‘வெண்பாப் புலி’ என்ற பட்டம் பெற்றார். இசைக் கலையில் சிறப்புற்று விளங்கிய ஒருவர் ‘டைகர் வரதாசாரி’ என்று இசை உலகத்தில் பெயர் பெற்றார்.

காட்டில் வாழும் விலங்குகளில் மானமுள்ள விலங்கு என்று கவிகளால் புகழப்படுவது கவரிமா.

“ மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின் ”

என்ற திருக்குறள் இவ்விலங்கின் தன்மையை எடுத்துரைக்கின்றது. இமயமலைச் சாரலில் இன்றும் இருப்பதாகச் சொல்லப்படுகின்ற கவரி மாவை நமது கண்காட்சிச் சாலைக்கு வருவித்து அதன் தன்மையை ஆராய்ந்து அறிதல் வேண்டும் என்பது என் ஆசை.

யானை பாரதநாட்டுப் பழம்பொருள். பல வகையில் இவ்விலங்கு மக்களுக்குப் பயன்படுகின்றது. முன்னாளில் மன்னர்க்குரிய நால்வகைப் படைகளுள் ஒன்று யானைப்படை. பட்டத்து யானையின் மீது மன்னர் பவனி வருவதுண்டு. 'யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்,' என்று புகழ்வர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே யானைத் தந்தம் தென்னிந்தியாவிலிருந்து பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதென்று சரித்திரம் கூறுகின்றது.

யானையின் நடையிலே ஓர் அழகுண்டு. ஆடவர் நடை ஆனையின் நடையை ஒக்கும் என்றும், பெண்களின் நடை அன்னத்தின் நடையை நிகர்க்கும் என்றும் கவிஞர் சிறப்பித்துப் பாடுவர். கானகத்தில் வழி நடந்த இராமனும் சீதையும் கோதாவிரியாற்றங் கரையை அடைந்த போது அங்கே ஓர் அன்னம் ஒதுங்கி நடந்து சென்றது. அன்ன நடையைக் கண்ட இராமன், சீதையின் நடையோடு அதை ஒப்பிட்டுப் பார்த்துச் சிறந்த இன்பம் உற்றான். அந்த வேளையில் ஆற்றிலே தண்ணீர் குடித்துவிட்டு ஒரு யானைக்குட்டி ஒரு புறம் நடந்து போயிற்று. அதை நோக்கினாள் சீதை; அதன் நடையைத் தன்

நாயகன் நடையோடு ஒத்துப்பார்த்துப் பெருமகிழ்ச்சியுற்றாள்.

" ஓதிமம் ஒதுங்கக் கண்ட
 உத்தமன், உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச்
 சிறியதோர் முறுவல் செய்தான்;
மாதவள் தானும், ஆண்டு
 வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப்
 புதியதோர் முறுவல் பூத்தாள் "*

என்று அவ்விருவரும் அடைந்த இன்பத்தைக் கம்பர் அருமையாகப் பாடியுள்ளார்.

இவ்வளவு சிறப்புடைய யானையிடம் சிறுமையும் உண்டு. யானை மதங்கொண்டால் கட்டுக்கடங்காமல் வெறி கொண்டு திரியும்; எதிர்ப்பட்ட பொருள்களையெல்லாம் தகர்த்து எறியும்; இன்னார் இனியார் என்று பாராமல், அகப்பட்டவரையெல்லாம் அடித்து முடிக்கும்; பல நாள் பழகிய பாகனையும் பரிவின்றிக் கொல்லும். இந்தச் சிறுமை யானையிடம் அமைந்திருத்தலை நாலடியார் என்னும் நீதி நூல் எடுத்துக் காட்டுகின்றது. யானை உயர்ந்த விலங்கு; நாய் மிக இழிந்த விலங்கு. ஆயினும், யானைக்கு நன்றியில்லை; நாய்க்கு நன்றி உண்டு. ஆதலால், 'யானை போல் செருக்குற்றவரோடு பழக வேண்டா. நாய் போல் நன்றியறிவுடையாரை நண்பராகக் கொள்ளுதல் நன்று,' என்று நாலடியார் கூறுகின்றது.

* ஓதிமம் - அன்னம், முறுவல் - புன்சிரிப்பு, போதகம் - யானைக் குட்டி.

அன்னத்தின் நடையையும் அழகையும் புகழாத கவிஞர் இல்லை. அன்ன நடை என்று எல்லோரும் புகழக்கேட்ட மன்னனாகிய நளன் அதன் உண்மையை ஆராய்ந்து அறிய ஆசைப்பட்டான்; தாமரைக் குளத்திற் போந்து ஓர் அன்னத்தைப் பிடிப்பித்தான். மன்னன் கையில் அளிக்கப்பட்ட அன்னம் மறுகித் துடித்தது;'என்ன தீங்கு செய்வானோ!' என்று எண்ணி ஏங்கிற்று. அதன் அச்சத்தை அறிந்தான் அரசன்; இரக்கமுற்றான். நடுங்கிய அப்பறவையைப் பார்த்து, "அன்னமே, அஞ்சாதே! உன்னைத் துன்புறுத்த மாட்டேன். உன்னுடைய நடை அணி நடை என்றும், மங்கையர் நடை மணி நடை என்றும் புலவர்கள் புகழ்ந்து பாடுகின்றார்களே! இவ்விரு நடைகளுள் எது சிறந்தது என்று நேரில் அறிந்து கொள்ளும்பொருட்டே உன்னைப் பிடித்தேன்," என்று ஆறுதல் கூறினான். இக்கருத்தை,

" 'அஞ்சல் மடஅனமே! உன்றன் அணிநடையும்
வஞ்சி அனையார் மணிநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகாண்!' என்றான், களிவண்டு
மாணப் பிடித்ததார் மன் "

என்று நளவெண்பாப் பாடுகின்றது.

இன்னும் அன்னத்தைக் குறித்துப் பல அருமையான செய்திகள் இலக்கியங்களில் சொல்லப்படுகின்றன. தண்ணீரையும் பாலையும் கலந்து ஒரு கிண்ணத்தில் உண்ண வைத்தால் தண்ணீரைப் பிரித்து நீக்கிவிட்டுப் பாலை மட்டும் பருகும் இயல்பு அன்னத்தினிடம் உண்டு என்று

கவிஞர் கூறுவர். ஒரு கவிஞர் சொல்கிறார்: 'கல்வி கரை காணாக் கடல் போன்றது; அறிவு நூல்களுக்கு ஓர் அளவில்லை. அவற்றையெல்லாம் படித்தறிவதற்கு நமக்கு ஆயுள் போதாது. ஆதலால், சுவையுற்ற பாலைச் சுவையற்ற தண்ணீரினின்றும் பிரித்து உண்ணும் அன்னம் போலச் சாரமான நூல்களைத் தெரிந்தெடுத்துப் படிப்பதே அறிவுடைமைக் கழகு,' என்பது அவர் பாடிய பாட்டின் கருத்து. இவ்வாறு அன்னத்தைப் பற்றிச் சொல்லப்பட்ட கருத்து கவிஞரது கற்பனையா அல்லது உண்மைதானா என்பதை ஆராய்ந்து அறிதல் வேண்டும்.

அன்னத்தின் நடையைப் போலவே மானின் கண்ணும், மயிலின் சாயலும், கிளியின் மொழியும், குயிலின் குரலும், வண்டின் இசையும் எக்காலத்தும் புலவர் பாடும் புகழுடையனவாகும். கண்ணுக்கு இனிய தண்ணறுஞ்சோலையில் மயில்கள் ஆடும் அழகினையும், வண்டுகள் இசை பாடும் இனிமையையும் எடுத்துரைக்கின்றார் கம்பர்:

" தண்டலை மயில்கள் ஆடத்
  தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக்
  குவளைகண் விழித்து நோக்கத்
தெண்திரை எழினி காட்டத்
  தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட
  மருதம்வீற் றிருக்கும் மாதோ!"

என்ற அருமையான பாட்டில் வண்டுகள் பாடும் இசையின் இன்பத்தை உணர்த்துகின்றார் கவியரசர்.

அதன் கண்ணைக் கட்டாமல் விட்டுவிட்டால் நம் கதி என்னாகும்?

கடைசியாக ஒன்று சொல்லி என் பேச்சை முடித்துக்கொள்ள விரும்புகிறேன். மனிதவாழ்க்கைக்கும் விலங்கு வாழ்க்கைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே இவ்வுண்மையை அறிந்துகொண்டது தமிழ் நாடு. மனிதராய்ப் பிறந்தவரெல்லாம் உண்மையில் உயர்ந்த பிறப்பினரல்லர். அவருள்ளும் விலங்குத் தன்மையுடையவர் உண்டு. இதை உணர்ந்தே மனித இனத்தை மாக்கள் என்றும், மக்கள் என்றும் இரு வகையாகப் பிரித்தார் தொல்காப்பியர் என்னும் பழந் தமிழ்ப்பெரும்புலவர். பகுத்தறிவுடையவர்களே மக்களாவார்கள். அவ்வறிவற்றவர்கள் மாக்கள் எனப்படுவார்கள். கல்வியால் வரும் பகுத்தறிவைப் பெறாதவர்கள் ஐயறிவுடைய விலங்குகளோடு சேர்த்து எண்ணத் தக்கவர்கள் என்பது தமிழ் நாட்டார் கொள்கை.

" மாவும் மாக்களும் ஐயறி வினவே ;
மக்கள் தாமே ஆறறி வுயிரே "

என்று அறிவுறுத்தினர் தொல்காப்பியர். இந்த உண்மையைத் திருக்குறளும் தெள்ளத் தெளிய உணர்த்துகின்றது.

" விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரொடு ஏனை யவர் "

என்பது வள்ளுவர் வாக்கு. கல்லாத மனிதனுக்கும் காட்டு விலங்குக்கும் உருவத்தில் வேற்றுமையிருந்

தாலும், உண்மையில் வேற்றுமையில்லை. இதனாலே தான் படிப்பும் பண்பாடும் இல்லாத ஒருவன் காட்டு மிராண்டி* என்று வழங்கப்படுகின்றான். ஆகவே, இந்த நூற்றாண்டு விழாவில் காட்டு வாசிகளைக் கண்டு மகிழும் அன்பர்கள், காட்சி இன்பத்தோடு கல்வியின் மாட்சியையும் அறிந்து, ஆறறிவு பெற்ற மக்களாய் விளங்குதல் வேண்டும் என்பது சென்னை நகராண்மைக் கழகத்தாரின் ஆசை. 'விலங்கினம் வாழ்க!' என்று வாழ்த்தும் இத்திருநாளில் விலங்கு நூல் கல்லாத என்னையும் வருக என்று அழைத்து, விழாவுரை ஆற்றப் பணித்த நகர சபையார்க்கு என் மனமார்ந்த நன்றி என்றும் உரியதாகும்.

* மிராண்டி என்பது மிருகாண்டி என்ற சொல்லின் சிதைவு என்பர்.

# புதுவை மாநகரம்

## வானொலிப் பேச்சு—1

இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னே தமிழ் நாடு எப்படி இருந்தது? தமிழ் மக்கள் எவ்வாறு வாழ்ந்தார்கள்? அரசியல் எங்ஙனம் நிகழ்ந்தது? வாணிபமும் கைத்தொழிலும் எவ்விதம் நடந்தன? இவற்றையும் இவை போன்ற செய்திகளையும் நாம் அறிந்துகொள்வதற்குச் சாதனமாகிய நூல் ஒன்று தமிழிலே உண்டு. அந்த நூலைத் தொகுத்தவர் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த ஒரு தமிழ்ப் பெருமகனார். ஆனந்தரங்கப்பிள்ளை என்பது அவர் பெயர். சென்னைக்கு அருகேயுள்ள பிரம்பூரிலே பிறந்த ஆனந்தரங்கர், இளமையிலே புதுச்சேரிக்குச் சென்று, உழைப்பினால் உயர்வடைந்தார்; மதி நலத்தால் சீரும் சிறப்பும் உற்றார்; புதுச்சேரிப் பிரெஞ்சு அரசாங்கத்தின் நன்மதிப்பைப் பெற்றார். நாள் தோறும் அவர் கண்டதையும் கேட்டதையும் ஒழுங்காகக் குறித்து வைத்தார். அந்த டைரியில் (நாட் குறிப்பில்)சுமார் இருபத்தைந்து ஆண்டுச்செய்திகள்* குறிக்கப்பட்டுள்ளன. அக்காலத்து அரசியல் நிகழ்ச்சிகளும் சூழ்ச்சிகளும், நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களும், வெள்ளைக்காரரின் உள்ளக்கிடக்கைகளும், வர்த்தகக் கப்பல்களின் போக்கு வரத்துக்களும்,

* 1736-ஆம் ஆண்டு முதல் 1760-ஆம் ஆண்டுவரை

பஞ்சத்தின் கொடுமையும், இலஞ்சத்தின் கொண்டாட்டமும், துரைத்தனத்தாரை வரவேற்ற முறையும், வழியனுப்பிய விதமும், இன்னோரன்ன பல வகையான செய்திகளும் ஆனந்தரங்கரது நாட்குறிப்பிலே விளக்கமாகக் குறிக்கப்படுகின்றன.

புதுச்சேரியில் கவர்னராய்ச் சேவை செய்தவர்களுள் தலை சிறந்தவர் டூப்ளே என்பது சரித்திர உண்மை. அதற்குச் சான்ருக அவருடைய உருவச் சிலை இன்றும் புதுச்சேரிக் கடற்கரையில் நின்று அணி செய்கின்றது. இத்தகைய டூப்ளே புதுச்சேரிக் கவர்னராய் வந்து இறங்கியபோது அவரை வரவேற்ற சிறப்பினைப்பற்றிச் சிறிது பார்ப்போம் : " 1742-ஆம் வருஷம், தை மாதம், 4-ஆம் தேதி, சனிக்கிழமை, சாயங்காலம் நாலு மணிக்கு டூப்ளே துரையின் கப்பல் வந்து சேர்ந்தது. அப்போது கோட்டையிலே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். மறு நாள் ஞாயிற்றுக்கிழமை—காலை ஆறு மணிக்கு—அசுபதி நட்சத்திரத்தில் மகர லக்கினத்தில் டூப்ளே துரையும் அவர் மனைவியும் இறங்கினர்கள். கடலோரத்திலிருந்து கவர்னர் வீடு மட்டும் இரண்டு புறமும் வாழைமரமும் தென்னை மட்டையும் நட்டு அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. கவர்னரும் அவர் மனைவியும் கால் நடையாய்க் கோட்டைக்குள்ளே போய், கோவிலிலே பூசை போட்டு, பிறகு எட்டு மணிக்கு வீட்டுக்குப் புறப்பட்டார்கள். தட்டு முட்டுக்காரர், நடன மாதர் முதலிய சகல வைபவங்களோடும் வீட்டிலே வந்து துரைத்தனத்திற்கு உட்கார்ந்தார் டூப்ளே," என்று ஆனந்தரங்கர் நாட்குறிப்புக் கூறுகின்றது.

புதுச்சேரிக்கு வந்த வெள்ளைக்காரர் சிலரைப் பற்றிச் சுவையான குறிப்புக்கள் நாட்குறிப்பிலே உண்டு. அவற்றுள் ஒன்றைக் கேளுங்கள்: "இன்று காலமே தரங்கம்பாடிச் சின்னத்துரை, பேர் விளங்கான் வந்தான். ஆள் கழுக்கு மழுக்கென்று மணலிலே பிடுங்கி எடுத்த வள்ளிக் கிழங்காட்டமாய் இருக்கிறான். பிரெஞ்சு வார்த்தை நன்றாய்ப் பேசுகிறான்," என்று நாட்குறிப்பிலே காணப்படுகின்றது.

டூப்ளே துரை கவர்னராய் வந்த பின்பு விந்தையான சில தோற்றங்கள் வானமண்டலத்திலே திகழ்ந்தன. "பத்துப் பதினைந்து நாளாய்ப் பட்டப் பகலிலே ஒரு நட்சத்திரம் காணப்பட்டது. பிற்பாடு இரண்டு நட்சத்திரம் காணப்பட்டன. இற்றைநாள் சாயங்காலம் நாலு மணிக்கு வாயு மூலையில் ஒரு நட்சத்திரம் பூசணிக்காய்ப் பருமனிலே எரிந்து விழுந்தது. அதை இந்தப் பட்டணத்திலுள்ள எல்லோரும் கண்டார்கள். 'இதனால் என்ன விபரீதம் நேருமோ! பட்டப்பகலில் நட்சத்திரம் எரிந்து விழுந்தது ஒரு காலத்தும் இல்லையே!' என்பதாகச் சகல ஜனங்களும் சொல்லிக்கொண்டார்கள். இதற்குப் பத்து நாட்கழித்து வால் முளைத்த நட்சத்திரம் ஒன்று வானத்திலே தோன்றிற்று. அதன் வால் நாளுக்கு நாள் வளர்ந்து இரண்டு ஏற்றக்கோல் அளவாக இன்று தோன்றுகிறது. இவையெல்லாம் விபரீத காலத்திற்கு அறிகுறி என்று மக்கள் கலங்கி நடுங்குகின்றார்கள்."

இவ்வாறு வால் வெள்ளியைப் பற்றிக் கூறிய ஆனந்தரங்கர், புதுச்சேரியில் பெருமாள் கோவில்

திருவிழாவில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தையும் நாட்குறிப் பிலே எழுதியுள்ளார். "பெருமாள் தேர் ரதவீதியில் போகும்பொழுது அதன் உச்சியிலே கட்டியிருந்த குடை ஒரு தென்னை மரத்தில் மோதி அறுந்து விழுந்தது. தரையில் விழாமல் கீழே நின்றவர்கள் அதைப் பிடித்துக்கொண்டார்கள். ஆயினும், அதைப் பார்த்தவர்கள் எல்லோரும் தாபந்தப்பட்டார்கள். 'இப்படி நடந்ததனால் பட்டணத்திற்கு என்ன துன்பம் நேருமோ! கவர்னருக்கு என்ன தீங்கு வருமோ! கோவிலுக்குத்தான் என்ன கேடு காணுமோ!' என்று நானாவிதமாய் ஜனங்கள் சொல் லிக்கொண்டார்கள். என்ன நடக்குமோ, சுவாமிக் குத் தெரியும்!" என்று ஒரு நாட்குறிப்புக் கூறுகின்றது.

புதுச்சேரி அரசாங்கத்தில் தலைமைத் துவிபாஷி ஆகவும், கோர்ட்டியர் ஆகவும் நெடுங்காலம் சேவை செய்தார், கனகராய முதலியார் என்பவர். அவரு டைய தகப்பனாரும் பாட்டனாரும் அதே வேலை பார்த் தவர்கள். முதலியாருடைய வேலைத்திறமையையும், நெறி முறையையும் கண்ட அரசாங்கத்தார் அவரு டைய சேவையைப் பாராட்டி ஒரு தங்கப் பதக்கமும், தந்தப் பல்லக்கும் பரிசளித்தார்கள். இருபத் தோராண்டு சிறப்பாகச் சேவை செய்த முதலியார், 1746-ஆம் ஆண்டு மாசி மாதம் நாலாம் தேதி கால மானார். புதுச்சேரி நகரத்தார் அவருக்குச் செய்த கடைசி மரியாதையை விவரமாக நாட்குறிப்பிலே எழுதியுள்ளார் ஆனந்தரங்கர். "இன்றையத்தினம் கனகராய முதலியார் தெய்வீகமானார். அவர் உடலை அலங்கரித்து சீமையிலிருந்து வந்த சரிகைக் கச்சை

கட்டிப் பல்லக்கின்மேல் வைத்து, வீட்டை விட்டு எடுத்துச் சென்றார்கள். வீணை முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, பட்டாளத்தார், பாதிரிமார்கள் முதலியோர் அணியணியாய்ச் செல்ல, ஒரு மண்டலாதிபதி சவாரி புறப்பட்டாற்போல் கல்லறையை நோக்கிச் செல்லும்போது பட்டணத்திலுள்ள மக்களில் அதை வந்து பாராதவர்கள் இல்லை; அங்கலாய்க்காதவர்கள் இல்லை. அவரை அடக்கம் செய்யும் பொழுது கோட்டையிலே பதினொரு பீரங்கி போட்டார்கள்," என்பது நாட்குறிப்பிலே எழுதப்பட்டுள்ள செய்தி.

கனகராய முதலியார் காலஞ்சென்ற பின்னர் அவர் வகித்திருந்த பெரிய பதவியைப் பெறுவதற்கு வலுத்த போட்டி ஏற்பட்டது. அதைக் கைப்பற்ற இருவர் பெருமுயற்சி செய்தனர். கனகராய முதலியாரின் தம்பி தானப்ப முதலியார் ஒருவர். அவருடைய குடும்பத்தில் பரம்பரையாகப் பலர் பார்த்து வந்த உத்தியோகம் முறைப்படி தமக்கே கிடைக்கவேண்டும் என்பது அவர் கருத்து; அவருக்கு எதிரிடையாகக் கடுமுயற்சி செய்தார் அன்ன பூரணய்யர் என்ற ஒருவர். மேடம் டூப்ளேயின் உதவியால் அப்பதவியைக் கைப்பற்றிக்கொள்ளலாம் என்பது அவர் கருத்து. அந்த உத்தியோகத்தைத் தமக்கு வாங்கித் தந்தால் கவர்னர் துரைக்குப் பதினாயிரம் ரூபாயும், மேடத்திற்கு மூவாயிரத்து இருநூறு ரூபாயும் கைக்கூலி கொடுப்பதாக அந்தரங்கச் செய்தி சொல்லியனுப்பினார் அன்னபூரணய்யர். மேடம் அதற்கு இணங்கவில்லை. "துரைக்கு ஐயாயிரம்

வராகனும், எனக்கு ஆயிரத்தைந்நூறு வராகனும் கொடுத்தால் பேசி வாங்கித்தருகிறேன் ; அதுவும் பணம் கொண்டு வந்து கையில் கொடுத்தால் பேசுவேன்; அல்லாவிட்டால் பேசுகிறதில்லை," என்று சொன்னாள்.

ஒருநாள் மேடம் டூப்ளே ஆனந்தரங்கரை ஆள் விட்டு அழைத்து, பெரிய துவிபாஷி பதவியைப்பற்றிப் பேசலுற்றாள். "இப்போது காலியாயிருக்கிற வேலையில் தன்னை நியமித்தால் துரைக்கு ஐயாயிரம் வராகனும் எனக்கு ஆயிரத்து ஐந்நூறு வராகனும் கொடுப்பதாக அன்னபூரண ஐயன் பேசுகிறான். ஆனால், அவனுக்குக் காரியத்திலே ஜாக்கிரதை போதாது ; பேச்சு வராது ; வைத்தியம் பண்ணத் தெரியுமே தவிர, வர்த்தகம் பண்ணியறியான். நீயானால் இந்த உத்தியோகத்திலே சின்னப் பிள்ளையிலிருந்து எங்கள் கையின்கீழே பழகினவன். உனக்குக் கொடுத்தால் காரிய நிர்வாகம் நன்றாய் நடக்கும். அதை உனக்கு வரப் பண்ணுவேன் என்று வாக்களிக்கிறேன். நாங்கள் கிறிஸ்தவர்கள்; சொன்ன பேச்சுத் தவறுவதில்லை. இது கெட்டியாய் உன் மனத்திலே இருக்கட்டும். இன்னும் நாலைந்து நாளையிலே துரை உத்தியோகம் கொடுப்பார்," என்று சொன்னாள்.

ஊரெங்கும் இந்த உத்தியோகத்தைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. ஆனந்தரங்கருக்கு அது கிடைக்கப் போகிறது என்ற பேச்சு எங்கும் உலாவியது. அதைக் கேள்வியுற்ற தானப்ப முதலியார், கிறிஸ்தவப் பாதிரிமார் மூலமாக மேடம்

டுப்ளேயின் ஆதரவைப் பெற்று அந்த உத்தியோகத்தைத் தமக்கு ஆக்கிக்கொள்ள ஆசைப்பட்டார். உடனே சம்பாக்கோயில் பெரிய சாமியாரிடம் சென்று, "ஆனந்த ரங்கப்பனுக்குப் பெரிய துபாஷித்தனம் கொடுக்கிறதாய் இருக்கிறது. அப்படிக் கொடுத்தால் கிறிஸ்தவர்களுக்கு ஒரு காரியமும் ஆகாது; தமிழர்களுடைய அதிகாரமாயிருக்கும். நீங்கள் இந்தக் காரியத்திலே பிடித்துப் பேசுங்கள்," என்று வேண்டிக்கொண்டார். தானப்ப முதலியார் கிறிஸ்தவராதலால், அவருக்குத்தான் செய்து வைக்கவேண்டும் என்று எண்ணிப் பாதிரியார் மேடம் டுப்ளேயிடம் சென்று, "பெரிய துபாஷ் பதவிக்கு ஒரு தமிழனை வைக்கிற பாவம் உண்டா? நீ கிறிஸ்து மதத்தை உத்தாரணம் பண்ண வந்த வளாச்சே! உன் நாளிலே பெரிய துபாஷ் தனத்திற்கு ஒரு தமிழனை வைக்கலாமா?" என்று பேசினர். அவ்வுரை கேட்ட மேடம், "நான் துரைக்குச் சொல்லுகிறேன்; நீங்களும் அவரைக் கண்டு பேசுங்கள்," என்று சொல்லிப் பாதிரியாரை அனுப்பி விட்டாள். இவ்வாறு பாதிரியார் மூலமாக வேலை செய்த தானப்ப முதலியாருக்கும், பணத்தைக் கொண்டு முயன்ற அன்னபூரண ஐயருக்கும் அந்தப் பதவி கிடைக்கவில்லை. தகுதியறிந்த கவர்னர் துரை ஆனந்தரங்கரை அவ்வேலையில் அமர்த்தினர்.

பெரிய இடங்களில் கல்யாணம் முதலிய சீர் சிறப்புக்கள் நடைபெறும் பொழுது கவர்னரையும், அவர் மனைவியையும் அழைத்து அந்தரங்க வெகுமானம் கொடுக்கும் பழக்கம் உண்டு என்பது நாட்

குறிப்பினால் தெரிகின்றது. புதுச்சேரியில் சேஷா சலம் செட்டியார் வீட்டில் அவர் புதல்வியர் இருவருக் கும் கல்யாணம் நிகழ்ந்தது. அதற்குக் கவர்னரையும், அவர் மனைவியையும் அழைத்திருந்தார் செட்டியார். "அன்று சாயங்காலம் ஆறு மணிக்குக் கவர்னரும் மேடமும் வந்து கொட்டகையில் அரை நாழிகை உட்கார்ந்தார்கள். பிறகு எழுந்திருந்து வீட்டிற் குள்ளே போய் மாப்பிள்ளைகளையும் பெண்களையும் பார்த்துவிட்டு, மறுபடியும் பந்தலிலே வந்து உட் கார்ந்து, தித்திப்புச் சாப்பிட்டுவிட்டுப் போனார்கள். இவ்வாறு இருவரும் வந்து கல்யாணத்தைச் சிறப் பித்ததற்காக, கவர்னர் துரைக்கு ஆயிரம் ரூபாயும், மேடம் டுப்ளேக்கு நூறு ரூபாயும் அந்தரங்கத்திலே கொடுத்துவிட்டு, பந்தலிலே பாக்கு வெற்றிலை, பன்னீர், புஷ்பம் இவற்றைக் கொடுத்தார் செட்டியார். இந்தக் கல்யாணத்தில் ஊர்கோலம் வந்த போது கவர்னர் வீட்டிலே மாப்பிள்ளை பெண்களுக்குப் பாக்கும் வெற்றிலையும், பன்னீரும் சந்தனமும் கொடுத்து, சகலாத்தும் பட்டுச்சேலையும் வெகுமதி அளித்து, கவர்னரும் மேடமும் ஆசீர்வதித்தார்கள்."

புதுச்சேரிக்கு அருகே முரட்டாண்டிச் சாவடி என்ற ஊர் உள்ளது. அந்த ஊர் டுப்ளே துரைக்கு மிகவும் பிடித்திருந்தது. அங்கே அவர் தங்கியிருப் பதற்காக ஒரு பங்களாவும் கட்டப்பட்டது. அந்த ஊரைப் பெரிய நகரமாக்கவேண்டும் என்பது கவர்னர் துரையின் ஆசை. அதற்காகப் புதுச்சேரியிலுள்ள பெரிய வர்த்தகர், உத்தியோகஸ்தர் முதலியோரை அங்கே வீடு கட்டும்படி தூண்டினார்; அந்த ஊரின்

பழைய பெயரை மாற்றி, 'டூப்ளே பேட்டை' என்று பெயரிட்டார்; தாம் இட்ட புதுப்பெயரையே எல்லோரும் வழங்கவேண்டும் என்று உத்தரவு பிறப்பித்தார். அதற்கு மாருகப் பழைய பெயரை எவரேனும் சொன்னல், அபராதம் விதிக்கப்படும் என்றும் கட்டளையிட்டார்.

புதுச்சேரியில் கிறிஸ்தவர்களுக்கு உரிய சம்பாக் கோவிலில் நடந்த சம்பவம் ஒன்று நாட்குறிப்பிலே சுவையாக எழுதப்பட்டுள்ளது. அந்தக் கோவிலிலே குறுக்கே சுவர் வைத்து, இரு கூருக்கித் தாழ்ந்த வகுப்பார் ஒரு புறமிருந்து பூசை கேட்பதும், மேல் சாதித்தமிழர், சட்டைக்காரர், வெள்ளைக்காரர் இவர்கள் மற்ருெரு புறமிருந்து பூசை கேட்பதும் வழக்கமாயிருந்தன. அந்தக் கோயிலுக்குக் காரைக்காலிலிருந்து ஒரு பாதிரியார் வந்து சேர்ந்தார். 'கிறிஸ்தவக் கோவிலில் இப்படிச் சாதி வேற்றுமை இருப்பது சரியன்று,' என்று அவர் கருதினர்; உடனே தாழ்ந்த வகுப்பினர்களைக் கிளப்பிவிட்டார். அவர்கள் கும்பலாய்த் திரண்டு பெரிய சாமியாரிடம் சென்று முறையிட்டார்கள். பாதிரியார் 'அது நியாயந்தான்' என்று ஒத்துக்கொண்டு அப்போதே குறுக்குச் சுவரை இடித்துப் போடும்படி உத்தரவிட்டார். மறு நாள் எல்லாச் சாதியினரும் கலந்திருந்து பூசை கேட்கும் பொழுது மேல் சாதியிற்பிறந்த ஒரு பணக்காரப் பெண் தன்னுடைய விலையுயர்ந்த ஆபரணங்களையெல்லாம் அணிந்துகொண்டு, மெல்லிய சல்லாப்புடைவையைக் கட்டிக்கொண்டு, நறுமணக் கலவை பூசிக்கொண்டு,

பெரிய பாதிரியாரின் அருகே போய் அமர்ந்தாள். அப்போது அவர் பூசை சொல்வதைச் சற்று நிறுத்தி விட்டு, மூக்கைப் பிடித்துக்கொண்டு, கையில் இருந்த பிரம்பினுல் அவளைச் சுட்டிக்காட்டி, 'புண்ணியவதீ, நீ பூசை செய்தது போதும்! எழுந்திருந்து வீட்டுக்குப் போ,' என்று சொல்லியனுப்பினுர்.

ஆயிரத்து எழுநூற்று நாற்பத்தாறும் ஆண்டு ஆகஸ்டுமாதம் இருபத்தைந்தாம்தேதி பிரெஞ்சு அரசர் பிறந்த நாளைப் புதுச்சேரியில் சிறப்பாகக் கொண்டாடினுர்கள். அன்று இரவு ஆனந்தரங்கப்பிள்ளையின் மீது பாடப்பட்ட ஒரு தெலுங்குப் பிரபந்தம் அரங்கேற்றப்பட்டது. அதைப்பற்றி அவரே எழுதியுள்ள குறிப்பைக் கேளுங்கள்: "இற்றைநாள் ராத்திரி என்பேரிலே திருச்சிராப்பள்ளி வித்துவான் கஸ்தூரி ரங்கய்யன் சொன்ன தெலுங்குக் குறவஞ்சிக்கு, திருச்சிராப்பள்ளி மங்கபதி அய்யன் வர்ணசுரம் போடுவித்துத் தாசிகளுக்குப் பாடம் பண்ணி வைத்தார். அதை முத்தைய பிள்ளை அவர்கள் தோட்டத்திலே தாசிகளைக்கொண்டு சமஸ்தமான பேர் முன்னேயும் அரங்கேற்றுவித்தனர்," என்று நாட்குறிப்பிலே குறிக்கப்பட்டிருக்கின்றது.

மதுபானத்தால் விளைந்த தீங்குகள் பல உண்டு. அவற்றுள் ஒன்றைப் பார்ப்போம்: "தை வெள்ளிக் கிழமை சாயங்காலம் ஏழு மணிக்கு, 'கொக்கேத்' என்ற வெள்ளைக்காரன் தன் வீட்டிலிருந்து புறப்பட்டு மீராப் பள்ளியிலேயுள்ள தோட்டத்துக்குப் போய்ச் சாராயம் குடித்தான்; திரும்பிப் போகும் போது அந்தத் தெருவிலே ஒரு வீட்டிற்குள்ளே புகுந்தான்.

அங்கேயிருந்த ஒரு பெண் வெளியே ஓடினாள். வெள்ளைக்காரன் உருவின கத்தியோடு பின் தொடர்ந்தான். அந்தப் பெண் ஓடிப்போய் அயல் வீட்டிலே புகுந்து அலறி அழுதாள். தெருவிலே கூட்டம் கூடிவிட்டது. நாலு பேர் போய்க் குடிகாரனைப் பிடித்தார்கள். எல்லோரும் கூடி அடித் தார்கள். அவனிடமிருந்த கத்தியையும் பிரம்பையும் பிடுங்கிக்கொண்டார்கள். அடித்த அடியினால் தலை பிளந்துபோய் இனிமேல் பிழைக்கமாட்டான் என்று சொல்லுகிறார்கள். இந்தச் சேதி கவர்னர் துரைக்கு எட்டியது. 'தமிழன் வீட்டுக்குள்ளே வெள்ளைக் காரன் புகுந்து பெண்டு பிடிக்கப்போனால் அவர்கள் சும்மாயிருப்பார்களா? நல்ல வேலை செய்தார்கள்!' என்று சொன்னார் கவர்னர்."

## வானொலிப் பேச்சு — 2

புதுச்சேரியில் வாழ்ந்த ஆனந்தரங்கர் முறையாக எழுதி வைத்த நாட்குறிப்பால் அறியலான தமிழ் நாட்டுப் பழக்கவழக்கங்களை முந்திய பேச்சிலே கண்டோம். இன்று தமிழ் நாட்டுக் கைத்தொழில், வியாபாரம், இவற்றைப் பற்றி அந்த நாட்குறிப்பால் அறியப்படும் செய்திகளைக் காண்போம்: ஆனந்த ரங்கரே புதுச்சேரியில் வர்த்தகம் செய்தவராதலால், வாணிபத்தையும் கைத்தொழிலையும் பற்றிய குறிப்புக் கள் அவருடைய நாட்குறிப்பில் அதிகமாய் உண்டு.

அக்காலத்தில் சென்னப்பட்டினம் ஒரு சிறந்த துறைமுக நகரம். அது ஆங்கிலேயரது ஆளுகையில் இருந்தது. புதுச்சேரியில் பிரெஞ்சுக்காரருடைய கம்பெனி பிரபலமாய் நடந்தது. ஆங்கிலேயருக்கும்

பிரெஞ்சுக்காரருக்கும் இடையே வியாபாரப் போட்டியும் அரசாங்கப் பூசலும் நிகழ்ந்த வண்ணமாய் இருந்தன. அக்காலத்தில் பிரெஞ்சுக் கப்பல்கள் புதுச்சேரித் துறைமுகத்திற்கு அடுத்தடுத்து வருவதுண்டு. புதுச்சேரிக் கப்பல்கள் தமிழ் நாட்டில் கிடைத்த சரக்குகளை ஏற்றிக்கொண்டு பல தேசங்களுக்கும் செல்வதுண்டு. அந்நாளில் ஓடிய வர்த்தகக் கப்பல்கள் சிலவற்றின் பெயரை ஆனந்தரங்கரது நாட்குறிப்பிலே காணலாம். 'லெட்சுமணப் பிரசாத்' என்பது ஒரு கப்பலின் பெயர். அது தெனசரிம் என்ற ஊரிலிருந்து பதின்மூன்று யானைகளை ஏற்றிக்கொண்டு வந்த செய்தி நாட்குறிப்பிலே காணப்படுகின்றது. அக்காலத்தில் மணில்லாவுக்கும் புதுச்சேரிக்கும் கப்பல் போக்குவரத்து அதிகமாய் இருந்தது. அப்படி வர்த்தகம் புரிந்த கப்பல்களுள் ஒன்று 'முகம்மதுஷா' என்ற பெயர் பெற்றிருந்தது. மணில்லாவுக்குப் போய் வந்த மற்றொரு கப்பலின் பெயர் 'சங்கர பாரிக்' என்பது. இக்கப்பல் பல வகைப்பட்ட புடைவைத் தினுசுகளை ஏற்றிக்கொண்டு மணில்லாவுக்குச் சென்று திரும்பி வந்த செய்தி நாட்குறிப்பிலே கூறப்பட்டுள்ளது. சரக்குகளை விற்பனை செய்துவிட்டு இக்கப்பல் புதுச்சேரிக்குத் திரும்பி வருவதற்கு ஓர் ஆண்டு காலம் சென்றது. அந்த வர்த்தகத்தில் ஒவ்வொரு சரக்கிலும் கிடைத்த ஆதாயம் ஆனந்தரங்கரது நாட்குறிப்பிலே விவரமாகத் தெரிகின்றது.

அந்நாளில் இருந்த பெரிய வர்த்தகர்களுள் ஒருவர், சுங்குராம் என்பவர். அவருடைய கப்பலுக்

கும் சுங்குராம் என்பதே பெயர். நாட்குறிப்பின் ஆசிரியராகிய ஆனந்தரங்கருக்கும் ஒரு கப்பல் இருந்தது. 'ஆனந்தப்புரவி' என்பது அதன் பெயர். புதுச்சேரிக்கும் கொழும்புக்கும் இடையே அது போக்கு வரவு புரிந்துகொண்டிருந்தது. புதுச்சேரியில் கவர்னராய் இருந்த டூப்ளே துரையின் கப்பல் ஒன்று 'சந்திர நாகூர்' என்னும் பெயர் பெற்றிருந்தது. எனவே, தமிழ் நாட்டுக் கப்பல்களுக்குத் தமிழ்ப் பெயர்களை இடும் வழக்கம் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னமே இருந்ததென்பதற்கு ஆனந்தரங்கரது நாட்குறிப்பும் ஒரு சான்றாகும்.

புதுச்சேரியிலிருந்து நிக்கோபார்த் தீவுகளுக்கு வர்த்தகக் கப்பல்கள் சென்று வந்தன. அந்தத் தீவிலுள்ள வியாபாரிகள் ஒருவரையொருவர் நம்புவதில்லையாம். 'கையிலே காசு, வாயிலே தோசை' என்று இந்நாட்டில் ஒரு வசனம் உண்டல்லவா? அந்த முறையிலே ஒரு கையில் பணமும், மற்றொரு கையில் சரக்கும் வைத்துக்கொண்டுதான் எந்த வியாபாரமும் செய்வது அந்த நாட்டு வழக்கமாம். இப்புதுமையைக் கண்ட பிற நாட்டார் அத்தகைய வியாபாரத்திற்கு 'நிக்கோபார் வியாபாரம்' என்று பெயர் வைத்தார்கள்.

தமிழ் நாட்டின் தென்பாகத்தில் உள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் அக்காலத்திலிருந்த சிறந்த துறைமுகங்களைப்பற்றியும்ஆனந்தரங்கரதுநாட்குறிப்பிலே காணலாம். அவற்றுள் ஒன்று காயல் என்பது. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் மார்க்கோ போலோ என்பவர் தென்னாட்டிற்கு வந்த போது

காயல் துறைமுகம் சிறந்த நகரமாய் இருந்த செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். அந்தத் துறைமுகம் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வரை தூர்ந்து போகாமல் இருந்தது என்பது ஆனந்தரங்கரது நாட்குறிப்பால் விளங்குகின்றது. காயல் துறையிலும், தூத்துக்குடித் துறையிலும் விலையுயர்ந்த முத்தும், வைடூரியமும், சங்கும் கிடைக்குமென்று நாட்குறிப்புக் கூறுகிறது. இவ்விரண்டு துறைமுகங்களும் உலாந்தக்காரர்வசம் அக்காலத்தில் இருந்தன. இப்போது காயல் துறைமுகத்தை விட்டுக் கடல் நெடுந்தூரம் விலகி விட்டது. பழங்காலத்திலிருந்த கொற்கைத் துறைமுகத்தைப்போலவே, காயல் துறைமுகமும் தூர்ந்து அழிந்து போய்விட்டது.

புதுச்சேரிக்கு அருகேயுள்ள பல இடங்களைப்பற்றி நாட்குறிப்புப் பேசுகின்றது. அவற்றுள் ஒன்று செங்கழுநீர்ப்பட்டு. இந்த ஊர் எங்கே உள்ளது என்று இந்நாளில் உள்ளவர்கள் திகைப்புறக்கூடும். செங்கழுநீர் என்பது ஒரு பூவின் பெயர். அந்தப் பூக்கள் நிறைந்து காட்சியளித்த ஓர் ஊருக்குச் செங்கழுநீர்ப்பட்டு என்று முன்னையோர் பெயரிட்டார்கள். இருநூறு ஆண்டுகளுக்கு முன்புவரை இந்தப் பெயர் வழங்கி வந்தது என்பது ஆனந்தரங்கரது நாட்குறிப்பால் தெரிகின்றது. ஆனால், இப்பொழுது அவ்வூர் செங்கழுநீர்ப் பூவின் மென்மையும் மணமும் இழந்து, செங்கற்பட்டு என்று மருவி வழங்கப்படுகின்றது. அந்தப் பெயரை ஆராய்ந்து அறியப் போந்த ஆசிரியர் ஒருவர், செங்கல் சூளை அதிகமாய் அவ்விடத்தில் இருத்தலால் செங்கற்

பட்டு என்னும் பெயர் வந்தது என்று கூறி மகிழ்ந்தார்!

இப்படியே சிதைந்து சீர் அழிந்த மற்றோர் ஊர்ப்பெயர் பழவேற்காடு என்பது. வேலமரங்கள் நிறைந்திருந்த பழமையான அவ்வூர் பழவேற்காடு என்னும் பெயர் பெற்றது. வெள்ளைக்காரர் நாவிலே தமிழின் சிறப்பெழுத்தாகிய ழகரம் எளிதாக நுழைய வில்லை. ஆதலால், அவர்கள் பழவேற்காட்டை பூலிக்காட் என்று சிதைத்தார்கள். இன்றும் ஆங்கில நூல்களில் பூலிகாட் என்ற பெயரே வழங்கி வருகின்றது. ஆனந்தரங்கரது நாட்குறிப்பைத் துணைக் கொண்டு பழவேற்காடு போன்ற பல ஊர்களின் சரியான பெயரைத் தெரிந்துகொள்ளலாம்.

இருநூறு ஆண்டுகளுக்கு முன்னே இந்நாட்டில் உண்ணும் பொருள்களும், உடுக்கும் ஆடைகளும் என்ன விலைக்கு விற்கப்பட்டன என்பதை ஆனந்தரங்கரது நாட்குறிப்பு அறிவிக்கின்றது. மக்கள் வெற்றிலையும் புகையிலையும் போடும் பழக்கம் அக்காலத்தில் அதிகமாய் இருந்தது. நெடுங்காலமாக ஒரு காசுக்கு ஒன்பது வெற்றிலையும், ஒரு பணத்திற்குப் பன்னிரண்டு பலம் புகையிலையும் விற்று வந்தனவாம். பிரெஞ்சுக் கம்பெனியின் சார்பாக வெற்றிலை வியாபாரம் நடத்திய வாசுதேவய்யன் என்பவன், காசுக்கு ஐந்து வெற்றிலையாகவும், பணத்திற்குப் பத்துப்பலம் புகையிலையாகவும் விற்பனை செய்யத் தொடங்கினான். வெற்றிலை போடும் மக்களெல்லாம் வாசுதேவய்யனை மனமார வெறுத்தார்கள்; வாயார ஏசினார்கள்; மூலை முடுக்குகளிலெல்லாம் இந்த அநியாயத்தைப் பேசிப்

பேசிப் பெருமூச்செறிந்தார்கள். ஆயினும், ஒன்றும் செய்ய முடியவில்லை. இந்தச் செய்தி ஆனந்தரங் கருக்கு எட்டியது. அதைப்பற்றி அவர் கவர்னரிடம் சொல்வதற்குச் சமயம் பார்த்திருந்தார். ஒரு நாள் கவர்னர் டூப்ளே மிக்க மகிழ்ச்சியோடு பிரெஞ்சுப் படையின் வெற்றியைக் குறித்துப் பேசத் தொடங் கினார். அதுதான் தக்க வாய்ப்பு என்று கருதி, ஆனந்தரங்கர் அவரிடம் பொதுமக்களது குறையை முறையிடுவாரானார். "எப்போதும் இந்தப் பட்டணத்தில் காசுக்கு ஒன்பது வெற்றிலையும், பணத்திற்குப் பன்னிரண்டு பலம் புகையிலையும் விற்று வந்தது. வாசுதேவன் என்கிற சண்டாளன், குருத்துரோகி, அதைக் குறைத்து, காசுக்கு ஏழு வெற்றிலையாக்கி, பிறகு ஐந்து வெற்றிலையாக்கி விட்டான். அப்படியே பணத்திற்குப் பன்னிரண்டு பலமாயிருந்த புகையிலையைப் பத்துப் பலமாக்கி விட்டான். பொது ஜனங்கள் அவனைத் திட்டுவதும் வைவதுமாய் இருக்கிறார்கள். வீதிக்கு வீதி, மூலைக்கு மூலை ஏழை எளியவர்களெல்லாம் 'இந்தத் தர்ம பட்டணத்திலே இவ்வநியாயம் நடக்கிறதே' என்று கூவிக்கொண்டு திரிகிறார்கள். இந்தப் பட்டணத்திற்கு இவ்விதமான அபக்கியாதி வரலாகாது. வெற்றிலையும் புகையிலையும் எப்போதும் போல விற்பதற்கு உத்தரவு கொடுக்கவேணும்," என்று கவர்னர் துரையை வேண்டினார் ஆனந்தரங்கர். அப்பொழுதே கவர்னர் துரை வாசுதேவய்யனை அழைப்பித்து 'வெற்றிலையும் புகையிலையும் எப்போதும் போல விற்க வேண்டும்' என்று கட்டளையிட்டார்.

களவு செய்தவர்களைக் கடுமையாகத் தண்டிக்கும் முறைஅக்காலத்தில் இருந்தது. "ஒருநாள் கோட்டையிலே வேலை செய்யும் கட்டுக்காரர்கள் கோட்டைக் கிடங்கிலே இருந்த மிளகைத் திருடினார்கள். மூன்று பேர் அதைப் பங்கிட்டுக்கொண்டு விற்கப் போகுமிடத்தில் தலையாரி கையில் அகப்பட்டுக்கொண்டார்கள். அதைக் கேட்டவுடனே கவர்னர் துரை மிக்க கோபங்கொண்டு அம்மூவரையும் கிடங்கிலே போடச் சொன்னார். மாலை மூன்று மணிக்கு அவர்களைக் கோட்டையிலே கொண்டு வந்து கீழண்டை வாயிற்படியிலே இரண்டு பேரையும், 'மேலண்டை வாயிற்படியிலே ஒருவனையும் இருட்டுக்கிடங்கிலே போட்டார்கள். பிறகு முத்திரைச் சாவடியில் கொண்டுபோய் மூன்று பேரையும் விசாரித்தார்கள். களவு செய்தது உண்மைதான் என்று ஏற்பட்டவுடன் மூன்று பேரையும் மரத்திலே கட்டி வைத்து ஒவ்வொருவருக்கும் ஐம்பது அடி கொடுத்து, சுணக்கு முத்திரை போட்டு, ஊர் கடத்திக் கொண்டுபோய் விட்டு வந்தார்கள். அவர்கள் 'தலை பிழைத்தது தம்பிரான் புண்ணியம்' என்று பொது ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். புதுச்சேரிப் பட்டணத்திலே பல நாள் திருடிய திருடன் ஒரு நாள் அகப்பட்டான். அவன் வாக்கு மூலத்தால் திருட்டுத் தொழிலில் ஐந்து பேர் அவனுக்குத் துணை புரிந்த விபரம் துலங்கிற்று. குற்ற விசாரணை முடிந்த பின்பு களவு செய்தவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப் பட்டது. பட்டணத்தின் நடுவே கடைத்தெருவிலே முத்திரைச்சாவடிக்கு எதிரே தூக்கு மரம் நட்டு, சகல

மக்களும் பார்க்கத் தக்கதாகத் திருடனைத் தூக்குப் போட்டார்கள். அவனுக்குத் துணைவராக இருந்த ஐந்துபேரில் இருவருக்குக் கடுமையான தண்டனை கிடைத்தது. ஒவ்வொருவருக்கும் ஐம்பது அடி கொடுத்து, அவர் இரண்டு காதையும் அடியோடு அறுத்து, ஊருக்கு வெளியே துரத்திவிட்டார்கள். மற்றைய மூன்று பேரையும் வரிசையாய்க்கட்டி ஒவ்வொருவருக்கும் இருபத்தைந்து அடி கொடுத்தார்கள்."

அக்காலத்தில் கடலிலும் கொள்ளை நடந்து வந்தது. "ஒரு நாள் புதுச்சேரியிலிருந்து நெப்சூன் என்னும் பெயருடைய பிரெஞ்சுக் கப்பல் புறப்பட்டது. அக்கப்பல் மாகே என்ற துறைமுகத்திற்குப்போய் மிளகும் ஏலக்காயும் ஏற்றிக்கொண்டு அங்கிருந்து மொக்காவை நோக்கிப் பயணமாயிற்று. சிறிது தூரம் சென்றதும் 'அங்கடியார்' என்ற கப்பல் கொள்ளைக்காரர் ஐந்தாறு கப்பல்களுடனே வந்து வளைந்துகொண்டார்கள். நெப்சூனில் இருந்தவர்கள் தங்களால் ஆனமட்டும் பீரங்கியாலும் துப்பாக்கியாலும் சுட்டார்கள். ஆயினும் திருடர்கள் சேதப்படாமல் நெருங்கி வந்து தாம் பிடித்த கப்பலில் ஏறினார்கள். கப்பல் காப்டன் ஒருவனைத் திருடர்கள் துண்டந் துண்டமாய் வெட்டினார்கள். மற்றொருவன் தலையைப் பிளந்தார்கள். இன்னொருவனுடைய இடதுகையை அறுத்தார்கள். இதைக்கண்டு பயந்த மாலுமி ஒருவன் அங்கிருந்த பெட்டியினுள்ளே புகுந்தான். அவனைத் திருடர்கள் பிடித்துத் தங்கள் கப்பலிலே ஏற்றிக்கொண்டார்கள். இப்படிக்

கொள்ளைக்காரர்கள் அழிம்பு செய்யும் வேளையில் போர்சுக்கீசியக் கப்பல் ஒன்று அவ்வழியாக வந்தது. அதைக் கண்டவுடன் தாம் பிடித்த கப்பலை விட்டுவிட்டுக் கள்ளக் கப்பல்காரர்கள் ஓடிப்போய்விட்டார்கள். ஆபத்துக்குள்ளாயிருந்த நெப்சூன் கப்பலைப் போர்ச்சுக்கீசியர்கள் தங்கள் கப்பலோடு மங்களூருக்குக் கொண்டுபோய்விட்டார்கள். ஆபத்து நேர்ந்த கப்பலுக்குக் காலத்தில் உதவி செய்த போர்ச்சுக்கீசியருக்கு நன்றி பாராட்டி பிரஞ்சுக்காரர் ஒரு கடிதம் அனுப்பினார்கள்.''

இவ்வாறு வெளி நாடுகளுக்குச் சென்ற கப்பல்கள் சிலவற்றில் தமிழர்கள் கேப்டன் வேலை பார்த்த செய்தியும் நாட்குறிப்பால் விளங்குகின்றது. புதுச்சேரியிலிருந்து மணில்லாவை நோக்கிப் புறப்பட்ட நொச்சி என்ற கப்பலில் பிரெஞ்சுக் கேப்டன் ஒருவனும்,தமிழ்க் கேப்டன் ஒருவனும் இருந்தனர் என்று ஆனந்தரங்கரது நாட்குறிப்புத் தெரிவிக்கின்றது. தமிழ்க் கேப்டன் பெயர் அழகப்பன். இவ்வாறு 'திரை கடல் ஓடியும் திரவியம் தேடு' என்னும் நல்வாக்கைத் துணைக்கொண்டு கடல் சூழ்ந்த பல நாடுகளில் தமிழர் செய்து வந்த வர்த்தகம் ஆனந்தரங்கரது நாட்குறிப்பிலே தெளிவாய் விளங்குகின்றது.

புதுச்சேரியில் கைத்தொழிலாளரும், வர்த்தகரும் நாளுக்குநாள் பெருக வேண்டுமென்பது பிரெஞ்சுக்காரரின் ஆசை. அவர்கள் சென்னை முதலிய இடங்களிலுள்ள வர்த்தகர்களைப் புதுச்சேரிக்கு இழுப்பதற்குப் பலவாறு முயன்றார்கள். சென்னையின் அருகேயுள்ள பிரம்பூரிலே வாழ்ந்த ஆனந்தரங்கரின் தந்தையார்

'புதுச்சேரி சென்றால் புதுவாழ்வு பெறலாம்,' என்று எண்ணிக் குடும்பத்தோடு அங்கே சென்று சேர்ந்தார். அவருடைய மைந்தராகிய ஆனந்தரங்கர் முதன்முதல் புதுச்சேரியில் ஒரு சிறு பாக்குக் கடை வைத்தார். அது நாளுக்கு நாள் வளர்ந்தது. வேறு பல பொருள்களிலும் அவர் வியாபாரம் செய்தார்; பேரும் சீரும் பெற்றார்;

*" ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா*
*ஊக்க முடையா னுழை,"*

என்னும் திருக்குறளுக்கு இணங்க, செல்வமும் சிறப்பும் எய்தித் தமிழர் இனத்திற்கு அழியாத பெருமை அளித்தார்.

## வானொலிப் பேச்சு—3

ஆனந்தரங்கரது நாட்குறிப்பு எழுதப்பட்ட காலத்தில் தமிழ் நாட்டின் அரசியல் மிகவும் குழப்ப மான நிலையில் இருந்தது. மகம்மதியரும் மராட் டியரும், ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் அரசியல் அரங்கத்திலே ஆரவார நடனம் ஆடிக்கொண்டிருந் தனர். சோழ மண்டலக் கரையில் ஆங்கிலேய வர்த் தகக் கம்பெனிக்கு ஒரு துறைமுக நகரமும் பிரெஞ்சு வர்த்தகக் கம்பெனிக்கு ஒரு துறைமுக நகரமும் அமைந்திருந்தன. சென்ன பட்டினம் ஆங்கிலேயரது நகரம். புதுச்சேரி பிரெஞ் சுக்காரரது நகரம். வர்த்தகம் செய்ய வந்த ஆங்கிலே யரும் பிரெஞ்சுக்காரரும், மெல்ல மெல்ல அரசியல் துறைகளில் தலையிட்டனர். ஐரோப்பாவில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் போர் மூளுமாயின்

அதன் எதிரொலி போன்று இந்நாட்டிலுள்ள ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் இடையே போர் தொடங்கும். இவற்றைப் பற்றிய விவரங்களை ஆனந்தரங்கரது நாட்குறிப்பிலே காணலாம்.

தமிழ் நாட்டிற்கு வெளியே நிகழ்ந்த செயல்களும் அவருடைய நாட்குறிப்பிலே காணப்படும். மொகலாய சக்கரவர்த்தியின் ஆட்சியிலமைந்த தில்லி மாநகரத்தை நாதர்ஷா என்பவன் சூறையாடிய செய்தி விவரமாகக் கூறப்பட்டுள்ளது. சென்னபட்டினத்தைப் பிரெஞ்சுப்படை கடல் வழியாகத் தாக்கிக் கைப்பற்றிய நிகழ்ச்சியும் சென்னையை அடுத்துள்ள அடையாற்றங்கரையிலே பிரெஞ்சுக்காரருக்கும் மகம்மதியருக்கும் நிகழ்ந்த போரும் நாட்குறிப்பில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

முதலில் தில்லி மாநகருக்கு நேர்ந்த தொல்லையைப் பார்ப்போம்: அந்த நகரில் முகம்மதுஷா என்பவர் மாநில மன்னராய் அரசாண்டுகொண்டிருந்தார். அப்போது பாரசீக நாட்டு அரசனாகிய நாதர்ஷா என்பவன் தில்லியின்மீது படையெடுத்தான். எல்லைப் புறத்திலுள்ள நாடுகளையும் பஞ்சாபு தேசத்தையும் கடந்து பாரசீகப் படை அடுப்பாரும் தடுப்பாருமின்றி, தில்லியின் அருகே வந்துவிட்டது. அப்பொழுதுதான் தில்லி மன்னரின் சேனை பகைவரை எதிர்த்துப் போர் செய்யப் புறப்பட்டது. இரு திறத்தாருக்கும் நிகழ்ந்த போரில் தில்லிச் சேனை சின்னபின்னப்பட்டுத் தோல்வியடைந்தது. வெற்றி வீரனாகிய நாதர்ஷா தில்லி மாநகரினுள்ளே புகுந்தான். பண வெறி கொண்ட பாரசீகப் போர்

வீரர்கள் அந்நகரத்தைச் சுற்றித் திரிந்து சூறையாடினார்கள். அரண்மனையில் இருந்த விலையுயர்ந்த அணிகலன்கள் எல்லாம் நாதரிடம் அகப்பட்டுக்கொண்டன. உலகம் புகழும் கோகினூர் என்னும் ஒப்புயர்வற்ற இரத்தினத்தையும் நாதர்ஷா கைப்பற்றிக்கொண்டான்; அழகான மயில் இருக்கையையும் அபகரித்துக் கொண்டான்; மேலும் பதினைந்து கோடி ரூபாய் பெறத்தக்க பொன்னும் பொருளும் கவர்ந்து கொண்டான்; இவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு பாரசீக நாட்டுக்குச் சென்றான்.

அவன் படையெடுப்பால் தில்லி மாநகரம் பாழடைந்தது; மன்னவன் மதிப்பிழந்தான். அக்பரும் ஔரங்கசீபும் அரசு வீற்றிருந்த அணி நகரம் அலங்கோலமாயிற்று. இந்த நிகழ்ச்சி ஆனந்தரங்கரது நாட்குறிப்பிலே குறிக்கப்பட்டிருக்கிறது. "நாதர்ஷாவின் படையெடுப்பால் டெல்லி நகரத்திலே பல வர்த்தகர்கள் கெட்டுப் போனார்கள். பலர் வெட்டுப் பட்டார்கள். சுமார் ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் பேர் சேதமடைந்தார்கள்," என்று எழுதியுள்ளார் ஆனந்தரங்கர்.

புதுச்சேரியில் கவர்னராயிருந்த டூப்ளே என்பவர் சாலச் சிறந்த புத்திமான்; மதி நுட்பத்திலும் மனத்திட்பத்திலும் அவர் நிகரற்றவர் என்பது ஆனந்தரங்கர் கருத்து. டூப்ளே துரையின் அந்தரங்க எண்ணங்களை அறிந்துகொள்ளும் நோக்கத்தோடு வந்த நண்பன் ஒருவனிடம் அவர் சொல்லிய செய்தி இதற்கொரு சான்றாகும்.

''டூப்ளே துரையின் ஆட்சி நடைபெறுகின்ற இந்த நாட்டிலே என்ன நடக்கப் போகிறதென்பது அவரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அவர் மனத்திலுள்ள எண்ணம் அவர் எழுதும் பேனாவிற்கும் காகிதத்திற்கும் தெரியுமே தவிர, வேறு யாருக்கும் தெரியாது. கப்பல் படைகளுக்கெல்லாம் இப்போது தலைவனாக வந்துள்ள 'லபோர்டினே, என்பவன் இடத்திலும் சொல்லத்தக்க செய்தியைத்தான் அவர் சொல்லுவார். இனிமேல் நடக்க வேண்டியதை அவரும் அறியார். கவர்னர் துரை மனத்தில் உள்ள கருத்தை அவர் போட்டுக்கொண்டிருக்கும் தொப்பி அறிந்துவிட்டால் அதை நூறு துணுக்காகக் கிழித்துப் போடுவார். அப்படியிருக்க, நீர் கேட்கும் செய்தி இங்கே யாருக்குத் தெரியப்போகிறது?'' என்பது நாட்குறிப்பிலே கண்ட செய்தி.

சென்னபட்டினத்தைத் தாக்கிய பிரெஞ்சுக் கப்பற்படை வெற்றி பெற்றதென்றும், ஆங்கிலேயர் கோட்டையைக் கைவிட்டார்கள் என்றும் புதுச்சேரிக்குச் செய்தி கிடைத்தது. உடனே கவர்னர் ஆனந்தரங்கரை அழைத்து ஆர்வத்தோடு அவரிடம் அச்செய்தியை அறிவித்தார். அப்போது டூப்ளே துரையின் யோகத்தையும் கீர்த்தியையும் குறித்து ஆனந்தரங்கர் சொல்லிய சொற்கள் நாட்குறிப்பிலே எழுதப்பட்டிருக்கின்றன. அவர் டூப்ளேயைப் பார்த்து, ''உம்முடைய யோகம் வலுத்த யோகம்; மகத்தாகிய கீர்த்தி உமக்கு வருகிறது. அதனாலேதான் சென்னபட்டினத்தில் நிகழ்ந்த சண்டையிலே படைச்சேதமின்றி எளிதாகக் கோட்டை நம் கைவச

மாயிற்று. உமக்குச் சமமான பேர்கள் இந்த உலகத்திலே இல்லை. உம்முடைய புத்தியும் தைரியமும் மருமமும் தந்திரமும் ஒருவருக்கும் வாராது என்று இப்போது எல்லாரும் பேசுகிறார்கள். இனிமேல் இவற்றைப் பாட்டாகப் பாடப் போகிறார்கள். உம்முடைய புகழ் இந்திய நாட்டிலும் ஐரோப்பிய நாட்டிலும் பரவப் போகிறது. கடவுள் கிருபை உமக்குப் பூர்ணமாக இருக்கிறது," என்று வாயாரப் புகழ்ந்திருக்கின்றார்.

இத்தகைய புகழுரைக்குக் காரணமாகிய வெற்றி 1746-ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதம், பத்தாம் தேதி கிடைத்தது. ஆங்கிலேயருக்குரிய சென்னபட்டினத்தைப் பிரெஞ்சுக் கப்பற்படைத் தலைவனாகிய லபோர்டினே என்பவன் தாக்கினான்; சென்னைக் கோட்டையைக் கைப்பற்றினான்; அங்கே பிரெஞ்சுக் கொடியை நாட்டினான். அச்செய்தியை அறிந்தபோது டூப்ளே துரை அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. அதைப்பற்றி நாட்குறிப்புக் கூறுவதாவது: "வெற்றிச் செய்தி கிட்டிய உடனே கோட்டையிலும் கோவில்களிலும் தொடர்ந்து மணியடித்தார்கள். கவர்னர் டூப்ளே, தொப்பியைக் கழற்றிக் கையிலே பிடித்துக்கொண்டு, வீவல்ருவா (அரசர் நீடூழி வாழ்க) என்று இரைந்து கூவினார். உடனே கோட்டையில் இருந்த வெள்ளைக்காரர்கள் எல்லோரும் ஒருமித்து வீவல்ருவா என்று கத்தினார்கள். அவர்கள் போட்ட சத்தத்தில் கோட்டையே இடிந்துவிடும்போல் இருந்தது. புதுச்சேரியிலேயுள்ள சகலமானபேர் வீட்டுக்கும் சர்க்கரை வழங்கப்பட்டது. எல்லார் வீட்டிலும் விளக்கு

வைக்கச் சொல்லி உத்தரவு பிறந்தது. அளவிறந்த மகிழ்ச்சியோடிருந்த கவர்னர் துரை ஆனந்த ரங்கரை நோக்கி, "உமக்கு என்னவேண்டும்? கேளும்; நல்ல மனசுடனே உத்தரவு தருகிறோம்," என்றார். அது கேட்ட ஆனந்தரங்கர், "சிறைச்சாலையில் வாடி வருந்துகின்ற எல்லோரையும் விட்டுவிட வேண்டும்," என்று விண்ணப்பித்தார். உடனே விடுதலை உத்தரவு பிறந்தது.

அந்த வேளையில் கம்பெனி வர்த்தகக்காரரும் மகாநாட்டாரும் திரண்டு வந்து தமது மகிழ்ச்சியைத் தெரிவித்துவிட்டு, நெடுங்காலமாகத் தாம் விண்ணப்பம் செய்து வந்த வேதபுரீஸ்வரர் கோவில் மதிற்சுவர் கட்டுவதற்கு உத்தரவு கேட்டார்கள். அவர்கள் செய்த விண்ணப்பத்தை ஆதரித்தார் ஆனந்தரங்கர்; "சகல ஜனங்களும் சந்தோஷமடையும்பொருட்டு இன்று பல காரியங்களுக்கு உத்தரவு கொடுத்திருக்கிறீர்கள். புதுச்சேரிப் பட்டணத்திலேயுள்ள ஜனங்கள் எல்லோரும் தங்களைப் புகழ்ந்து வாழ்த்துகிறார்கள். இப்படிப்பட்ட வேளையிலே இந்தக் கோவில் மதிலைக் கட்டுவதற்கும் கட்டளையிட்டால் இன்னும் உங்கள் கீர்த்தி அதிகரிக்கும்," என்று கூறினார். அது கேட்டு மனமகிழ்ந்து, 'நல்லது; அப்படியே உத்தரவு கொடுக்கிறோம்,' என்றார் கவர்னர் துரை. இந்துக்கள் எல்லோரும் மனமகிழ்ந்தார்கள்."

சென்ன பட்டினம் பிடிபட்ட போது லபோர்டினே என்பவன் கைப்பற்றிய பணத்தைப் பற்றிப் பலர் பலவாறு பேசிக்கொண்டனர். இதைக் குறித்து ஆனந்தரங்கர் எழுதிய குறிப்பு அறியத்

தக்கதாகும்: "அவன் எவ்வளவு சுற்றிக்கொண்டான் என்பது கடவுளுக்குத் தெரியும். இருபது லக்ஷம் வராகன் என்பார் சிலர்; அறுபது லக்ஷம் வராகன் என்பார் வேறு சிலர்; இந்த இந்திய ராஜ்யத் துக்குள்ளே சென்ன பட்டணத்துக்குச் சமமான பட்டணம் இல்லை. அது சுவர்ண பட்டணம் என்றும், குபேர பட்டணம் என்றும் சொல்லத் தக்கதாய் இருக்கிறது. இப்படிப்பட்ட பட்டணத்தை மனம் போனபடி கொள்ளையிட்டபடியால் லபோர்டினே, கோடி பொருள் சுருட்டிக்கொண்டான் என்று சொன்னாலும் தப்பில்லை. சோறு சமைத்தவன் சாப் பிடப்போகும் வேளையிலே மற்றொருவன் அதைத் தட்டிப் பிடுங்கிச் சாப்பிட்ட கதையாயிருக்கிறது இது. பிரயாசைப் பட்டவர் டூப்ளே; பயனடைந்தவன் லபோர்டினே. இதனால் டூப்ளேக்கு எவ்வளவு வருத்தமிருக்கும்? ஒருவன் வாழ்நாளிலே இப்படிப் பட்ட வாழ்வு கிடைக்குமா? பாக்கிய தசையில்லாத படியால் பாடுபட்டும் பலன் கிட்டவில்லை" என்று ஒரு நாட்குறிப்புக் கூறுகிறது.

சென்ன பட்டினத்தில் லபோர்டினே எவ்வளவு பணம் அடித்திருப்பான் என்பதைப் பற்றி ஒருநாள் ஆனந்தரங்கரிடம் அந்தரங்கமாய்க் கேட் டார் டூப்ளே. 'பத்து லட்சம் வராகன் அகப்பட்டதாகத் தெரிகிறது' என்றார் ஆனந்தரங்கர். உடனே கவர்ன ருக்கு வயிற்றெரிச்சல் உண்டாயிற்று. அவர் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "அவனுக்கு மூன்று லட்சந்தான் கிடைத்திருக்கும்!" என்று சொன்னார். அப்போது ஆனந்தரங்கர், "என்னை மன்னிக்க

வேணும்!அவனுடைய வேலையாட்களில் ஒருவனுக்கே ஐம்பதினுயிரம் வராகன் கிடைத்ததென்ருல், தலைவனுக்கு எவ்வளவோ! பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கூறினர். அதுகேட்ட டூப்ளே,"அப்படியானல் நீர் சொன்னது உண்மைதான்," என்று ஒத்துக் கொண்டார்.

ஆங்கிலேயரிடமிருந்து சென்னையைக் கைப் பற்றிய பின்பு மகம்மதியரோடு அரசியல் சதுரங்கம் ஆடத் தொடங்கினர் டூப்ளே துரை; ஆனல், அதை வெகு அந்தரங்கமாக நடத்தினர். ஆயினும், ஆனந்தரங்கரிடம் அவர் அடிக்கடி ஆலோசனை செய்வதுண்டு. அப்படிப்பட்ட அரசியல் நிகழ்ச்சிகளைத் தெரிந்துகொள்வதில் கவர்னரின் மனைவியாகிய மேடம் டூப்ளேக்கு ஆவல் அதிகம். அவற்றைப் பொருள் வகையில் பயன் படுத்திக்கொள்ளலாம் என்பது அந்த மேடத்தின் கருத்து. அரசியல் நிகழ்ச்சிகளைக் குறித்து அந்த அம்மாள் கேட்கும் போதெல்லாம் மழுப்பி மறுமொழி சொல்வது ஆனந்தரங்கரின் வழக்கம். அதை அறிந்த மேடத்திற்குப் பொல்லாத கோபம் வந்தது. எப்படியாயினும் கோளும் குசும்பும் சொல்லி அவருடைய செல்வாக்கை அழித்துவிடத் தீர்மானித்தாள்.

இதை அறிந்த ஆனந்தரங்கர், "நம்முடைய கவர்னருக்கு நிலையான கீர்த்தி உண்டாக வேண்டுமென்று நான் கடவுளுக்குப் பொதுவாய் நடந்து வருகிறேன். அவர் மனைவியாகிய மேடம் என்னைப் பற்றி என்ன சொன்னல்தான் என்ன ? மடியிலே கனம் இருந்தால் அல்லவோ வழியிலே பயம்....? ஒரு மாதத்திற்கு

முன்னே இந்த மேடம் மகம்மதியருடன் என்ன நடக்கிறதோ அதையெல்லாம் அடிக்கடி வந்து தன்னிடம் சொல்லும்படி சொன்னாள். ஆனால் கவர்னர் துரை அந்தப் பேச்சுக்களை ஒருத்தரோடும் சொல்லக்கூடாதென்று சொல்லியிருக்கிறார். அந்தரங்கமான எந்தப் பேச்சையும் நான் வெளியிலே சொல்லாதவன் என்று நம்பித்தானே அவர் தாராளமாக என்னுடன் பேசுகிறார்? அப்படியிருக்க, நான் அதை வெளியே சொன்னால் அது நம்பிக்கைத் துரோகம் ஆகாதா? நான் அவற்றைச் சொல்லவில்லை என்பது குறித்து மேடத்திற்கு என்மேல் மிக வருத்தம். இதை மனத்திலே வைத்துக்கொண்டு இல்லாததும் பொல்லாததும் துரைக்குச் சொல்லுவாள். ஏதேனும் புனைசுருட்டு முடைவாள். அவள் சொல்லுவதைத் துரை கேட்கமாட்டாரென்பது அவளுக்கே தெரியும். அதற்காகப் பக்கத்திலேயுள்ள வெள்ளைக்காரரைக் கொண்டு கோள் மூட்டி எனக்குத் தொல்லை விளைவிப்பாள். என்ன வந்தாலும் வரட்டும், சுவாமி இருக்கிறார். அந்த அம்மாள் மனத்தில் ஒரு எண்ணம் இருக்கிறது. 'சென்ன பட்டணம் - குபேரபட்டணம் - கொள்ளை போயிற்று. வந்தவன் போனவன் எல்லாம் பதினாயிரம், இருபதினாயிரம், லட்சம், இரண்டு லட்சம் சம்பாதித்தார்கள். நமக்கு ஒன்றும் இல்லையே' என்று இரவும் பகலும் எண்ணி எண்ணி ஏக்கமடைகிறாள் அந்த மேடம்," என்று ஒரு நாட்குறிப்பிலே கூறுகின்றார்.

குபேர பட்டணம் என்று அடிக்கடி புகழப்பட்டுள்ள சென்ன பட்டினம் பிரெஞ்சுக்காரரிடம்

அகப்பட்ட பொழுது ஆர்க்காட்டு நவாபு ஆகிய அன்வாருதீனுக்கு மனவருத்தம்உண்டாயிற்று. அவர் அந்த நகரம் தமக்குரியது என்று சொல்லிப் போர் புரிய எழுந்தார். நவாபுவின் மகனுகிய மாவுஸ்கான் தலைமையில் திரண்டு எழுந்த மகம்மதிய சேனைக்கும் புதுச்சேரியிலிருந்து போந்த பிரெஞ்சுப் பட்டாளத்திற்கும் அடையாற்றங்கரையில் போர் நடந்தது. மகம்மதியர்படை பெரிது. பிரெஞ்சுப்படை சிறிது. ஆயினும் எளிதாகப் பிரெஞ்சுப் படை வெற்றி பெற்றது. அவ்வெற்றிக்குக் காரணம் பிரெஞ்சுப் பட்டாளத்தின் படைத் திறமையும் கட்டுப்பாடுமேயாகும். தோல்வியுற்ற மாவுஸ்கான் ஒரு யானையின்மீது ஏறி உயிர் தப்பி ஓடினுன். இந்தப் போர் இந்திய வரலாற்றிலே இடம் பெற்றுவிட்டது. ஏனென்ருல், அதுவரை மகம்மதியரை வெல்ல முடியாது என்ற எண்ணம் எல்லோர் மனத்திலும் பொதுவாக இருந்தது. அந்தக் கொள்கை அடையாற்றுப் போரில் அடியோடு ஒழிந்துபோயிற்று. இது முதல் வெள்ளைக்காரர்கள் ஏற்றமுறத் தொடங்கினுர்கள். மூன்று ஆண்டுகள் சென்னையைத் தம் வசம் வைத்திருந்த பிரெஞ்சுக்காரர் ஐரோப்பாவில் நடந்த சமாதான உடன்படிக்கையின் படி அந்நகரத்தை மீண்டும் ஆங்கிலேயரிடம் ஒப்புவித்தனர். அதற்குப் பின்பு ஆங்கிலக் கப்பற்படை சிறந்து வளர்ந்தது. பிரெஞ்சு ஆதிக்கம் தளர்ந்தது. ஆங்கில ஆட்சி இந்நாட்டில் நிலைபெறுவதாயிற்று.

இந்த அரசியல் முறையையெல்லாம் நன்ருக எடுத்துக்கூறுவது ஆனந்தரங்கரது நாட்குறிப்பாகும்.

# திருச்செந்தூர்

நெல்லை நாட்டிலுள்ள தொன்மை வாய்ந்த தலங்களுள் ஒன்று திருச்செந்தூர். அவ்வூர் கடற் கரையில் அமைந்திருத்தலால், 'நெல்லை நாட்டு நெய்தற்பதி' எனத்தகும். அப்பதியின் தொன்மை,

"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்"

என்ற சிலப்பதிகாரப் பாட்டால் இனிது விளங்கும். முற்காலத்தில் செந்தில் என்று வழங்கிய பதியே பிற் காலத்தில் திருச்செந்தூர் ஆயிற்று.

திருச்செந்தூரில் முருகப் பெருமான் கோயில் கொண்டுள்ளார். அப்பெருமான் அருள் பெற்ற தமிழ்ப் புலவர் பலராவர். அன்னவருள் தலை சிறந்தவர் நக்கீரர் என்பர். இப்புலவர் முருகனைக் குறித்துப் பாடிய பெருமை சான்ற பாட்டுத் திருமுரு காற்றுப்படை எனப்படும். பத்துப்பாட்டு என்னும் பழந்தொகை நூலில் முதற்பாட்டாய் அமைந்தது முருகாற்றுப்படையே. முருகனுக்குரிய ஆறு படை வீடுகளின் பெருமையும் முறையாக அப்பாட்டில் அமைந்திருக்கின்றது. ஆறு படை வீடுகளுள் ஒன் றாகிய திருச்செந்தூரை "உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்" என்று திருமுருகாற்றுப்படை புகழ்ந்து போற்றுகின்றது. "கத்தும் தரங்கம் எடுத் தெறியும் கருங்கடலின்" அருகே செந்திலாண்டவன் கோவில் சிறந்திருத்தலால், 'அலைவாய்' என்னும் பெயர் அதற்கு அமைவதாயிற்று. எத்திசையும் புகழ்

மணக்க இனிதிருந்த அப்பதியை 'ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்' என்று நக்கீரர் நாவாரப் புகழ்ந்துரைத் தார். இப்புலவர் பெருமான் திருச்செந்தூர் முருகனிடம் பெரிதும் ஈடுபட்டவர் என்பது,

*"முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்."

என்று இவர் அருளிய பாட்டாலும் அறியப்படும். இத்தகைய நக்கீர தேவர்க்கு அலைவாயில் ஒரு கோயில் இருந்ததாகக் கல்வெட்டு அறிவிக்கின்றது.

திருச்செந்தூரில் முருகன் கண் கண்ட தெய்வ மாய் அமர்ந்து அருள் புரிகின்றான் என்று மெய்யன் பர்கள் கருதுகின்றார்கள். ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு திருச்செந்தூருக்கு இருபது கல் தூரத்திலுள்ள ஸ்ரீவைகுண்டத்தில் சண்முக சிகாமணிக் கவிராயர் என்ற சைவ சீலர் ஒருவர் இருந் தார். அவருடைய அருமைப் பிள்ளை ஐந்து வயதள வும் வாய் திறந்து பேச வகையறியாதிருந்தது. திருச் செந்தில் ஆண்டவர்க்கு வழிவழி அடிமையாகிய கவி ராயர், குழந்தையோடு அப்பெருமான் கோவிலிற் போந்து நோன்பு செய்தார். விரதம் முடிந்தது; வரதரும் வாய் திறந்து பாடலுற்றார். இவ்வாறு முருகன் அருளால் வாக்குப்பெற்றவரே குமர குருபர அடிகள். இவர் பாடிய 'கந்தர் கலிவெண்பா'வை ஓதிக் கலி தீர்ந்தார் எண்ணிறந்தவர் என்பர்.

* இது நக்கீரர் பாட்டன்று என்பாரும் உளர்.

இன்னும், *சேது நாட்டிலுள்ள சன்னசி கிராமத்தில் வாழ்ந்த திருமாலடியார் ஒருவர்க்கு மைந்தராய்ப் தோன்றிய பகழிக்கூத்தர் வயிற்று நோயுற்று வாடி வருந்தினர். குடரோடு துடக்கி முடக்கிய கொடு நோய் மருத்துவர் அருத்திய மருந்தினுல் தீராமையால், கூத்தர் செந்திலம்பதியை அடைந்து, கந்தவேளைக் கண் குளிரக் கண்டு, மனங்குளிரப் பாடினர்; அந்நிலையில் சூலைநோய் நீங்கிச் சுகமுற்ருர். பகழிக் கூத்தர் பாடிய திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் அமைந்த,

"பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறும் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமான் என்னும் பேராளா!"

என்ற பாட்டு இசைத் தட்டில் ஏறித் தமிழ்நாடெங்கும் இன்பம் பயக்கின்றது. கூத்தரது பிள்ளைத்தமிழ் செந்தில் முருகன் முன்னே அரங்கேற்றப்பட்டதென்பர்.

கடற்கரைக் கோவிலில் முருகவேள் ஆறு முகங்களோடு விளங்குகின்ருர். பொன் போல இலங்கும் அவ்வடிவத்தைச் சில நூற்ருண்டுகட்கு முன்பு கடலாடிகள் கவர்ந்து படகிலேற்றிச் சென்ருர்கள். ஆண்டவன் உருவத்தைக் காணுத அடியார் ஆருத் துயருற்ருர். கவலையுற்ற அன்பர் மனங்களிக்க அறுமுகப் பெருமான் சைவ சமய சீலராய் விளங்கிய வடமலையப்ப பிள்ளையினுள்ளத்தில் தம் இருப்பிடத்தை உணர்த்தினர். 'காட்டுவித்தால் யாரொருவர் காணு

* சேதுநாடு என்பது இராமநாதபுர மாவட்டம்.

தாரே' என்றபடி கருங்கடலில் கள்வர் கைவிட்டுச் சென்ற பெருமானைச் சில அடையாளங்களாற் கண்டு பிள்ளையனும் பிறரும் ஆர்வத்தோடு எடுத்துக் கரை சேர்த்தார்கள். அப்பொழுது பாவலர் பாட்டிசைத்தார் கள். அடியவர் ஆரவாரித்தார்கள். அன்று வென்றி மாலைக் கவிராயர் பாடிய கண்ணிகள் இன்றும் திருச் செந்தூர்த் திருவிழாவில் பாடப்படுகின்றன.

" ஓராறு சென்னியும் சண்முகச் சேவையும்
ஒண்பொற் குழைக்காதும்
போரேறு வேலேந்து செங்கையும் கண்டன்பர்
போற்று முருகரே! மாமால் மருகரே!
காரேறு தண்டலை சூழும் செழுந்தமிழ்க்
காவை வடமலை யப்பன் தொழுதிட
-இப்போது தேவரீர் எழுந்தருளின
தெல்லோர்க்கும் நல்ல காலம்-"

என்னும் கண்ணிகள் மேற்குறித்த செய்தியை உணர்த்துகின்றன.

இங்ஙனம் கருங்கடலினின்று அறுமுகச் செவ் வேளைக் கரையேற்றிப் புகழ் பெற்ற வடமலையப்ப பிள்ளையன் கார்காத்த வேளாள மரபினர்; பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தவர்; மதுரை மாநகரில் நாயக்க மன்னர் அரசு செலுத்திய காலத்தில் அவர் ஆணையால் தென்பாண்டி நாட்டில் ஏற்றமும் தோற்ற மும் பெற்றிருந்தவர்; சைவம் வைணவம் ஆகிய இரு சமயங்களையும் நன்கு ஆதரித்தவர்.

" செஞ்சிக்கும் கூடலுக்கும் தஞ்சைக்கும் ஆணை
செல்லும்
செங்கோல் வடமலேந்த்ரன் எங்கள் ஊரே"

என்று முக்கூடற்பள்ளு நாடகத்தில் புகழ்ப்பெற்றவர் இவரே.

இவ்வடமலையார் திருச்செந்தூருக்கு ஒருமுறை சென்றிருந்த போது கோயிற்குருக்கள் தட்டுமாலை யோடு போந்து வரவேற்றார்; தட்டில் இருந்த கட்டி யாரத்தை அவர் கழுத்தில் அணிந்தார். பூமாலையைப் பிள்ளையன் கழற்றியபொழுது, முருகன் திருமேனியில் அணிந்திருந்த பொற்பதக்கமும் அதனோடு சேர்ந் திருக்கக் கண்டார்; அளவிறந்த வருத்தமுற்றார்; அறியாமல் நேர்ந்த பிழையை எண்ணிக் குருக்களும் குறுகி நின்றார். பிள்ளையன் ஆகம நூலோர் கருத் தறிந்து மறுநாள் முருகப் பெருமானுக்கு முழுக் காப்பிட்டு, திருவாபரணம் தம் கழுத்தில் விழுந்ததற் குக் கழுவாயாகச் செந்தில் மாநகரின் அருகேயுள்ள ஒரு சிற்றூரிலுள்ள சிறந்த நிலங்களை அப்பெருமா னுக்கு அர்ப்பணஞ் செய்தார். அன்று முதல் அவ்வூர் பதக்கம் என்று பெயர் பெற்றது. வடமலையாரும் அவர் வழித்தோன்றிய பெரியாரும் நியமித்த கட்டளை களும் சிறப்புக்களும் திருச்செந்தூரில் இன்றும் நடை பெறுகின்றன.

# கலை மாட்சி

## மதுரை மாநகரம்

முத்தும் முத்தமிழும் பாண்டி நாட்டுச் சிறந்த செல்வங்களாகும். பாண்டியனுக்குரிய பொருனை யென்னும் தாமிரபரணி ஆற்றுத்துறையிலே முத்துப் பிறக்கும்; வைகை யாற்றின் கரையிலே முத்தமிழ் சிறக்கும் என்று தமிழ்க் கவிஞர் கூறுவர். பாண்டி நாட்டின் தலைநகரமாகிய மதுரை தொன்றுதொட்டு வைகை யாற்றின் கரையிலே வீற்றிருக்கின்றது. அந்நகரிலே தமிழ்ச் சங்கம் நிறுவி முத்தமிழையும் பாண்டிய மன்னர் முறையாகப் பேணி வளர்த்தனர்; தமிழ்ச் சங்கத்தை நாடி வந்த பிற நாட்டுத் தமிழ் அறிஞர்க்கு வரிசையறிந்து பரிசளித்தனர். அதனால் பாண்டி நாட்டில் நல்ல தமிழ் பரவிற்று.

நாடு பல கண்ட நல்லிசைப் புலவராகிய ஔவை யார், ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு சிறப்புக் கூறிப் போந்தார்: தமிழ்நாட்டு மூவேந்தருள் சேரன் ஆண்ட நாடு குறிஞ்சி வளம் உடையது என்று கூறினர்; சோழன் ஆட்சியில் அமைந்த வளநாடு மருத வளம் உடையதென்று புகழ்ந்தார்; பாண்டியனுக்குரிய தென்னாடு "நல்ல தமிழ் உடைத்து" என்று நாவாரப் போற்றினர்; பாண்டிய மன்னனைப் பார்த்து, "சோமன் வழிவந்த பாண்டியா, நின்னாடு உடைத்து நல்ல தமிழ்," என்று மனங்குளிர்ந்து பாடினர்.

பாண்டி நாட்டை ஆண்ட மன்னருள் பலர் சிறந்த புலவர்களாயும் கவிஞர்களாயும் விளங்கினர்கள். 'ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்' என்று பழந்தமிழ் நூல்களில் பாராட்டப்படுகின்ற பாண்டி மன்னன் புவிச் செல்வத்தோடு கவிச் செல்வமும் பெற்று விளங்கினன். மக்களாய்ப் பிறந்தோரெல்லாம் கல்வி கற்றல் வேண்டும் என்றும், அறிவுடை ஒருவனை அரசனும் விரும்புவான் என்றும் எல்லோரும் அறியும் வண்ணம் அம்மன்னன் பாடிய பாட்டுப் புறநானூற்றிலே காணப்படுகின்றது.

*"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;*
*ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்*
*மூத்தோன் வருக என்னது, அவருள்*
*அறிவுடை யோனு றரசும் செல்லும்."*

என்ற பாட்டில் கல்வி கற்கும் முறையும் கற்றறிந்தோர் எய்தும் சிறப்பும் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. இப்பாட்டியற்றிய பாண்டியன் நெடுஞ்செழியன் திருக்குறளை நன்றாக ஓதி உணர்ந்திருந்தான் என்பதும் இனிது விளங்குகின்றது.

*"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்*
*கடையரே கல்லா தவர்."*

என்ற திருக்குறளின் கருத்தைப் பொன் போலப் போற்றிப் பாடியுள்ளான் அப்பாண்டியன். இத்தகைய தமிழார்வம் படைத்த மன்னர்கள் அரசு வீற்றிருந்த மதுரை மாநகரில் தமிழ் மணம் கமழ்ந்துகொண்டே இருந்தது. காவியங்களும் கவிதைகளும் தமிழ்ச்சங்கத்தில் வந்து குவிந்த வண்ணமாய் இருந்தன, பல

தொழில்களில் ஈடுபட்ட அறிஞர் தமிழ்ப்பாட்டிசைத்தார்கள். அவர்களுள் ஒருவர் மதுரையில் கூலவாணிகம் செய்து வந்த சாத்தனார் ஆவர். 'கூலம்' என்பது நெல்லு முதலிய பதினெட்டு வகையான உணவுப் பொருள்களின் பொதுப் பெயராகும். கூலக் கடை வைத்து வாணிகம் செய்த சாத்தனார், 'கூல வாணிகன் சாத்தனார்' என்னும் பெயர் பெற்றார். இவரே மணிமேகலையென்ற சிறந்த காவியம் இயற்றியவர். சிலப்பதிகாரம் செய்த இளங்கோ அடிகளும் மணிமேகலை இயற்றிய சாத்தனாரும் உயரிய நண்பராய் இருந்தனர். இவ்விருவரும் ஒரு நாட்டவர் அல்லர்; ஒரு குலத்தவர் அல்லர்; ஒரு மதத்தினர் அல்லர். சேரநாட்டைச் சேர்ந்தவர் இளங்கோ. பாண்டி நாட்டைச் சேர்ந்தவர் சாத்தனார். இளங்கோ, அரசர் குலத்திற் பிறந்தவர்; சாத்தனார், வணிகர் குலத்தவர். இளங்கோ, சமண சமயத்தைச் சார்ந்தவர்; சாத்தனார், புத்த சமயத்தைத் தழுவியவர். இவ்வாறு நாட்டாலும் குலத்தாலும் மதத்தாலும் வேறுபட்டிருந்த பெருங்கவிஞர் இருவரும் தமிழ் உணர்ச்சி ஒன்றாலேயே தலை சிறந்த நண்பராய்த் திகழ்ந்தனர்.

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்."

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு இளங்கோவடிகளும் சாத்தனாரும் ஓர் எடுத்துக்காட்டாய் வாழ்ந்தார்கள். கண்ணகியின் சீற்றத்தால் மன்னனும் மதுரையும் அழியக் கண்டு மன அதிர்ச்சியுற்ற சாத்தனார், இளங்கோ அடிகளைக் காணச் சென்றார் என்றும், மதுரை மாநகரில் தாம் கண்ட துன்பக் காட்சியை

இளங்கோ அடிகளிடம் எடுத்துரைத்தார் என்றும், அந்நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு அடிகள் சிலப்பதிகாரம் செய்தார் என்றும் காவியம் கூறுகின்றது. இதனுல், சிலப்பதிகாரத்தை உருவாக்கிய பெருமையில் மதுரைச் சாத்தனுருக்கும் ஒரு பங்குண்டு என்பது தெளிவாகின்றது.

செந்தமிழ்க் காவியமாகிய சிலப்பதிகாரத்தில் பாண்டியர் குலக்கொடியாகிய வைகையாறு நிறைந்த மொழிகளால் புகழ் பெற்றுள்ளது.

*"உலகுபுரந்து ஊட்டும் உயர்பே ரொழுக்கத்துப்*
*புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி*
*வையை என்ற பொய்யாக் குலக்கொடி."*

என்று பாடினுர் இளங்கோவடிகள். தமிழகத்தில் வைகையாற்றைப் போலப் பாமாலை பெற்ற பெருமை வேறெந்த ஆற்றுக்கும் இல்லை என்றே சொல்லலாம். பரிபாடல் என்னும் பழந்தொகை நூலில் இருபத்தாறு இசைப்பாட்டு வைகையாற்றுக்கு உரியன என்பது தெரிகின்றது. இவ்வாறு காவியத்திலும் இசைப்பாட்டிலும் புகழ் பெற்ற வைகை ஆற்றின் கரையிலே நிகழ்ந்த திருவிளையாடல்கள் பலவாகும். அவற்றுள் ஆலவாய்ப் பெருமானுகிய ஈசன் பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல் இன்றும் மதுரை மாநகரில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. இது போன்ற அறுபத்து நான்கு திருவிளையாடல்களை விரித்துக் கூறுவது திருவிளையாடற்புராணம். பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற்புராணம் பத்திச் சுவை நிரம்பிய ஓர் இலக்கியமாகும். இங்ஙனம் தமிழ் இலக்கியத்தோடு

வைகையாற்றின் பெருமை இணைந்திருத்தலாலேயே தமிழகத்தின் நல்லணிகளாய்த்திகழும் நதிகளையெல்லாம் தொகுத்துப் பாடிய பாரதியார்,

*"காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்*
*கண்டதோர் வையை பொருனைநதி."*

என்று பாராட்டினார். இத்தகைய வைகை யாற்றின் பெருமையெல்லாம் தன் பெருமையாக்கிக் கொண்டது மதுரை மாநகரம். அம்மதுரை மாநகரின் பெருமையெல்லாம் தன் பெருமையாக்கிக்கொண் டான் பாண்டி மன்னன்.

மதுரை மன்னன் கற்றறிந்தோரைக் கண்ணெனக் கருதிப் பாதுகாப்பவன் என்ற செய்தி வடநாட்டிலும் பரவி இருந்தது. அந்நாட்டில் கடும்பஞ்சம் வந்துற்றபோது பல்லாயிரக்கணக்கான மக்கள் பாண்டி நாட்டைத் தஞ்சம் அடைந்தார்கள். அன்னார் சமண சமயத்தைச் சார்ந்தவராயினும், அவர்க்கு உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க இடமும் கொடுத்து ஆதரித்தான் பாண்டியன். தமிழ் நாட்டில் இனிது வாழவும் தமிழ் மன்னனது நன்மதிப்பைப் பெறவும் ஆசைப்பட்ட சமணர்கள், தமிழ் மொழியை ஓதி உணர்ந்தார்கள்; மதுரையைச் சூழ்ந்திருந்த எட்டு மலைகளைத் தங்கள் இருப்பிடமாகக் கொண்டு கவலையின்றி வாழ்ந்தார்கள். அவ்வெட்டு மலைகளின் பெயரும் ஒரு பழம்பாட்டில் குறிக்கப்பட்டுள்ளன.

*' பரங்குன்று உருவகம் பப்பாரம் பள்ளி*
*அருங்குன்றம் பேராந்தை யானை—இருங்குன்றம்*
*என்றெட்டு வெற்பும் எடுத்தியம்ப வல்லார்க்குச்*
*சென்றெட்டு மோபிறவித் தீங்கு ? '*

என்ற பாட்டில் கண்ட எட்டு மலைகளிலும் எண்ணா யிரம் சமண முனிவர்கள் இருந்ததாகத் தெரிகின்றது. இம்மலைகளுள் பரங்குன்றம் என்பது திருப்பரங் குன்றம். இருங்குன்றம் என்பது அழகர் மலை. யானை யென்பது யானை மலை. இம்மலைகளில் வாழ்ந்த சமண முனிவர்கள் ஆயிரக்கணக்கான தமிழ்ப் பாடல் களை இயற்றினர். அவற்றுள் தெரிந்தெடுத்த நானூறு நீதிச் செய்யுட்கள் நாலடியார் என்ற பெயரால் இன் றும் வழங்கி வருகின்றன. இரண்டடிகளையுடைய திருக்குறளும் நான்கடிகளையுடைய நாலடியாரும் நீதி நூல்களுள் தலை சிறந்தனவென்பது தமிழ் நாட் டார் கொள்கை. 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி; நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்னும் பழ மொழியே இதற்குச் சான்றாகும்.

ஏறக்குறைய ஆயிரத்து இருநூறு ஆண்டுகட்கு முன்னே மதுரையம்பதியில் சமண சமயத்திற்கும் சைவ சமயத்திற்கும் பெரும்போர் மூண்டது. அப்போது பாண்டி நாட்டை ஆண்ட மன்னவன் சமண சமயத்தைத் தழுவி நின்றான். மன்ன னைப் பின்பற்றி நாட்டு மக்களும் சமண சமயத்தை மேற்கொண்டார்கள். ஆயினும், பாண்டிமா தேவி யாராகிய மங்கையர்க்கரசியாரும் அமைச்சராகிய குலச்சிறையாரும் சைவ சமயத்தை அழுத்த மாகப் பற்றி நின்றார்கள். அவர்கள் வேண்டுகோட்கு இணங்கி, சைவ நெறித் தலைவராகிய திருஞான சம்பந்தர் மதுரை மாநகர்க்கு எழுந்தருளினர். யானை மலை முதலிய எட்டு மலைகளிலும் இருந்த சமண முனிவர்க்கும் திருஞான சம்பந்தர்க்கும் வாக்குவாதம்

மிகத் தாக்காக நடைபெற்றது. மன்னன் மாளிகையில் பல்லாயிரக் கணக்காகத் திரண்டு நின்ற சமண முனிவர்களின் எதிரே பச்சிளம்பாலராய் நின்ற திருஞான சம்பந்தரின் நிலை கண்டு பரிவு கொண்டார் மங்கையர்க்கரசியார்; ஞானத்தின் திருவுருவாகிய சம்பந்தரைச் சமண முனிவர்கள் அவமதிப்பார்களோ, துன்புறுத்துவார்களோ என்று அஞ்சினர். அதை அறிந்த ஞானசம்பந்தர் "அஞ்சேல்" என்று பாண்டிமாதேவியார்க்கு ஆறுதல் அளித்தார்; "ஆலவாயில் அமர்ந்தருளும் அரனர் அருளால் சமணரை வாதில் வெல்வேன்!" என்று கட்டுரைத்தார். மங்கையர்க்கரசியாரின் மனத்துயர் அகற்றுமாறு திருஞான சம்பந்தர் பாடிய திருப்பாட்டு, தேவாரத்தில் ஒரு தெள்ளிய மணியாய்த் திகழ்கின்றது.

'மானின் நேர்விழி மாதராய்வழு
திக்கு மாபெருந் தேவி கேள்:
பானல் வாய்உறு பாலன் ஈங்கிவன்
என்று நீபரி வெய்திடேல்;
ஆனை மாமலை யாதி யாயஇ
டங்க ளில்பல அல்லல்சேர்
ஈனர் கட்குளி யேன லேன்திரு
ஆல வாய்அரன் நிற்கவே,'

என்பது திருஞானசம்பந்தர் திருவாக்கு.

சமண முனிவர்களும் திருஞானசம்பந்தரும் வைகையாற்றிலே புனல் வாதம் புரிந்தார்கள். அந்த வாதத்தில் சமணர் தோற்றனர்; சைவ சமயத் தலைவர் வென்றார். பாண்டிய மன்னனும் சமண சமயத்தை விட்டு, சைவ சமயத்தைச் சேர்ந்தான். இவ்வாறு

மன்னன் மனத்தை மாற்றிய வைகைப் புனல் வாதத்தைப் பாட்டில் அமைத்துப் பாடிய கவிஞர் பலராவர். பாண்டி நாட்டுத் தமிழ்ப்பெருமையைப் பாடப்போந்த கவிஞர் ஒருவர்,

'பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே இருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த பேதை'

என்று போற்றிப் புகழ்ந்தார்.

பாண்டியர் பேணி வளர்த்த சங்கத்தின் பெருமை தமிழ் நாடெங்கும் பரவிற்று. சங்கத்தில் அரங்கேறிய நூல்கள் சாலச் சிறந்த நூல்கள் என்று தமிழ் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் தமது திருக்குறளை மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றினர் என்ற கதையொன்று தமிழ் நாட்டில் உண்டு.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் தலைவராய்த் திகழ்ந்தார் நக்கீரர் என்ற நற்றமிழ்ப் புலவர். அவர் கலை பயில் தெளிவும் கட்டுரை வன்மையும் வாய்ந்தவர். அவர் இயற்றிய திருமுருகாற்றுப்படை, பத்துப்பாட்டு என்னும் தொகை நூலில் முதற்பாட்டாய் இலங்குகின்றது. முருகப்பெருமான் கோயில் கொண்ட ஆறு படை வீடுகளின் பெருமையையும் அழகாகக் கூறுகின்ற அந்நூல், அருள் நூலாகவும் கருதப்படுகின்றது. நக்கீரர் ஒரு சிறந்த உரையாசிரியராயும் விளங்கினர். இறையனர் களவியல் என்னும் அகப்பொருள் நூலுக்கு அவர் எழுதிய உரை, சங்ககாலத்து உரை நடைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். பழைய இலக்கிய இலக்கணங்களுக்கு உரை

செய்த ஆசிரியர்களுள் ஒருவராகிய நச்சினூர்க்கினிய ரும் மதுரை மாநகரத்தைச் சேர்ந்தவர். ஐம்பெருங் காவியங்களுள் ஒன்ருகிய சிந்தாமணிக்கும் 'கற்றறிந் தோர் ஏத்தும் கலி' என்று புகழ் பெற்ற கலித் தொகைக்கும் பத்துப்பாட்டிற்கும் தொல்காப்பியத் திற்கும் சிறந்த உரை செய்த நச்சினூர்க்கினியரின் பெருமை தமிழ் உள்ளளவும் அழியாததாகும்.

ஆலவாய் என்னும் மதுரைக் கோவிலில் அரந்தை கெடுத்து வரந்தரும் தெய்வமாய் விளங்கும் மீனுட்சி அம்மையின்மீது முந்நூறு ஆண்டுகட்கு முன்பு ஒரு பிள்ளைத்தமிழ் பாடினூர் குமர குருபர முனிவர். தமிழ் மொழியில் உள்ள பிள்ளைத் தமிழ் நூல்களுள் அதுவே தலை சிறந்ததெனக் கருதப்படு கின்றது. குமர குருபர முனிவரது தமிழார்வம் மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழிலே பொங்கித் ததும்பு கின்றது.

*'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்*
*தொடையின் பயனே! நறைபழுத்த*
*துறைந்தீந் தமிழி னொழுகுநறுஞ்*
*சுவையே !'*

என்று மீனுட்சி அம்மையைத் தமிழ் வடிவாகவே கண்ட முனிவர்,

*"தமிழொடுபி றந்துபழ மதுரையில்வ ளர்ந்தகொடி*
*சப்பாணி கொட்டியருளே!"*

என்று பாடும் பிள்ளைத் தமிழ்ப் பாடல்கள் படிப் போர் உள்ளத்தை அள்ளுவனவாகும்.

# நான் கண்ட சோழவந்தான்

திருநெல்வேலி நகருக்கு அருகேயுள்ளது பாளையங் கோட்டை. அங்கேயுள்ள 'சைவ சபை'யின் வெள்ளி விழா, ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு மிகச் சிறப்பாக நடைபெற்றது. வெள்ளி விழாத் தலைவர் மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் நிறுவி வளர்த்த பாண்டித்துரைத்தேவர். பாளையங் கோட்டை முழுவதும் ஒரே ஆரவாரம்!

வெள்ளி விழாவிற் சேவை செய்வதற்குத் 'தொண்டர் படை' ஒன்று திரட்டப்பட்டது. புனித சேவியர் பள்ளியில் படித்துக்கொண்டிருந்த நானும் என்னைப் போன்ற சில சிறுவர்களும் தொண் டர் படையில் சேர்ந்தோம்.

விழாவின் முதல் நாள் காலைப் பொழுது, சைவ சபைச் செயலாளர் சிவஞான தேசிகர் என்னையும் மற்றொரு தொண்டனையும் அழைத்தார். "இப்பொ ழுதே நீங்கள் இருவரும் புறப்படுங்கள். 'கோச்சு வண்டி' (அப்போது மோட்டார் கார் வரவில்லை) தயா ராய் இருக்கிறது. திருநெல்வேலிப் பாலத்திற்கு (அப்போது ஜங்ஷன் ஆகவில்லை)ப் போய் சோழ வந்தானிலிருந்து வரும் புலவர் சண்முகனாரை அழைத்து வாருங்கள். சரியாக ஒன்பது மணிக்கு ரயில் வந்துவிடும். புலவர் கண்ணாடி வண்டியில் (இரண்டாம் வகுப்பு வண்டியில்) இருப்பார். அவ

ருக்கு வணக்கம் செலுத்தி அழைத்து வாருங்கள்," என்றார்.

நாங்கள் இருவரும் கோச்சில் ஏறி மிக உற்சாக மாக ரயிலடிக்குச் சென்றோம். குறிப்பிட்ட நேரத்தில் ரயில் வந்தது. கண்ணாடி வண்டியை நோக்கி விரைந்து ஓடினோம். அந்த வண்டி முழுவதும் புகுந்து தேடினோம். புலவர் அகப்படவில்லை. அன்று கண்ணாடி வண்டியில் யாருமே வரவில்லை.

சிறிது திகைத்து நின்றோம்; சுற்றுமுற்றும் பார்த் தோம்; எவரேனும் தயங்கி நின்றால், அவரைப் பிடித் துக் கேட்கலாம் என்று கருதினோம். ஒரு கோடியி லிருந்து மறு கோடி வரையும் சென்றோம். ஆனால், ஒருவராவது திகைத்து நிற்கவில்லை; எல்லோரும் வெளியே சென்றுவிட்டனர்.

'சரி, புலவர் இந்த வண்டியில் வரவில்லை; போவோம்,' என்று திரும்பவும் கோச்சில் ஏறிச் சபைக்கு வந்தோம். செயலாளரிடம் எங்கள் ஏமாற் றத்தைச் சொல்லிக் கொண்டிருந்தோம். அப்பொழுது சபையை நோக்கி வந்தார் ஒருவர். இடுப்பிலே நான்கு முழ ஆடை; மேலே பழுப்பேறிய துண்டு; முகத்திலே நடுத்தரமான மீசை; அதற்குமேல் பொடி யேறிய நாசி. அந்த உருவத்தைக் கண்டவுடன் செயலாளர் குதித்து எழுந்தார். 'அதோ வருகிறாரே புலவர்!' என்று சண்முகனாரை எதிர்கொண்டு அழைத்தார். 'சரி, நேரமாகிறது; புலவரைப் புது வீட்டிற்கு அழைத்துச் செல்லுங்கள்; வேண்டிய வசதியெல்லாம் செய்து கொடுங்கள்,'

என்றார். புலவரைக் கோச்சில் ஏற்றிக்கொண்டு புது வீட்டிற்குச் சென்றோம்.

புலவர்: நீங்கள் பள்ளி மாணவர்களா?

நான்: ஆம். ஆறாம் வகுப்பில் படிக்கிறோம்; சைவ சபைத் தொண்டர் படையில் சேர்ந்துள்ளோம்.

புலவர்: அப்படியா! தொண்டு செய்வதுதான் சிறந்தது. இப்போது நான் என்ன செய்யவேண்டும்?

நான்: இன்று பிற்பகல் மூன்று மணிக்கு வெள்ளி விழாத் தொடங்குகிறது. அதற்கு முன் நீங்கள் நீராடி, உணவருந்தி, இளைப்பாறுவதற்கு எல்லா வசதிகளும் இங்கே உண்டு. குளிப்பதற்கு வெந்நீரும் இருக்கிறது; தண்ணீரும் இருக்கிறது. தங்களுக்கு எது தேவை?

புலவர்: நான் நாள்தோறும் வைகையில் முழுகிப் பழகியவன். வெந்நீரில் குளித்துப் பழக்கம் இல்லை. தண்ணீரே போதும்.

உடனே அவர் நீராடுவதற்கு ஏற்பாடு செய்தோம். அவர் நன்றாகக் குளித்தார். ரயிலில் வந்த அலுப்பெல்லாம் தீர்ந்துவிட்டது. நெற்றி நிறையத் திருநீறு பூசினார். தனிமையில் இருந்து திருமுருகாற்றுப்படை ஓதினார். நாங்கள் பணிவுடன் பார்த்து நின்றோம். சிறிது நேரத்தில் சாப்பாடு வந்தது. அறுசுவையும் அமைந்த அருமையான உணவை அருந்தினார் புலவர்; சற்று இளைப்பாறச் சென்றார்.

மணி இரண்டரை ஆயிற்று. புலவர் படுத்திருந்த அறையினுள்ளே மெல்லச் சென்றோம். 'நேரம் ஆகி விட்டது' என்பதை அறிந்துகொண்டு புலவர் எழுந்தார். ஒரு சிறு துணிப் பொதியை அவிழ்த்தார். அதற்குள்ளே ஒரு சட்டையும் தலைப்பாகையும் மேலாடையும் ஒன்றோடொன்று இணைந்து பின்னிக்கொண்டிருந்தன. சட்டையைப் பிரித்து எடுத்து மாட்டினார். அதன் சுருக்குகளைச் சரிப்படுத்தக் கருதி, கைகளால் தேய்த்தார். மேல் கீழாக இழுத்துவிட்டார். ஆயினும், சட்டையின் சுருக்கு நிமிர்ந்தபாடில்லை. தலைப் பாகையை எடுத்துத் தலையிலே வைத்தார். அதன் பின் பாகம் நெற்றிக்கு நேராக வந்து சேர்ந்தது. இவற்றையெல்லாம் நாங்கள் பார்த்தோம்; ஆனால், புலவரிடம் பேசக் கூசி நின்றோம். 'அடுத்த அறையில் நிலைக்கண்ணாடி இருக்கிறது,' என்று குறிப்பாகச் சொன்னோம். 'கண்ணாடி எதற்கு?' என்று சொல்லி விட்டார் புலவர். மேலாடையைச் சட்டையின்மேல் போட்டுக்கொண்டு கிளம்பிவிட்டார். இந்தக் கோலத்தில் புலவரைக் கோச்சில் ஏற்றிச் செயலாளரிடம் கொண்டு சென்றோம்.

அவர் புலவரை ஒரு பார்வை பார்த்தார். 'ஐயா, செந்தமிழ்ப் புலவரே! சோழவந்தான் பெற்றெடுத்த செல்வமே! இந்தக் கோலத்திலா மேடையில் ஏறப் போகிறீர்? 'ஆள் பாதி; ஆடை பாதி' என்ற பழமொழியை மறந்துவிட்டீரா? வாரும் உள்ளே,' என்று ஒரு தனி அறைக்கு அழைத்துச் சென்றார். புலவர் திரும்பி வந்த போது, பழைய தலைப்பாகை இல்லை. அந்த இடத்தில் அழகான சரிகைக் குட்டையொன்று

வீற்றிருந்தது. உடம்பில் அணிந்திருந்த சுருக்குச் சட்டையும் மறைந்துவிட்டது. நீதி மன்றத்து வக்கீல்கள் அணியும் நெடிய கருஞ்சட்டை ஒன்று அவர் மேனியை அணி செய்தது. நீர்க்காவி ஏறிய பழைய ஆடையும் போய் வெள்ளை வெளேரென்ற உடை கண்களைக் கவர்ந்தது. இந்தக் கோலத்தில் புது மாப்பிள்ளையை அழைத்து வருவதுபோலச் சோழவந்தான் புலவரை வெளியே கொண்டு வந்தார் செயலாளர்.

சபை நிறைந்திருந்தது. மேடைக்குச் செல்லும் பாதையின் வழியே செயலாளர் முன்னே செல்ல, புலவர் சண்முகனார் பின்னே செல்ல, நாங்கள் பின் தொடர்ந்தோம். சபையோர் பலர் தலையை நீட்டிப் பார்த்தனர். சிலர், 'இவர் யார்? யார்?' என்று எங்களைக் கேட்டனர். 'சிறிது பொறுத்திருங்கள்' என்று சொல்லிப் புலவரோடு மேடைக்கு அருகே சென்றோம்.

தலைவர் பாண்டித்துரைத் தேவர் தமிழே உருவெடுத்தாற்போல மேடையின்மீது வந்து அமர்ந்தார். மக்கள் கைகொட்டி ஆரவாரித்தார்கள். அவர் ஆசனத்தில் அமர்வதற்கு முன்னே, புலவர் சண்முகனாரை நோக்கி வணங்கினார். 'இங்கே வருக!' என்று அன்புடன் அழைத்தார். புலவரும் மேடையேறித் தலைவர் அருகே அமர்ந்தார்.

கடவுள் வாழ்த்தும் தமிழ் மொழி வாழ்த்தும் நிகழ்ந்த பின்னர், தலைவர் இனிய தமிழில் வெள்ளி விழாவின் சிறப்பினை விளங்கக் கூறினார். பின்பு சண்முகனாரைச் சபையார்க்கு அறிமுகம் செய்வா

ராயினர். 'என்னருகே அமர்ந்திருக்கும் அரசஞ்சண் முகனரை இந்நாட்டில் அறியாதார் அறியாதாரே! தண்ணார் தமிழளிக்கும் தென்பாண்டி நாட்டிற்கு இவர் ஒரு திலகமாய்த் திகழ்கின்றார். தமிழ் மொழியில் இவர் கல்லாத கலையில்லை என்பது இன்னும் சிறிது நேரத்தில் இவர் சொல்லாலே இனிது துலங்கும். திருக்குறளின் சிறந்த உரையாகிய பரிமேலழகர் உரையை இவர் இன்று ஆராயப் போகின்றார். தமிழ் நாட்டில் நான் அறிந்த அளவில் பரிமேலழகர் உரையை ஆராய்வது, ஒரு புதுமைதான். அறிஞர் சண்முகனரைக் கேட்போம்; கேட்டவற்றைச் சிந்திப் போம்; பின்பு தெளிவோம்,' என்று சொல்லி அவரைப் பேசும்படி வேண்டினர்.

மேடையின் மீது சிங்க ஏறு போல எழுந்து நின்றார் சண்முகனர். முறையாக அவையடக்கம் கூறி, பரிமேலழகர் உரையை ஆராய்ச்சி என்னும் அழற் கோட்டத்தில் இட்டார். அவர் சொல்லிய கருத்துக் களையெல்லாம் ஏற்றுக்கொள்ளுதற்குரிய அறிவு என்பால் இல்லை. ஏறக்குறைய இரண்டு மணி நேரம் அவர் பேசினர். சபையோர் அனைவரும் சித்திரப் பாவை போல அமர்ந்து, புலவரது வித்தகத் திற மையை வியந்தனர். அன்று அவர் சொல்லிய கருத் துக்களில் ஒன்றுதான் என் நினைவில் இருக்கின்றது.

*" விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா*
*மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று,"*

என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகர் இயற்றியுள்ள உரையை ஆராய்ந்தார் புலவர்.

"இக்குறளில் வரும் 'சாவா மருந்து' என்னும் சொற்றொடருக்குச் 'சாவாமைக்குக் காரணமாகிய மருந்து'—அதாவது அமிர்தம் என்று பொருள் கொண்டார் பரிமேலழகர். அமிர்தத்தைச் 'சாவா மருந்து' என்று நெடிய தொடரால் குறித்தல் வேண்டுமா? மருந்து என்ற சொல்லுக்கே அமிர்தம் என்னும் பொருள் இருக்க, 'சாவா மருந்து' என்பது மிகை அன்றோ? 'மருந்தே ஆயினும் விருந்தோடுண்' என்ற ஆன்றோர் வாக்கில் மருந்து என்பது அமிர்தத்தைக் குறிக்கின்றதன்றோ? சொற்செறிவும் பொருட்சிறப்பும் உடைய திருக்குறளில் மிகையாக ஒரு சொல் வருமா?" என்று வினாக்களை ஒன்றன் பின் ஒன்றாகச் சரமாரி போல விடுத்தார் சண்முகனார். இவ்வாறு தடைகளையெல்லாம் சொல்லிவிட்டுச் 'சாவா மருந்து' என்பதற்குப் புதியதோர் பொருள் உரைத்தார் :

'விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவாம்; (ஆதலால்) மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று' என்று கொண்டால் பொருள் சிறக்கும். விருந்தாக வந்தவரை வீட்டிற்கு வெளியே வைத்துவிட்டுத் தனித்திருந்து ஒருவன் வயிறார உண்பது தான் வாழ்வதற்காகவன்றோ? அப்படி உண்பது வாழ்வு அன்று; அதுவே சாவாகும்?' என்று பொருள் கூறி, அதனைப் பலவாறாக விளக்கினார் அரசஞ்சண்முகனார். சபையோர் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர். தலைவர் புலவரின் ஆராய்ச்சித் திறனை மனமாரப் புகழ்ந்து, 'பரிமேலழகர் உரையை ஆராய்வது தவறன்று,' என்று தெளிவாக எடுத்துரைத்தார்.

திருக்குறளின் சிறப்பையும் பரிமேலழகர் உரை யின் நுணுக்கத்தையும் அன்று முதல் இன்று வரை ஆராய்ந்து இன்புறும் அறிஞர்க்கெல்லாம் வழி காட்டி யாய்த் திகழ்கின்றார் அரசஞ்சண்முகனார் என்றால், அதனினும் சிறந்த பெருமை ஓர் அறிஞர்க்குக் கிடைக் குமோ?

புலவர் வாழ்ந்த சோழவந்தானில் அவர் நினைவுச் சின்னமாக ஒரு நூல் நிலையக் கட்டடம் அவ்வூர் மக்க ளின் நன்கொடையால் நான்கு மாதங்கட்கு முன் திறந்து வைக்கப்பட்டது. அவ்விழாவில் நானும் கலந்து புலவர் பெருமானுக்கு நன்றி செலுத்தும் பேறு பெற்றேன்!

# நீலகிரிச் செல்வம்

தமிழ் நாட்டிலே இயற்கை வளமுடைய மலைகள் பல உண்டு. அவற்றுள் ஒன்று, நீலகிரி என்னும் மலை. அம்மலையில் உள்ள பூஞ்சோலைகள் கண்ணுக்கு விருந்தளிக்கும். கோடையிலே இளைப்பாற்றிக்கொள் வதற்கு ஏற்ற குளிர்மையும் செழுமையும் வாய்ந்தது அம்மலை.

அந்த மலையின் ஆதி வாசிகள் 'தோடர்கள்' என்று வழங்கப்படுவார்கள். அவர்கள் எருமை மாடுகளை அருமையாகப் பேணுவார்கள். அம்மாடுகள் மலையில் உள்ள பசும்புல்லை மேய்ந்து செழுமையாக வளரும். அவற்றின் பாலும் நெய்யும் தோடரை ஊட்டி வளர்க் கும். எருமை மாடு இல்லாத தோடன், ஏழை என்று இகழப்படுவான்.

தமிழ் நாட்டிலே போப்பு ஐயர் என்று புகழ்ப் பெற்ற ஆங்கிலப் பாதிரியார் நீலகிரியில் சில காலம் வாழ்ந்தார்; அப்போது தோடர்களுடன் நெருங்கிப் பழகினர் ; தமிழிலே கதை சொல்லி அவர்கள் உள்ளத்தைக் கவர்ந்தார்.

ஒரு நாள் ஆங்கில நாட்டு இளவரசர் (Prince of Wales) இந்தியாவுக்கு வருவதைப்பற்றி அவர் சொல் லத் தொடங்கினர். "ஆங்கில நாட்டு இளவரசர் நம்மை ஆளும் மன்னருடைய முதல் மைந்தர். இப்போது உள்ள அரசருக்குப் பின் அவரே முடி சூடி அரசாள் வார். அவர் சென்னைக்கு வரும்போது கவர்னர்

முதலிய கனதனவான்கள் வரவேற்பு அளிப்பார்கள்; அவர் செல்லும் இடம் எல்லாம் சிறப்புச் செய்வார்கள்; பந்தல் போடுவார்கள்; மேளம் கொட்டுவார்கள்; மாலை அணிவார்கள். இப்படி எல்லோரும் மரியாதை செய்யும் இளவரசர் இந்த மலைக்கும் வரப்போகிறார்," என்று சொன்னார்.

அப்போது அங்கிருந்த தோடர்களுள் ஒருவன், " ஐயா, இளவரசர் பெருஞ்செல்வர் என்று சொன்னீர்களே! அப்படியானால், அவர் இங்கே வரும்போது எத்தனை எருமை மாடுகள் கொண்டு வருவார்?" என்று கேட்டான். தோடருக்கு எருமை மாடே செல்வம் என்பது இதனால் நன்கு விளங்குகின்றதல்லவா?

' ஊட்டி ' என்றும், 'ஒட்டகமண்டு' என்றும் இக்காலத்தில் புகழ்ந்து பேசப்படுகின்ற ஊரை உண்டாக்கியவர்கள் தோடர்களே ஆவார்கள். தமிழர் குடியிருக்கும் ஊர்களுக்குப் பட்டி, பாக்கம், நகரம், புரம் என்று பெயரிட்டிருத்தல் போல, தோடர்கள் குடியிருக்கும் இடத்திற்கு 'மந்து' என்பது பெயர். மந்தை என்ற தமிழ்ச் சொல்லே தோடர் மொழியில் மந்து என மருவி வழங்குகின்றது. மாடுகளைச் செல்வமாக மதிக்கும் தோடர்கள் தங்கள் ஊருக்கு மந்து என்று பெயரிட்டது பொருத்தமுடையதன்றோ?

நீலகிரியிலுள்ள மந்துகளில் மிகச் சிறந்தது 'ஒத்தைக்கல் மந்து' என்பது. ஒரு குத்துக்கல்லைச் சுற்றி எழுந்தகுடியிருப்புக்கு அப்பெயர் அமைந்தது போலும்! ஒத்தைக்கல் மந்து என்பதுதான் ஆங்கிலத்தில் ' ஒட்டகமண்டு ' ஆயிற்று! ஊட்டி என்பது அதன் குறுக்கம்.

ஊட்டிக்கு அருகே 'பைக்காரா' என்ற பெரிய அருவி இருக்கின்றது. அதிலிருந்து எழுகின்ற மின்சாரம் இப்பொழுது தென்னாடு எங்கும் போந்து பயனளித்து வருகின்றது. அந்தப் 'பைக்காரா நதி' தெய்வத்தன்மை வாய்ந்தது என்பது தோடர்களின் கொள்கை. அதன் தண்ணீரை அவர்கள் தொட மாட்டார்கள்; அதைக் கடந்து செல்லும்போது தலை வணங்கித் தொழுவார்கள். காவேரி ஆறு அகத்திய முனிவருடைய கமண்டலத்திலிருந்து பிறந்ததாகத் தமிழ் நாட்டில் ஒரு கதை வழங்குதல் போன்று, பைக்காரா நதி ஒரு தேன்கூட்டிலிருந்து தோன்றிற்று என்று தோடர்கள் ஒரு கதை சொல்லுகிறார்கள்:

''ஒரு நாள், ஒரு மாமனும் மருகனும் மலையிலே தேன் எடுக்கச் சென்றார்கள். இருவரும் இருவேறு பக்கமாகப் பிரிந்து தேன் கூட்டைத் தேடினார்கள். நெடுநேரம் அலைந்தும் மாமனுக்குத் தேன்கூடு கிடைக்கவில்லை; வெறுங்கையோடு வீட்டுக்குத் திரும்பி விட்டான். மருகனுக்கு இரண்டு பெரிய தேன்கூடுகள் கிடைத்தன. அவற்றை எடுத்துக்கொண்டு வீட்டை நோக்கி வரும்பொழுது, ஒரு கூட்டை ஒரு பாறையின் இடுக்கிலே பதுக்கிவைத்தான்; மற்றொரு தேன்கூட்டை மட்டும் மாமனிடம் கொடுத்து, 'இதுதான் கிடைத்தது,' என்று சொன்னான். மாமன் அவனை நம்பினான்; 'இவ்வளவாவது உனக்குக் கிடைத்ததே! எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லையே!' என்று மருகனைப் புகழ்ந்தான். இருவரும் தேனைப் பங்கிட்டுப் பருகினார்கள்.

''மறுநாள் வழக்கம் போல மாமனும் மருகனும் தேன் எடுக்கப் புறப்பட்டார்கள். மருகன் மறைத்து

வைத்திருந்த தேன் கூட்டை எடுப்பதற்குப் பாறையின் அருகே விரைந்து சென்றான். அங்கு இரண்டு நாகப்பாம்புகள் படம் விரித்து ஆடிக்கொண்டு இருந்தன. தேன் கூட்டிலிருந்த தேன் ஓர் ஓடையாய்ச் சென்றுகொண்டிருந்தது. அச்சமும் வியப்பும் மேலிட்டு மருகன் அவ்விடத்தை விட்டு ஓடினான். அன்று முதல் அப்பாறையிலிருந்து தேனாறு போன்ற பைக்காரா நதி ஓடிக்கொண்டிருக்கின்றது,'' என்று தோடர்கள் சொல்லுகிறார்கள்.

தோடர் செல்வமாகப் போற்றும் மாடுகளே பழங்காலத்தில் தமிழ் நாட்டில் சிறந்த செல்வமாக மதிக்கப்பட்டன; பயிர்த் தொழிலையே பண்பார்ந்த தொழிலாகக் கொண்டது பழந்தமிழ் நாடு. அத்தொழில் மாடு இல்லாமல் நடக்குமா? நிலத்தை உழுவதற்கு மாடு வேண்டும்; விளைந்த கதிரைக் களத்தில் பிணையலிட்டு அடிப்பதற்கு மாடு வேண்டும்; களஞ்சியத்தில் நெல்லைக் கொண்டு சேர்ப்பதற்கு மாடு வேண்டும். இப்படி உழைப்பதனாலேதான் நல்ல உழைப்பாளனை, 'மாடு போல உழைக்கிறான்,' என்று சொல்லுகிறார்கள்.

பயிர்த்தொழில் செய்வோருக்கு மாடுதான் சிறந்த செல்வம். அதனால் மாடு என்ற சொல்லுக்கே செல்வம் என்ற பொருள் வந்தது.

> *'கேடில் விழுச்செல்வம் கல்வி, ஒருவற்கு*
> *மாடல்ல மற்றை யவை.'*

என்ற திருக்குறளில் மாடு என்னும் சொல்லிற்குச் செல்வம் என்பதே பொருள். 'ஒருவனுக்குக் கல்வியே

அழியாத செல்வம். மற்றைய செல்வம் எல்லாம் அழியும்,' என்று திருவள்ளுவர் இந்தக் குறளிலே கூறுகின்றார்.

மாட்டின் பெருமையைத் தமிழ் நாட்டிலே கொண்டாடுவதுண்டு. நோய் நொடியின்றி மாடும் கன்றும் வாழவேண்டும் என்பதற்காக ஆண்டுக்கு ஒரு முறை பொங்கல் விழாவிற்கு அடுத்த நாளில் மாட்டுப் பொங்கல் இன்றும் சிறப்பாக நடைபெறுகின்றது. இந்த நன்னாளில் 'மாடு வாழ்க! நாடு வாழ்க!' என்று எல்லோரும் சேர்ந்து வாழ்த்துவர்.

# 'என்றுமுள தென்தமிழ்'

மனோன்மணீயம் என்னும் நாடக நூல் இயற்றி அழியாப் புகழ் பெற்றவர் பேராசிரியர் சுந்தரனார். அந்நூலிலே தமிழ்த்தாய் வாழ்த்தாக அமைந்துள்ள பாடல் இப்பொழுது நாடெங்கும் முழங்குகின்றது. அருமையான மொழிநூற்கருத்தொன்றை அழகாக வெளியிடுவது அப்பாட்டு.

இமயமுதல் குமரி வரை பரவியுள்ள பாரத நாட்டில் பழங்கால முதல் இரு வேறு குடும்ப மொழிகள் வழங்கி வருகின்றன. ஒன்று ஆரியம்; மற்றொன்று தமிழ். ஆரியமும் தமிழும் தொன்மை வாய்ந்த செம்மொழிகள். இவ்விரு மொழிகளும் இறைவன் அருளால் தோன்றின; இம்மை, மறுமையென்னும் இருமையும் பயக்கும் அருள் நூல்களை உடையன. ஆதலால், 'இரு மொழியும் நிகர் என்னும் இதற்கு ஐயமுளதேயோ ?' என்று இரு மொழிப் புலமையும் வாய்ந்த பெரியோர் கருதினர்.

தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் இயற்றிய திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரம் அளித்த பெரும்புலவர்களுள் ஒருவராகிய வண்ணக்கன் சாத்தனார்,

*'ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து இதனின்இது*
*சீரியது என்றொன்றைச் செப்பரிதால்;—ஆரியம்*
*வேத முடைத்து; தமிழ்திரு வள்ளுவனார்*
*ஓது குறட்பா உடைத்து.'*

என்று பாடினர். 'ஆரியத்தையும் செந்தமிழையும் ஆராய்ந்து சீர்தூக்கி, ' இதனினும் இது சிறந்தது,' என ஒன்றை விதந்து கூறுதல் எவர்க்கும் எளிதன்று; எனினும், ஆரிய மொழியில் வேதம் உள்ளது; தமிழ்மொழியில் திருக்குறள் உள்ளது என்று கூறுதல் சாலும்,' என்பது சாத்தனர் கருத்து.

சங்க காலம் என்று சொல்லப்படுகின்ற பழங் காலத்திலும், சமயச் சான்றோர்கள் வாழ்ந்த தேவார காலத்திலும், 'ஆரியமும் தமிழும் ஒன்றுக்கொன்று சரிநிகர் சமானம்,' என்னும் கொள்கையே தமிழ் நாட்டில் பரவி இருந்தது. இதனலேயே ஈசனை ' ஆரியன் கண்டாய் ; தமிழன் கண்டாய்,' என்று பாடினர் திருநாவுக்கரசர். ஆரியம் வடபுலத்தில் வழங்கிய மொழியாதலால், வடமொழி என்று பெயர் பெற்றது. தமிழ் தென்புலத்தில் வழங்கிய மொழியாதலால், தென்மொழி என்று வழங்கப் பெற்றது.

வடமொழியாகிய ஆரியத்தினின்றும் பல மொழிகள் பிறந்தன. அவ்வாறே தென்மொழியாகிய தமிழினின்றும் பல மொழிகள் தோன்றின. எனவே, தொன்மையிலும் செம்மையிலும் ஒன்றையொன்று ஒத்திருந்த இவ்விரு மொழிகளும், தாய்மை நலமும் பெற்று இந்நாட்டிலே திகழ்ந்தன. ஆயினும், தாய்மையில் ஒரு வேற்றுமை உண்டு: வடநாட்டில் பல மொழிகளை ஈன்ற தாய் இறந்துவிட்டாள்; தென்னட்டில் பல மொழிகளை ஈன்ற தாய் இன்றும் இளமை குன்ருது இருக்கின்ருள். இச்சீர்மையை அறிந்து வாழ்த்துகின்ருர் மனேன்மணீய ஆசிரியர்.

"பல்லுயிரும் பலவுலகும்
படைத்தளித்துத் துடைக்கினும்ஓர்
எல்லையறு பரம்பொருள்முன்
இருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும்
கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத்து உதித்தெழுந்தே
ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்கு
அழிந்தொழிந்து சிதையாஉன்
சீரிளமைத் திறம்வியந்து
செயல்மறந்து வாழ்த்துதுமே."

என்ற அழகிய பாட்டில் தமிழின் தனிச்சிறப்பு நன்றாக உணர்த்தப்படுகின்றது. திராவிட நாட்டில் வழங்கி வரும் கன்னடம் முதலிய நான்கு மொழிகளும் தமிழ்த்தாயின் சேய்கள் என்று திட்ட வட்டமாகக் கூறுகின்றார் சுந்தரனார். இக்கொள்கையை இன்று கன்னடரும் தெலுங்கரும் மலையாளத்தாரும் துளு வரும் ஏற்றுக்கொள்ளத் தயங்கினாலும், வருங் காலத்தில் திராவிட மொழிநூல் ஆராய்ச்சியின் பயனாக இவ்வுண்மை நன்கு நிலைபெறும் என்பதில் ஐயமில்லை. இந்நான்கு சிறந்த மக்களையும் ஈன்ற நற்றாய் முதுமையும் இறப்பும் இன்றி ஒரு தன்மை யளாய் இலங்கும் தன்மையை எண்ணி இறைஞ்சு கின்றார் கவிஞர். இவ்வுலகில் உள்ள சராசரங்களை யெல்லாம் ஈன்ற பரம்பொருளாகிய இறைவன் என்றும் ஒரு படியனாய் இருத்தல் போன்று, மூவாச் சாவா மொழியாகிய தமிழும் 'என்றுமுள தென்தமி ழாய்' வாழ்கின்றது என்று போற்றினார்.

இவ்வுலகில் எத்தனையோ செம்மொழிகள் பிறந்தன ; செழித்து வளர்ந்தன; நாளடைவில் முதுமையுற்று, நாட்டு வழக்கற்று, ஏட்டில் அடங்கி விட்டன. ஐரோப்பிய நாட்டுச் செம்மொழிகளாகிய இலத்தீன், கிரீக்கு என்னும் இரு மொழிகளும் இன்று உலக வழக்கற்ற செம்மொழிகளேயாகும். பாரசீக நாட்டுப் பழையமொழியும், சுமேரிய நாட்டுத் தொன் மொழியும் வழக்காறு அற்ற மொழிகளே ஆகும். இத்தகைய செம்மொழி இனத்தைச் சேர்ந்தது ஆரியம் என்னும் வடமொழியும். தென்மொழியாகிய தமிழ் தொன்மை வாய்ந்த மொழியே ஆயினும், இன்றும் ஏட்டு வழக்கொடு நாட்டு வழக்கும் உடையதாய் விளங்குதல் ஒரு தனிச் சிறப்பேயாகும். ' முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய், பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனாய் ' வாழ்கின்றான் இறைவன் என்று பாடினார் மாணிக்க வாசகர். அவ்வண்ணமே பழமைக்குப் பழமையாய், புதுமைக்குப் புதுமையாய் விளங்கும் பசுந்தமிழை வியந்து போற்றினார் சுந்தரனார்.

' கொடுமலையாளக் குடியிருப்புடையேன்,' என்று தாம் வாழ்ந்த நாட்டின் தன்மையைக் கூறிய இப் பேராசிரியர், அந்நாடு தமிழ் மொழி ஆராய்ச்சிக்குப் பயன்படும் பான்மையையும் விளக்கிக் கூறியுள்ளார். இக்காலத்தில் தமிழில் வழங்கி வரும் பழஞ்சொற்கள் சிலவற்றின் வேரும் பொருளும் தெரிந்துகொள்ளுதற்குச் சில ஆண்டுகளேனும் தமிழாராய்ச்சியாளர்கள் மலையாள நாட்டில் குடியிருத்தல் வேண்டும் என்பது அவர் கொள்கை.

இதற்குச் சான்ருக எலும்பு என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம். இச்சொல் தமிழ் நாடெங்கும் வழங்குகின்றது. ஆயினும், இச்சொல்லின் வேரும் பொருளும் விளக்கமாகத் தெரியவில்லை. மலையாள நாட்டில் 'எல்' என்னுஞ்சொல் எலும்பைக் குறிக்கின்றது. 'எல்லு ஒடிச்சுவிடும்' என்பது மலையாளத்தில் ஒரு வஞ்சின மொழி. திருக்குறளில் ' என்பு ' என்ற சொல் வழங்குதலைத் தமிழறிஞர்கள் அறிவார்கள். ' நோல் ' என்ற வேர்ச்சொல்லடியாக ' நோன்பு ' பிறந்தாற்போன்று, ' எல் ' என்ற வேர் அடியாக ' என்பு ' பிறந்ததென்று கருதுதல் தவருகாது. இலக்கிய வழக்கில் ' என்பு ' என்று எடுத்தாளப்பட்ட சொல்லே உலக வழக்கில் எலும்பு என்ருயிற்று. ஆயினும், இச்சொற்களின் வேர் இன்று தமிழ் நாட்டில் காணப்படுவதில்லை; மலையாள நாட்டிலே காணப்படுகின்றது.

திராவிட மொழிகள் என்று கருதப்படுகின்ற ஐந்து சிறந்த மொழிகளையும் கற்றுணர்தல் ஒருவருக்கு இயலாதிருப்பினும், அவற்றுள் இரு மொழிகளையேனும் அறிந்துகொள்ளுதல் தென்னுட்டில் வாழும் அறிஞர்க்கு இன்றியமையாததொன்ருகும். இன்று மலையாள நாட்டிலுள்ள சில ஊர்ப் பெயர்கள் பழந்தமிழ்ச் சொற்களாய்க் காணப்படுகின்றன. யான் ஒருகால் மலையாள நண்பரோடு திருவனந்தபுரத்திற்குச் சென்றுகொண்டிருந்தேன். இருப்புப்பாதையில் ' புனலூர் ' என்ற நிலையம் வந்தது. இரயில் வண்டித் தொடரை இழுத்துச் சென்ற இஞ்சின் சிறிது இளைப்பாறித் தண்ணீர் பருகத்

தொடங்கிற்று. அது தண்ணீர் குடித்துக்கொண்டிருந்ததைக் கண்ட மலையாள நண்பர் நெடுந்தூரம் வந்த அலுப்பினால் வெறுப்பாகப் பேசி, இரயிலைப் பழித்துக்கொண்டிருந்தார். அப்போது, 'இந்த ஊரைக் கண்டவுடன் இரயிலுக்குத் தாகமெடுப்பது இயல்புதானே!' என்று சொன்னேன் நான். 'அது எப்படி?' என்று கேட்டார் நண்பர். 'இது புனலூர் அல்லவா? புனல் என்பது தண்ணீர். தண்ணீருடைய ஊரைக் கண்ட போது இரயிலுக்கும் தாகம் எடுத்துவிட்டது!' என்று விளக்கம் கூறிய பொழுது மலையாள நண்பரின் மனத்திலெழுந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. 'புனல் என்பது தமிழ்ச்சொல்லே; ஆயினும், இக்காலத்தில் அது நாட்டு வழக்கில் இல்லை; ஏட்டு வழக்கில் ஏராளமாக உண்டு,' என்று மேலும் கூறி, அந்நண்பரின் இலக்கியப் பசியைச் சிறிது வளர்த்தேன்.

மலையாள நாட்டின் தலை நகரில் பேராசிரியராய் விளங்கிய சுந்தரனார் செவிகளில் எத்தனையோ பழந்தமிழ்ச் சொற்கள் விழுந்திருத்தல் வேண்டும்; அச்சொற்களின் பிறப்பையும் சிறப்பையும் மலையாளத்தின் உதவி கொண்டு அவர் தெரிந்திருத்தல் வேண்டும். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்!' என்னும் உயர்ந்த நோக்கத்துடன் தமிழ்மொழியோடு மலையாளத்தையும் கற்றால் நலமுண்டு என்று கூறிப் போந்தார் அவர். தமிழ்த்தாயின் கடைசி மகவாகத் தோன்றி மழலை மொழிகளால் மாதாவின் செவியை மகிழ்வித்த மலையாளக் குழந்தையைக் 'கவின் மலையாளம்' என்று சுந்தரனார் கூறுவது அப்பெருமகனாரது மொழி உணர்ச்சிக்கு ஒரு சிறந்த சான்றாகும்.

# வள்ளுவரும் பாரதியாரும்

'திருக்குறள் ஓதற்கு எளிது; உணர்தற்கு அரிது,' என்பது கற்றறிந்தோர் கொள்கை. உணர்தற்கு அரிதாயுள்ள திருக்குறளை ஒல்லும் வகையால் விளக்கி யருளினர் நல்லியற்கவிஞரும் உரையாசிரியரும். சிலம்பின் திறமுரைத்த இளங்கோவடிகள் முதலாக வீர சுதந்தரம் வேண்டிப் பாடிய பாரதியார் ஈருகத் தமிழகத்தில் தோன்றிய பெருங்கவிஞர் அனைவரும் திருக்குறளின் கருத்துக்களைத் தமது கவிதையில் அமைத்து அழகுக்கு அழகு செய்துள்ளனர்.

இவ்வுலக வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமை யாதது என்பது திருக்குறளின் அடிப்படையான கருத்துக்களில் ஒன்று. 'பொருள் இல்லார்க்கு இவ் வுலகம் இல்லை,' என்று தெள்ளத்தெளிய உணர்த்து கின்றார் திருவள்ளுவர். இதன் பொருளை விரித் துரைத்த கவிஞர் பலராவர். "இல்லானை இல்லாளும் வேண்டாள்; ஈன்றெடுத்த தாய் வேண்டாள்; செல்லாதவன் வாயிற் சொல்,"என்று விளக்கினார் ஒரு கவிஞர். இவ்வுலகில் பொருளற்றவர் அடையும் சிறுமையை அனுபவ வாயிலாக அறிந்த பாரதியார், திருவள்ளுவரை மனமாரப் புகழ்ந்து போற்றுகின்றார்.

'பொருளி லார்க்கிலை இவ்வுல கென்றநம்
புலவர் தம்மொழி பொய்ம்மொழி யன்றுகாண்;
பொருளி லார்க்குஇன்ப மில்லை துணையிலை;
பொழுதெ லாம்இடர் வெள்ளம்வந் தெற்றுமால்;
பொருளி லார்பொருள் செய்தல் முதற்கடன்'

என்பது பாரதியார் பாட்டு.

'பொருளிலார்க்கு உற்றார் இல்லை; உறவினர் இல்லை; எந்நாளும் அவர்கட்கு ஓயாத தொல்லை. ஆதலால், பொருளில்லார் பொருள் செய்தல் முதற்கடன்,' என்று வற்புறுத்தினர் பாரதியார். 'செய்க பொருளை,' என்று பணித்த திருவள்ளுவர் வாக்கைத் தழுவி எழுந்தது பாரதியார் கட்டுரை.

பொருள் செய்து வாழும் மாந்தரிடம் பண்பாடு வளர்ந்து ஓங்குதல் வேண்டும் என்று ஆசைப்படுகின்றார் திருவள்ளுவர். மாந்தர் மனம் செம்மையுற்றால் மாநிலம் செம்மையுறும் என்பது அவர் கொள்கை. செம்மையை அழிக்கும் திறம் வாய்ந்தது வெம்மையான சினம் என்று திருக்குறள் பாடிற்று.

'சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும்.'

என்றார் வள்ளுவர். சேர்ந்தாரைக் கொல்லி என்பது நெருப்பின் பெயர்களுள் ஒன்று. தான் சேர்ந்த இடத்தை அழிக்கும் தொழிலுடையதாதலால், அப் பெயர் அதற்கு அமைந்தது. 'சினம் என்னும் நெருப்பு உள்ளத்தில் மூளுமாயின், செம்மை எனும் பண்பாடு எரிந்து அழிந்துவிடும்,' என்பது ஆன்றோர் கருத்து. ஆதலால், 'உள்ளங் கவர்ந்து எழுந்து ஓங்கு சினம்

காத்துக் கொள்ளும் குணமே குணம் என்க,"என்று பாடினர் ஒரு கவிஞர். இவ்வாறு கவிஞர் பலரும் அறிவுறுத்திய உண்மையை விஞ்ஞானப் புலவர் வாயிலாக விளக்குகின்றார் பாரதியார். பாரதநாட்டு விஞ்ஞான வித்தகருள் சாலச்சிறந்த பெருமை வாய்ந்தவர் ஜகதீச சந்திர போஸ் என்பவர். அவர் ஆராய்ந்து கண்ட உண்மையை ஆதாரமாகக் கொண்டு திருக்குறளின் கருத்தைத் தெளிவுறுத்துகின்றார் பாரதியார்.

*'கோணகிச் சாத்திரத்தை ஆளும் மாண்பார்*
*ஜகதீச சந்த்ரவசு கூறு கின்றான் :*
*ஞானனு பவத்தில்இது முடிவாம் கண்டீர் :*
*நாடியிலே அதிர்ச்சியினல் மரணம்,' என்றான்;*

*கோபத்தால் நாடியிலே அதிர்ச்சி யுண்டாம்;*
... ... ...
*கோபத்தை வென்றிடலே பிறவற் றைத்தான்*
*கொல்வதற்கு வழியெனநான் குறித்திட் டேனே.'*

என்பது அவர் பாட்டு. மேலை நாட்டு முறையில் 'வசு' என்னும் விஞ்ஞானப் புலவர் கண்ட முடிபும், இந்நாட்டு மெய்ஞ்ஞான மேதையர் கொண்ட கொள்கையும் ஒத்திருத்தலை எடுத்துரைக்கின்றார் கவிஞர்.

எக்காலத்திற்கும் எந்நாட்டிற்கும் பொருத்தமான அரசியல் உண்மைகளைத் திருவள்ளுவர் திருத்தமாகக் கூறுகின்றார். 'ஏழையர் வடிக்கும் கண்ணீர் செல்வச் செருக்குடைய வல்லரசையும் அழித்துவிடும்,' என்பது அத்தகைய உண்மைகளுள் ஒன்று.

*'அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே*
*செல்வத்தைத் தேய்க்கும் படை?'*

என்பது வள்ளுவர் வாக்கு. கண்ணீரின் ஆற்றலைக் காவியங்களிற்காணலாம். பாண்டியன் அரசு வீற்றிருந்த மதுரை மாநகரில் கண்ணகி அல்லலுற்று அழுதாள்; 'காய்கதிர்ச் செல்வனே! கள்வனோ என் கணவன்?' என்று கதறினாள். இவ்வாறு,

*'அல்லலுற்று ஆற்றாது அழுவாளைக் கண்டுஏங்கி*
*மல்லல் மதுரையார் எல்லோரும் தாமயங்கி'*

என்ன தீங்கு வருமோ என்று ஏங்கினார்கள். கண்ணகியின் கண்ணீர் மன்னனை மாய்த்தது; மதுரையை எரித்தது. சீதையின் கண்ணீர் இலங்கை மாநகரில் விழுந்தது. அதனால் வீர மன்னனாகிய இராவணன் விழுந்துபட்டான். வீரமகேந்திரத்தில் சிறையிருந்து வருந்திய சயந்தன் வடித்த கண்ணீர் சூரனை மடித்தது; அவன் வல்லரசை ஒடித்தது. செருக்குற்ற துரியோதனன் சபையில் பாஞ்சாலியின் கண்ணீர் பாய்ந்தது. ஆடவர் நிறைந்திருந்த சபையில் அம் மங்கையைக் கொணர்ந்து மானபங்கம் செய்யத் தலைப் பட்ட பொழுது,

*'பெண்டிர் தமையுடையீர்! பெண்களுடன்பிறந்தீர்!*
*பெண்பாவ மன்றோ? பெரியவசை கொள்வீரோ?*

கண்பார்க்க வேண்டும்!' என்று கையெடுத்துக் கும்பிட்டாள் அவள். இரக்கமற்ற துரியோதனன் அம்மொழிகளைச் செவியில் ஏற்றானல்லன். பாஞ்சாலி வடித்த கண்ணீரே, அவன் குலத்தை வேரறுக்கும் படைக்கலமாயிற்று.

பாரதநாட்டு மக்கள் கடல் சூழ்ந்த அயல் நாடுகளில் கடும்பணி புரிந்து கண்ணீர் வடிக்கக் கண்ட

பாரதியார் நெஞ்சம் துடித்தது. நெடுங்கடலின் நடுவேயுள்ள தீவகத்தில் கல்நெஞ்சர்க்குரிய கரும்புத் தோட்டத்திலே இந்திய மாதர் படும் துயரம் அவர் உள்ளத்தை உருக்கியது.

—'தெற்கு
*மாகட லுக்கு நடுவினி லேஅங்கோர்*
*கண்ணற்ற தீவினிலே—தனிக்*
*காட்டினில் பெண்கள் புழுங்குகின் றூர்அந்தக்*
*கரும்புத் தோட்டத்திலே.'*

'அங்கே மாதர்கள் கால்களும் கைகளும் சோர்ந்து விழுந்து வருந்துகின்றனரே! மனம் கொதித்துக் கொதித்து மேனி சுருங்குகின்றனரே! மானங்குலைந்து மயங்குகின்றனரே! அன்னூர் கதறி வடிக்கும் கண்ணீர் வெறு மண்ணிற்கலந்து மறைந்திடுமோ?' என்று தெய்வத்தை நோக்கி முறையிடுகின்றூர் பாரதியார்.

*'பெண்ணென் று சொல்லிடிலோ—ஒரு*
*பேயும் இரங்கும்என் பார்தெய்வமே!—நினது*
*எண்ணம் இரங்காதோ?—அந்த*
*ஏழைகள் அங்குச் சொரியும்கண் ணீர்வெறு*
*மண்ணிற் கலந்திடுமோ?'*

என்ற பாட்டு வள்ளுவர் வாய்மொழியைத் தழுவி எழுந்ததாகும். 'ஏழைகள் வருந்தி வடிக்கும் கண்ணீர் செல்வர் செருக்கறுக்கும் படை,' என்று வள்ளுவர் சொல்லியது பொய்யா மொழியன்றே? 'கண்ணற்ற கரும்புத் தோட்டத்திலே ஏழை மாதர் சொரியும் கண்ணீர் மண்ணிற்கலந்து ஒரு நாளும் மறைந் திடாது! காற்றிற்கலந்து ஒருகாலும் கரைந்திடாது!

அரும்படையாய் நின்று ஆதிக்கம் செலுத்துவோரை அறுத்தே தீரும்!' என்பது பாரதியார் கருத்து.

வள்ளுவர் காட்டிய நெறியைக் கடைப்பிடித்து வாழ்தலே மாந்தர்க்கு நலந்தரும் என்பதைத் தமது அனுபவத்தால் அறுதியிட்டுக் கூறுகிறார் பாரதியார். இன்பம் பெறுதற்குரிய வழி யாது என்னும் வினாவிற்குப் பலர் பலவாறு விடை கூறுவர். வள்ளுவர் கூறும் விடையாவது, அறத்தால் வருவதே இன்பம் என்பது.

*''அறத்தான் வருவதே இன்பம்; மற் றெல்லாம்*
*புறத்த; புகழும் இல.''*

என்ற அருமைத் திருக்குறள் பாரதியார் உள்ளத்தைக் கவர்ந்தது. தாம் மெய்யாக் கண்டவற்றை வள்ளுவர் எல்லோரும் அறிந்து உய்யும் வண்ணம் இனிய முறையில் எடுத்துரைக்கின்றார்.

*'அறம்ஒன் றேதரும் மெய்யின்பம் என்றநல்*
*அறிஞர் தம்மை அனுதினம் போற்றுவேன்!*
*பிறவி ருப்பி உலகினில் யான்பட்ட*
*பிழை எத்தனை கோடி! நினைக்கவும்*
*திறன்அ ழிந்துஎன் மனம்உடை வெய்துமால்!*
*தேசத் துள்ள இளைஞர் அறிமினோ!*
*அறம்ஒன் றேதரும் மெய்யின்பம் : ஆதலின்*
*அதனை யேதுணை என்றுகொண் டுய்திரால்!'*

என்று வள்ளுவப் பயனை வாயார வாழ்த்துகின்றார் பாரதியார்.

# திருவள்ளுவர் – எல்லீசர் உரை

[ஆங்கில நாட்டிலே தோன்றினர் எல்லீசர் என்னும் நல்லறிஞர்; இந்தியத் துரைத்தனத்திற்குரிய கலைகளைக் கற்றுத் தேறினர். அவர் சிறந்த மதி நலம் வாய்ந்தவர்; எப்பொருளையும் ஆராய்ந்து மெய்ப்பொருள் காணும் மேதை.

அரசியலார் அவரைச் சென்னை நிலவரி மன்றத்தின்† செயலாளராக முதலில் நியமித்தனர். எட்டாண்டுகள் அவர் அம்மன்றத்தில் சிறந்த பணி புரிந்தார்; அக்காலத்தில் தென்னாட்டுக் காணியாட்சி* முறைகளைக் கற்றார்; காணியாளருடைய கடமையையும் உரிமையையும் தெள்ளத் தெளிய அரசியலாருக்கு உணர்த்தினர். மிராசு முறையைக் குறித்து அவர் எழுதிய நூல் இன்றும் ஆதாரமாகக் கொள்ளப்படுகின்றது.

பின்னர்ப் பத்தாண்டுகள் எல்லீசர் சென்னைக் கலெக்டராய் இருந்தார்; அப்போது இந்திய நாட்டு மொழிகளைக் கற்றுணர ஆசைப்பட்டார்; நல்லாசிரியர்களின் உதவி பெற்று வடமொழியும் தென்மொழியும் வருந்திக் கற்றார். தென்னாட்டில் வழங்கும் மொழிகளுள் தமிழ் மொழியின் செம்மையும் தொன்மையும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தன. சென்னையில் சிறந்த தமிழ்ப் புலவர்களாய் விளங்கிய சாமிநாத

† *நிலவரி மன்றம்* - Board of Revenue
* *காணியாட்சி* - Land Tenure

பிள்ளை, இராமசந்திரக் கவிராயர் முதலியோருடன் ஏட்டுச் சுவடிகளில் அமைந்த தமிழ் நூல்களை அவர் நாள்தோறும் மெய் வருத்தம் பாராது கற்ருர். பழந் தமிழின் பண்புகளைப் பளிங்குபோலக் காட்டும் திருக் குறளை மேல் நாட்டாரும் அறிந்து போற்ற வேண் டும் என்பது அவருடைய ஆசை. அந்நோக்கத்தைக் கொண்டு திருக்குறளுக்கு ஆங்கிலத்தில் அவர் விளக்கமான விரிவுரை ஒன்று எழுதத் தொடங்கினுர். ஆனுல், அப்பணி முற்றுப் பெருது போயிற்று. அடியும் முடிவுமின்றி அது அரைகுறையாக அச்சிடப் பட்டிருக்கின்றது. அந்நூல் ஒன்றே எல்லீசரது தமிழ்ப் புலமைக்கு அழியாத நினைவுச் சின்னமாய் நிலவுகின்றது.]*

தமிழ் மொழியில் உள்ள நூல்களிலே தலை சிறந் தது திருக்குறள். அந்நூலைப் பொதுமறை என்றும், தமிழ் மறை என்றும் தமிழ் மக்கள் போற்றுவார்கள். தென்னுட்டில் எழுந்த திருக்குறள், எந்நாட்டவர்க் கும், எக்காலத்தவர்க்கும், எச்சமயத்தவர்க்கும் பொது நூலாய் இலங்குகின்றது. அந்நூலின் அருமை அறிந்து, பழங்காலத்தில் சங்கப் புலவர்கள் பாமாலை சூட்டினுர்கள்; சான்ருேர்கள் அந்நூலைச் சான்ருக எடுத்துக் காட்டினுர்கள்.

ஓதற்கு எளிதாய், உணர்தற்கு அரிதாய் உள்ள திருக்குறளை விளக்குவதற்கு, உரைகள் பல எழுந் தன. உரை செய்தவர் ஒரு காலத்தவரல்லர்; ஒரு சமயத்தவரல்லர்; ஒரு கொள்கையினரல்லர். முன்

* பதிப்பாளர் முன்னுரை

ளில் பத்துப் புலவர்கள் அந்நூலுக்கு உரை இயற்றினார்கள் என்று ஒரு பழம்பாட்டுக் கூறுகின்றது. இந்நாளில் மேலை நாட்டு அறிஞர்களும் திருக்குறளின் பெருமை அறிந்து போற்றுகின்றார்கள். அவர்கட்கு வழி காட்டியவர், இத்தாலிய தேசத்திலிருந்து தமிழ் நாட்டிற்போந்து இயேசுமத சேவை செய்த வீரமாமுனிவர். ஆங்கில நாட்டு அறிஞர் அவரைப் பின்பற்றினர்.

சென்னை மாகாணத்தில் அரசாங்க சேவை செய்வதற்காக வந்த ஆங்கிலநாட்டு அறிஞர்களுள் சிலர் தமிழ் மொழியை விரும்பிக் கற்றனர்; அதன் அருமை பெருமைகளை அறிந்து போற்றினர். அன்னவருள் ஒருவர் எல்லீஸ் என்பவர். Francis Whyte Ellis என்பது அவர் முழுப் பெயர். சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னே, அவர் சென்னையிலே சேவை செய்ய வந்தார். அப்போது, அவர் இருபது வயதுக்கு உட்பட்ட இளைஞர். பொறுப்புள்ள அரசாங்க வேலையில் ஈடுபட்டிருந்த போதிலும், எல்லீசரது விருப்பம், பாரதநாட்டு மொழிகளிலும் கலைகளிலும் கவிந்தது. வடமொழியாகிய ஆரியத்தையும், தென்மொழியாகிய திராவிடத்தையும் அவர் கருத்தூன்றிக் கற்றார்; திராவிட மொழிகளுள் தலைமை சான்ற 'தேமதுரத் தமிழ்' அவர் செவியையும் சிந்தையையும் கவர்ந்தது.

அந்நாளில் தமிழ் நூல்கள் அச்சிடப்படவில்லை. ஏட்டுச் சுவடிகளில் அடங்கியிருந்தன. ஆயினும், தமிழறிந்த தக்காரைத் துணைக்கொண்டு, வேலை

யொழிந்த நேரத்தில் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும், திருக்குறள் முதலிய சிறந்த இலக்கிய நூல்களையும் மெய் வருத்தம் பாராது அவர் ஓதியுணர்ந்தார். அவருடன் இருந்து தமிழ்க் கல்விக்குத் துணை புரிந்தவர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள், இராமசந்திரக் கவிராயரும், வித்துவான் சாமிநாத பிள்ளையும் ஆவர். இவ்விருவரும் செய்த நன்றியைப் பாட்டாலும் உரையாலும் பாராட்டியுள்ளார் எல்லீசர்.

அக்காலத்தில் நாட்டு மொழிகளைப் பேணிப் பாதுகாப்பதற்காக ஒரு கல்விச்சங்கத்தை அமைத்தது சென்னை அரசாங்கம். The College of Fort St. George என்னும் பெயரால் அமைந்த அச்சங்கத்தில், பொறுப்புள்ள உறுப்பினராய் எல்லீசர் அமர்ந்து பணி செய்தார். நல்ல தமிழ் நூல்களைத் தொகுப்பதற்கும், அவற்றைப் படிப்பதற்கும் சென்னைக் கல்விச் சங்கம் அவர்க்குச் சிறந்த சாதனமாயிற்று. அச்சங்கம் வாயிலாக அவர் செய்த சேவையை அறிந்தோர் அவரை வாயாரப் புகழ்ந்துரைத்தனர். "கொழுகொம்பில்லாது அலைகொடி போலும், கொழுநன் இல்லாக் குலக்கொடி போலும் ஆதாரமின்றித் தேய்ந்து கிடந்த ஆரியம், தெலுங்கு, மலையாளம் முதலிய இத்தேச பாஷைகளில் தேர்ந்து, தமிழ்க் கல்விச் சங்கம் நாட்டுதற்கு வேண்டும் முயற்சி செய்து அமைத்து அப்பலகலைச் சங்கத்தைப் பாண்டியனைப் போலப் பாதுகாத்தார் எல்லீஸ் துரை," என்பது ஒருவர் பாராட்டுரை.

இவ்வாறு தமிழ் நலம் பேணிய எல்லீசர், திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளைத் தலைக்கொண்டு போற்றினர்; தமிழகத்தின் செம்மைக்கும் சீர்மைக்கும் சிறந்த சான்றாய் நின்றிலங்கும் முப்பாலாகிய திருக்குறள் எப்பாலவரும் இசைந்து ஏற்றுக் கொள்ளத்தக்க உலகப் பொது நூல் என்று கருதினர்; ஆங்கில மொழி வாயிலாக அதன் செம்மையை மேலை நாட்டார்க்குக் காட்ட ஆசைப்பட்டார்; ஆழமும் அழகும் வாய்ந்த திருக்குறளின் கருத்துக்களைப் பிற நாட்டார் உள்ளவாறு உணர்ந்துகொள்ள வேண்டுமாயின், அந்நூலை மொழி பெயர்த்தல் மட்டும் போதாது; விளக்கமான உரையொன்றும் இன்றியமையாதது என்று எண்ணி ஆங்கிலத்தில் ஒரு விரிவுரை எழுதினர்.

எல்லீசர் இயற்றிய திருக்குறளுரை ஆங்கில அறிவாளர்க்கு ஒரு நல்விருந்து; தமிழ்க் கலைவாணர்க்கு ஒரு களஞ்சியம். அவ்வுரையில் எடுத்தாளப்படுகின்ற நூல்களே, அவருடைய கல்விப் பெருக்கத்தையும், கலையின் விளக்கத்தையும் எடுத்துக் காட்டும். சங்க நூல்களும், சமய நூல்களும், காவியங்களும், புராணங்களும் அவருரையிலே கலந்து இலங்கக் காணலாம். சங்க இலக்கியங்கள் என்று புலவர்கள் பாராட்டும் திருமுருகாற்றுப்படையும் புறநானூறும் அதில் எடுத்தாளப்படுகின்றன; நீதி நூல்களாகிய நாலடியும் பழமொழியும், அருள் நூல்களாகிய திருவாசகமும் திருவாய்மொழியும் ஆங்காங்கு அமைந்து அழகு செய்கின்றன; சிந்தாமணி முதலிய சிறந்த காவியங்களும், பெரிய புராணம் முதலிய அரிய

புராணங்களும் காட்சி தருகின்றன ; வேதாந்த நூல்களாகிய பகவத்கீதையும் ஞானவாசிட்டமும், சித்தாந்த நூல்களாகிய திருமந்திரமும் திருவருட் பயனும் ஏற்ற இடங்களில் அமைந்து இலங்கு கின்றன ; இன்னும், கிறிஸ்தவர் போற்றும் பைபிள் என்னும் வேத நூலின் கீதங்களும், வீரமாமுனிவர் இயற்றிய தேம்பாவணிப் பாடல்களும் விளக்கந் தருகின்றன ; மேலே நாட்டு அறிவாளர்களாகிய சிசரோவின் செம்மொழிகளும், அரிஸ்டாட்டிலின் அரிய மொழிகளும் அழகுற மிளிர்கின்றன.

இவ்வாறு எல்லீசர் வளமுற இயற்றிய உரை யின் செம்மையைச் சிறிது பார்ப்போம் : திருக்குற ளின் முதல் அதிகாரமாய் விளங்குவது கடவுள் வாழ்த்து என்பது. எல்லாச் சமயங்களுக்கும் பொது வான இறைவனது தன்மையைப் பத்துக் குறளால் உணர்த்துகின்றார் திருவள்ளுவர்; ஆதி பகவன் என்று முதற்குறளிலே இறைவனைக் குறிக்கின்றார். பகவன் என்னும் சொல் பல சமயத்தாரும் வழிபடும் பரம்பொருளை உணர்த்தும். "பகவனே ஈசன், மாயோன், பங்கயன், சினனே, புத்தன்" என்று பகர்ந்தது பண்டை நிகண்டு. எனவே, சிவனை வணங்கும் சைவருக்கும், திருமாலைச் சேவிக்கும் வைணவருக்கும், அருகனை வழிபடும் சமணருக்கும், புத்தனைப் போற்றும் சாக்கியருக்கும், பிற பெயர் களால் பரம்பொருளை வணங்கும் பிற சமயவாதி களுக்கும் பொதுவாய் அமைந்தது திருக்குறளில் உள்ள கடவுள் வாழ்த்து என்பது தெளிவாய்த் தெரி கின்றது.

ஆயினும், சமய வாதிகள் தத்தம் சமயக் கொள்கைக்கு ஏற்றவாறு உரை எழுதினார்கள். அதனால், கருத்து வேற்றுமை உண்டாயிற்று. இவ் வாறு வேறுபட்ட கருத்துக்களையெல்லாம் எல்லீசர் நன்கு ஆராய்ந்து நல்லுரை காண முயன்றார். அவ ருடைய உரை நலத்தை இப்போது காணலாம்:

*" அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது."*

என்ற குறளுக்குப் பலர் பல வகையாகப் பொருள் கூறிப் போந்தனர். இந்தக் குறளில், 'அறவாழி அந்தணன்' என்பது கடவுளைக் குறிக்கின்றது. அந்தணன் என்ற சொல்லுக்கு அருளுடையவன், கருணையுடையவன் என்பது பொருள். அறவாழி அந்தணன் என்ற பெயர் அருக தேவனுக்கே பொருந்தும் என்பது சமணர் கொள்கை. அன்னார் கொள்கைப்படி அறவாழி என்பது தரும சக்கரம். தரும சக்கரத்தையுடையவன் அருகன். இதற்குச் சான்றாகச் சிந்தாமணி என்னும் பெருங்காவியத்தை யும், சூடாமணி என்னும் நிகண்டையும் எடுத்துக் காட்டுவர் சமணப் புலவர்கள். 'அறவாழி அண்ணல்' என்று அருகதேவனைக் குறிக்கின்றது சிந்தாமணி. 'அறவாழி வேந்தன்' என்பது அருகனுக்குரிய பெயர்களுள் ஒன்று என்று சூடாமணி கூறுகின்றது. எனவே, தமிழ் இலக்கிய மரபிற்கு ஏற்ப, அறவாழி அந்தணன் என்னும் சொல்லுக்கு அருகன் என்றே பொருள் கொள்ளுதல் வேண்டும் என்பர் சமணர்.

இந்தப் பொருளைத் திருக்குறளுக்குச் சிறந்த உரையெழுதிய பரிமேலழகர் ஏற்றுக்கொள்ளவில்லை. அறவாழி என்பதற்குத் தரும சக்கரம் என்ற பொருள் பொருந்தாது என்பது அவர் கருத்து. ஆழி என்பது கடல்; அறவாழி என்பது அறக்கடல், அல்லது தரும சமுத்திரம் என்று பொருள்படும். இறைவன், அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவாகவுடையவன். ஆதலால், திருவள்ளுவர், இறைவனை அறவாழி அந்தணன் என்றார் என்பது பரிமேலழகர் கொள்கை.

இவ்விரண்டு கொள்கைகளையும் நன்றாக விளக்குகின்றார் எல்லீசர். அவருக்குக் கிடைத்த உரைகள் மூன்று : பரிமேலழகர் உரை ஒன்று ; கவிராஜ பண்டிதர் என்ற சமணர் உரை ஒன்று; வீரமாமுனிவர் உரை ஒன்று. முனிவர் உரையை Latin Commentary என்று எல்லீசர் குறிப்பிடுகின்றார். அறவாழி அந்தணன் என்பதற்குப் பரிமேலழகர் சொல்லும் பொருள் சிறந்ததோ, அன்றிச் சமணர் சொல்லும் பொருள் சிறந்ததோ என்ற தொல்லையான ஆராய்ச்சியில் எல்லீசர் ஈடுபடவில்லை ; இருதிறத்தார் கருத்தையும் எடுத்துரைத்து மேற்செல்கின்றார்.

அந்தக் குறளிலே, பிறவாழி என்ற சொல்லும் வருகின்றது. 'பிறவாழி நீந்தல் அரிது' என்ற திருக்குறளடியில் 'பிறவாழி' என்பதற்குப் பொருள் யாது ? இதிலும் கருத்து வேறுபாடு உண்டு. பிறவியாகிய கடலே பிறவாழி என்னும் சொல்லாற் குறிக்கப்பட்டது என்பது சமணப் புலவர் கருத்து. எனவே, பிறவியாகிய கடலைக் கடந்து கரையேறுவதற்கு

அருகனுடைய திருவடித்துணை இன்றியமையாதது என்று அன்னார் பொருள் கொள்ளுவர்.

பரிமேலழகர் இதற்கு வேறு வகையாகப் பொருள் கூறுகின்றார். அறம், பொருள், இன்பம் எனப்படும் மூன்றனுள் அறக்கடல் அறவாழியென்று முன்னே கூறப்பட்டமையால், ஏனைய பொருட்கடலும் இன்பக் கடலும் பிறவாழி என்னும் சொல்லால் குறிக்கப் பட்டன என்பது பரிமேலழகர் கருத்து. அறக்கடலாகிய இறைவனுடைய திருவடியைச் சேர்ந்தாலன்றி, பொருட்கடலையும் இன்பக் கடலையும் கடக்க முடியாது என்பது அவர் கொள்கை.

இந்த உரைகளை ஆராய்ந்தார் எல்லீசர். பிறவாழி என்ற சொல்லுக்கு வேறு ஒரு பொருள் கண்டார் அவர். அறவாழிக்கு மாறானது பிறவாழி. அறவாழி என்பது அறக்கடல் என்றால் பிறவாழி என்பது பாவக் கடல். எனவே, அறமே உருவாயுள்ள இறைவன் திருவடியே பாவக்கடலைக் கடப்பதற்கு ஏற்ற சாதனம் என்று பொருள் உரைத்தார் எல்லீசர். ஆங்கிலத்தில் அறவாழி என்பதை Sea of Virtue என்றும், பிறவாழி என்பதை Sea of Vice என்றும் அவர் மொழி பெயர்த்துள்ளார்.

இவ்வாறு, எல்லீசர் தமது அறிவால் கண்ட பொருளைப் பழைய உரையாசிரியர்களுள் ஒருவர் கொண்டுள்ளார் என்பது இப்போது தெரிகின்றது. திருக்குறளுக்கு முன்னையோர் இயற்றிய பத்து உரைகளில் நாடறிந்த பரிமேலழகர் உரையைத் தவிர, பரிதி, மணக்குடவர், காளிங்கர் ஆகிய மூவரும் செய்த உரை இக்காலத்தில் கிடைத்துள்ளன.

அவற்றைத் தொகுத்து, ‘திருக்குறள் - உரை வளம்’ என்னும் பெயரால் தருமபுர ஆதீனம் வெளியிட்டிருக்கின்றது. அந்த நூலிலுள்ள பரிதியுரை எல்லீசருரையை ஆதரிக்கின்றது. சைவ உரையாசிரியராகிய பரிதியார் எழுதியுள்ள உரையைப் பார்ப்போம்: “தருமம் என்னும் சமுத்திரமாகவுள்ள பரமேசுரன் பாதத் துணையில்லாதார் பாவக்கடலை நீந்தமாட்டார்,” என்ற உரை எல்லீசர் உரையை ஒத்திருக்கிறதன்றோ?

திருவள்ளுவரைப் பற்றித் தமிழ் நாட்டில் வழங்கும் கதைகளையும், மேலை நாட்டார் அறிந்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டார் எல்லீசர். இல்லறமே நல்லறம் எனக் கருதிய திருவள்ளுவர், வாசுகியென்ற பெண்ணை மணந்தார் என்றும், அடிசிற்கினியளாய், அன்புடையளாய், படி சொல் தவருத பாவையாய் அவள் வாழ்ந்தாள் என்றும், வாழ்க்கைத் துணையாய் அமைந்த அந்நல்லாள் இறந்த பொழுது அவர் வருத்தமுற்று ஒரு பாட்டுப் பாடினர் என்றும் கதை கூறுகின்றது. இக்கதையையும் பாட்டையும் ‘வாழ்க்கைத்துணை நலம்’ என்ற அதிகாரத்திற்கு எழுதிய உரையிலே எடுத்துக் காட்டுகின்ருர் எல்லீசர்.

*“அடிசிற் கினியாளை ஆக்கம்செய் வாளைப்*
*படிசொற் படிகட வாளை—அடிவருடிப்*
*பின்துஞ்சி முன்னெழூஉம் பேதையைவிட் டையையோ*
*என்துஞ்சும் என்கண் ணிணை!”**

என்பது எல்லீசர் எடுத்துக் காட்டும் பாட்டு.

* அவர் கண்ட பாட்டுக்கும், இப்போது நாட்டில் வழங்கும் பாட்டுக்கும் சிறிது வேற்றுமை உண்டு.

இப்படியே புறநானூற்றிலிருந்து அவர் எடுத்து மேற்கோளாகக் காட்டும் செய்யுளிலும் பாடபேதம் காணப்படுகிறது. 'எந்நன்றி கொன்றார்க்கும் உய் வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்ற திருக்குறளின் பொருளை விளக்குவதற்கு அவர் எடுத்துக் காட்டும் புறநானூற்றுப் பாட்டிலே,

" குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வருவாய் மருங்கிற் கழுவாயு முளவே "

என்ற பாடம் காணப்படுகின்றது. ஆனால், இப்போ துள்ள புறநானூற்றுப் பதிப்புக்களிலே,

" பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவே "

என்ற அடிகள் காணப்படுகின்றன.

இங்ஙனம், திருக்குறளுக்கு நல்ல விரிவுரை யொன்று செய்யத் தலைப்பட்ட எல்லீசர் வாழ்வு நாற்பதாம் வயதிலேயே முடிந்துவிட்டது. அறுபத் தொன்பது குறளுக்கு அவர் எழுதிய உரை மட்டும் கிடைத்தது. அதைத் தலையும் காலும் இல்லாமல் பேரும் காலமும் போடாமல், முந்நூற்று நான்கு பக்கங்கொண்ட நூலாக யாரோ வெளியிட்டிருக்கின் றார்கள். அதைப் பாதுகாத்து நல்ல முறையில் அச்சிட்டுப் பல்லோரும் அறியப் பரப்புதலே திரு வள்ளுவருக்கும் எல்லீசருக்கும் தமிழகம் செய்யத் தக்க சிறந்த கைம்மாறாகும்.*

---

* இந்நூல் இப்பொழுது சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் அச்சிடப்பட்டுள்ளது.

# மேலைநாட்டு அறிஞரின் கலைத்தொண்டு

இவ்வுலகில் வழங்கும் செம்மை சான்ற தொன் மொழிகளுள் தமிழ் மொழியும் ஒன்றென்று மொழித் திறமறிந்தோர் கூறுவர். ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே, நெடியோன் மலையை வட எல்லையாகவும், குமரித்துறையைத் தென்னெல்லை யாகவும் கொண்டு திகழ்ந்த திருநாட்டில் தமிழ் மொழி தோன்றி வளர்ந்த வரலாறு இன்று காறும் புதை பொருளாகவே அமைந்துள்ளது. ஆயினும், இக்காலத்தில் வெளி வந்துலவும் பழந் தொகை நூல்களைத் துணைக்கொண்டு ஆராயும் பொழுது அக்காலத்து அந்தணரும் அரசரும், வணிகரும் வேளிரும் வளமார்ந்த தமிழ் மொழியை ஆதரித்து வளர்த்த ஆர்வம், பளிங்கு போல் விளங்குவதாகும். இன்னும் பிறவா யாக்கைப் பெரி யோனை வழிபட்ட சைவரும், நீலமேனி நெடி யோனை வழிபட்ட வைணவரும், பூமலியசோகின் புனைநிழலமர்ந்த அருகனை வழிபட்ட சமணரும், போதிமரத்தடியிலமர்ந்த புனிதனை வழிபட்ட புத்தரும் பைந்தமிழ் மொழியைப் போற்றி வளர்த்தார்கள். இங்ஙனம், சாதி மதச் சுழி கடந்து, காலமென்னும் கடும்புனலாற்றில், தமிழ்க் கலம் களித்துலாவியது.

இத்தகைய தொன்மை வாய்ந்த தமிழ் மொழியைச் சென்ற இரு நூற்றாண்டுகளாகப் பிற

நாட்டு நல்லறிஞரும் போற்றி வளர்த்து வருகின்றனர் கள். ஐரோப்பிய நாடுகளில் சீரும் சிறப்புமுற்று விளங்கும் கிறிஸ்தவ மதக் கொள்கைகளைத் தமிழ் நாட்டிற் பரப்பக் கருதி இங்குப்போந்த பாதிரி மார்கள், அருந்தமிழ் மொழியை ஆர்வத்தொடு பயிலத் தொடங்கினர்கள். இயேசு மதக்கொள்கை களைத் தமிழ் மக்கள் மனத்தில் பசுமரத்தாணிபோலப் பதிக்கக் கருதிய இப்பெரியார்கள், பிழையறப் பேசவும் எழுதவும் விரும்பித் தமிழ் மொழியிலமைந்த சிறந்த நூல்களை ஆர்வத்துடன் ஆராயத் தலைப்பட்டார்கள். அறநூல்களிற்சிறந்த திருக்குறளையும், அருஞ்சுவை நிரம்பிய பெருந்தமிழ்க் காவியங்களையும் முயன்று பயின்ற பொழுது, அந்நூல்களின் தெள்ளிய சுவை அன்னர் உள்ளத்தை அள்ளுவதாயிற்று. தமிழ் மொழியைப் போதியவளவு கற்றுப் போதனை செய்யக் கருதிய அவ்வறிஞர்கள் மதுவுண்டு தேக்கிடும் வண்டு போன்று, செழுந்தமிழ்த்தேனை மாந்தித் திளைத் தார்கள். இத்தகைய மேலை நாட்டறிஞருள், இத் தாலிய நாட்டினின்றும் தமிழகம் போந்து, தமிழ் மக்களொடு கலந்துறைந்து, விழுமிய புகழ் பெற்ற வீரமாமுனிவரே தலைசிறந்தவராவர். ஐரோப்பிய நாடுகளில் உயர்தனிச் செம்மொழிகளாகக் கருதப் படும் இலத்தீன், கிரீக்கு முதலிய மொழிகளில் அமைந்த செழுங்கலைகளைச் செவ்வனம் ஓதி உணர்ந்து, செல்வத்துட்செல்வமாய செவிச்செல்வம் பெற்ற இம்முனிவர், அருந்தமிழ் மொழியின் அகலங் காண விரும்பிப் பல்லாண்டு முயன்று பயின்றனர். அறம் மணக்கும் திருக்குறளின் அருஞ்சுவையையும்,

தமிழ் மணக்கும் சிந்தாமணியின் செழுஞ்சுவையையும், கலை மணக்கும் கம்பன் கவிச் சுவையையும் கலந்து நுகர்ந்த முனிவர் உள்ளம், பள்ளத்துட் பாயும் வெள்ளம் போல மற்றைய தமிழ்ப்பனுவல்களிலும் பரந்து படர்வதாயிற்று. தாளுண்ட நீரைத் தலையாலே தரும் தெங்கின் தகைமை வாய்ந்த இம் முனிவர், தமிழ் மொழிக்கு ஆற்றிய தொண்டு அருமை வாய்ந்ததாகும்.

தைரியநாதர் என்றும், வீரமாமுனிவர் என்றும் தமிழகத்திற் புகழ் பெற்ற இவ்வறிஞரே, தமிழ் அகராதியின் தந்தையாராவார் என்று கூறுதல் மிகையாகாது. தமிழ் மொழியில் அமைந்த சொல்லின் பொருளை அறிந்துகொள்வதற்கு முற்காலத்தில் நிகண்டுகளே சிறந்த சாதனமாயமைந்தன. பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலிய பல நிகண்டுகள், தமிழ் மொழியில் விளங்கக் காணலாம். பாக்களால் அமைந்த இந்நிகண்டுகள் யாவும் கற்றோர்க்கேயன்றி மற்றோர்க்குப் பயன்படாதனவாயின என்பது சொல்லாமலே விளங்கும். கவி பாடும் புலவர்க்கும், பொருள் தேரும் அறிஞர்க்குமே இவை பெருந்துணையாயிருந்தன. கற்றோரேயன்றி மற்றோரும் தமிழின் நீர்மையறிந்து இன்பமும் பயனும் எய்த வேண்டுமென்று கருதிய வீரமாமுனிவர், 'சதுர் அகராதி' என்னும் பெயரால் ஒரு சிறந்த அகராதி செய்து உதவினார். அவ்வகராதி பாக்களால் அமைந்த நிகண்டுகள் போலாது, தமிழ்ச்சொற்களை அகரமுதலாக எடுத்தடுக்கிப் பொருள் விளக்கிய பான்மையால் தமிழ்ப்பெருங்கடற்கு அஃது ஓர் மரக்

கலமாய்த் திகழ்ந்ததென்று அந்நூற்பாயிரம் எடுத்துரைக்கின்றது. அவ்வகராதி அளவிற்சிறியதாயினும், அருமை வாய்ந்ததென்பதில் ஐயமில்லை. பிற்காலத்தில் தமிழில் எழுந்த பேரகராதிகட்கெல்லாம், ‘சதுர் அகராதி’ கலங்கரை விளக்கம் போல நின்று நெறி காட்டும் தகைமையொன்றே அதன் பெருமைக்குப் போதிய சான்ருகும். பெயர், பொருள், தொகை, தொடை என்னும் நான்கு பகுப்புடையதாய் நலமுறத் திகழும் சதுரகராதி பத்தொன்பதாம் நூற்ருண்டில் எழுந்ததாகும்.

தமிழ் அகராதியின் தந்தையாராய வீரமாமுனிவர் தேம்பாவணி என்னும் நறுந்தமிழ் மாலை புனைந்து தமிழணங்கைப் போற்றுவாராயினர். யூதேய நாட்டிற் பிறந்து, சேசுநாதரைக் கைத்தாதையாக வளர்த்துப் புகழ் பெற்ற சூசையப்பர் என்னும் வளன் பெருமை கூறும் தேம்பாவணியில் தெய்வத் திருக்குறளின் தெள்ளிய மணமும், சிந்தாமணியின் செவ்விய கற்பனை நலமும், கலை மலிந்த கம்பன் கவி நயமும் ஆங்காங்கு அமைந்து அழகு செய்யக் காணலாம்.

அரியதோர் அகராதி தொகுத்தும், அருங்காவியம் இயற்றியும் தண்டமிழ்மொழிக்குத் தொண்டு செய்த வீரமாமுனிவர், நன்னூல் முதலிய பன்னூல்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, தொன்னூல் விளக்கம் என்னும் பெயரால் ஒரு செந்தமிழ் இலக்கணம் செய்தருளினர். இந்நூல் எழுத்து முதல் அணியீருகவுள்ள ஐந்திலக்கணங்களையும் அழகுறத்

தொகுத்துரைக்கின்றது. நன்னூல் போலவே இந் நூலும் நூற்பாவால் அமைந்துள்ளது. நூல் வழக்கில் அமைந்த செந்தமிழ் மொழியின் திட்பநுட்பமுணர்ந்து ஐந்திலக்கண நூலும் உரையும் எழுதிய அருந்தமிழ் முனிவர், உலகவழக்கிலமைந்த தமிழையும் இனிதறிந்து, 'கொடுந்தமிழ்' என்னும் பெயரால் இலத்தீன் மொழியில் ஓர் இலக்கண நூல் வரைந்து உதவினார். தமிழ் மொழியைப் பிழையறப் பேசவும் எழுதவும் கருதி முயலும் பிற நாட்டறிஞர்க்கு இந் நூல் பேருதவி புரிவதாகும்.

பழம்பெருமை வாய்ந்த தமிழ் மக்கள் பண்பினை இத்தாலிய நாட்டினரும் இனிதுணருமாறு, தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் இயற்றிய திருக்குறளின் அறத்துப்பாலையும் பொருட்பாலையும், வீரமாமுனிவர் இலத்தீன் மொழியிற் பெயர்த்தமைத்தார். இன்னும் இவர் இயற்றிய காவலூர்க்கலம்பகம், கித்தேரியம்மானை முதலிய சிறு காப்பியங்களும், வேதியர் ஒழுக்கம், வேதவிளக்கம், குரு பரமார்த்தன் கதை முதலிய உரைநடை நூல்களும் தமிழ்த் தாயின் திருமேனியை அழகு செய்யும் அணிகலன்களாகும்.

சதுர் அகராதியை அடிப்படையாகக் கொண்டு, தனித்தமிழ் அகராதிகளும், தமிழ் - ஆங்கில அகராதிகளும் எழுந்தன. இவ்வாறு எழுந்த அகராதிகளுள், கற்று வல்ல புலவர்க்கும், கலை பயிலும் மாணவர்க்கும் உற்ற துணையாய் நின்றுதவியது மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் வெளியிட்ட 'சொல் அகராதி'யேயாகும். சொற்பொருளை விளக்குதலோடு,

அச்சொல் அறிஞர் வாக்கில் மிளிரும் பான்மையை யும் எடுத்துக் காட்டும் சொல்லகராதியின் முறை அருந்தமிழ்ப் புலமை பெற விரும்புவோர்க்குப் பெரும் பயன் விளைப்பதாகும்.

இனி, சதுர் அகராதியைத் துணைக்கொண்டு இந்நாட்டில் எழுந்த தமிழ்-ஆங்கில அகராதிகளின் வரலாற்றைச் சுருக்கமாக ஆராய்வோம். இற்றைக்கு நூருண்டுகளுக்கு முன்னரே, இத்துறையில் உலையா ஊக்கம் கொண்டு உழைத்த மேலை நாட்டறிஞராய 'இராட்லர்' என்பார்க்கு ஆங்கிலத் தமிழுலகம் மிக்க கடப்பாடுடையதாகும். விவிலிய நூலைப் பரப்பும் நோக்கத்துடன் இந்நாட்டில் நிறுவப்பெற்ற வேத மடத்தைச் சார்ந்த 'இராட்லர்' என்னும் நல்லறிஞர், பல்லாண்டுகளாகத் தமிழறிந்தோரைத் துணைக் கொண்டு உழைத்து, தமிழ்-ஆங்கில அகராதி ஒன்று தொகுத்தார். ஆயினும், அவ்வகராதியை அச்சிட்டு வெளிப்படுத்து முன்னமே அவர் இம்மண்ணுலக வாழ்வை நீத்தார். பல்லாயிரக் கணக்கான தமிழ்ச் சொற்களைப் பிழையற ஆராய்ந்து, அவற்றின் பொருளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் விளக்கிப் போந்த இவ்வறிஞரது ஆர்வம் அளவிடற்பால தன்று. இவ்வகராதி நான்கு பகுதிகளாய் ஆயிரத்து எண்ணூற்று முப்பத்தாரும் ஆண்டு முதல் வேத மடத்தினரால் வெளியிடப் பெற்றது.

இவ்வகராதியைத் தழுவி விரிவாக எழுந்த வின்சுலோ அகராதியே, இன்றுகாறும் சிறந்த தமிழ்-ஆங்கில அகராதியாய் நின்று நிலவுகின்றது.

அமெரிக்கர் மடத்தின் ஆதரவில் எழுதப் பெற்ற இப்பேரகராதியைப் பதிக்கும் பொறுப்பும் சிறப்பும் வின்சுலோ என்னும் மேலைநாட்டறிஞர்க்கு வாய்த்தன. எடுத்த பணியைத் தொடுத்து முடிக்கும் மனத்திண்மை வாய்ந்த இவ்வறிஞர், பல்லாண்டு பணி செய்து, கைப்பொருளின்றிக் கவலையுற்று, ஒன்பதாண்டளவில் அகராதியை அச்சியற்றி முடித்த வரலாறு அதன் முகவுரையில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. அகராதியின் செலவு அளவு கடந்துசென்றமையால், அமெரிக்க மடத்தினர் அதன் பொறுப்பை யேற்று நடத்த இயலாது வருந்தினர். முந்நூற்று அறுபது பக்கம் அச்சேறி முடிந்த அளவில் அகராதி வேலை முறிந்துவிடுமோ என்னும் அச்சம் பிறந்தது. சென்னை அரசாங்கத்தாரின் உதவியை ஆசிரியர் வின்சுலோ நாடிய பொழுது, அன்னார் முன்னரே வாக்களித்திருந்த முறைமையில், அகராதி முற்றுப் பெற்ற பின்னர் நூறு படிகள் விலை கொடுத்து வாங்க இசைந்தனரேயன்றி, முன்பணம் கொடுத்து உதவ முற்பட்டாரல்லர். எஞ்சி நின்ற பகுதிகளை அச்சிட்டு முடித்தற்குப் பின்னும் பல்லாயிரம் ரூபாய் இன்றியமையாதிருந்தமையால், பங்கொன்றுக்கு இரு நூறு ரூபாயாக, எழுபது பங்குகள் சேர்த்து, அத் தொகையைக்கொண்டு அகராதியை முற்றுவிக்க ஆசிரியர் வின்சுலோ முயன்றார். ஆயினும், அவர் கருதியவாறு பங்குகள் விலைப்படாமையால், கடன் கொண்டும் செய்வன செய்தலே நன்றென்று துணிந்து, ஐயாயிரம் ரூபாய் கடன்பட்டு, ஆசிரியர் அகராதியை அச்சிட்டு வெளிப்படுத்தினார். இவ்வாறு

கருமமே கண்ணுக, அரிய உழைப்பினை நல்கிய மேலை நாட்டறிஞரின் ஊக்கமும் தியாகமும், நம் உள்ளத்தைக் கவர்ந்து நன்றியை எழுப்புவனவாகும்.

இப்பேரகராதியைப் பின் பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் புதியதொரு தமிழ்-ஆங்கில அகராதி வெளியிடப்பட்டு வருகின்றது.* இப்புதிய அகராதியின் வரலாற்றையும் சுருக்கிக் கூறுதல் பொருத்தமுடையதாகும். இற்றைக்கு ஏறக்குறைய எழுபதாண்டுகளுக்கு முன்னர் எழுந்த வின்சுலோ அகராதியின் அருமையறிந்த சென்னை அரசியலாரும் தமிழ் அறிஞரும், அதனைப் புதுக்கி அச்சிட்டால் பெரும்பயன் விளையும் என்று கருதினர்கள். அவ்வகராதியின் முதற்பதிப்பு முழுமையும் சில ஆண்டுகளில் செலவாகிவிட்டமையால், அதன் பிரதி கிடைத்தல் அரிதாயிற்று. அகராதியின் பதிப்புரிமை அமெரிக்கர் மடத்தின் உடைமையாய் அமைந்திருந்தது. இரண்டாம் பதிப்பை ஏற்று முடித்தற்குப் போதிய பொருள் அம்மடத்தாரிடம் இல்லை. அன்றியும், அறுபத்தேழாயிரம் சொற்களுக்கு மேல் அடங்கிய அகராதியைப் புதுக்கியமைத்தற்குப் புலமை சான்ற பதிப்பாளரும் கிடைப்பதரிதாயிருந்தது. இவ்வாறு போதிய ஆர்வமிருந்தும் பொருளாதாரமின்றி ஏக்கற்று நின்ற நிலையினைச் சீமையில் வாழ்ந்த போப்பையர் அறிந்தார். பல்லாண்டு தமிழ் நாட்டில் உழைத்துப்பழுத்து முதுமையுற்றுச் சீமைக்குச் சென்று, விழுமிய திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து ஆறுதலுற்றிருந்த அருந்தமிழ்த்

* இக்கட்டுரை 1932-ஆம் ஆண்டில் எழுதப்பெற்றது.

தொண்டராகிய போப்பையர் இக்குறையை அறிந்து மனங்குழைந்தார். நெடுங்கடல் கடந்து மீண்டும் தமிழ் நாட்டிற்போந்து பணி செய்தற்குரிய உடல் நலமற்றிருந்த ஐயர், தமிழறிந்த தக்கார் ஒருவரைத் தம்பால் அனுப்பக் கூடுமாயின், வின்சுலோ அகராதியைத் தாமே புதுக்கியும் விளக்கியும் முடித்துத் தருவதாகச் சென்னை அரசாங்கத்தார்க்கு அறிவித்தார். அவர் எழுதிய நிருபத்தைச் சென்னை அரசாங்கத்தாரும், பல்கலைக் கழகத்தாரும் ஆராய்ந்து முடிவு செய்வதன் முன்னமே, 1907-ஆம் ஆண்டில் போப்பையர் ஆவி துறந்தார். ஆயினும், தமிழ் மொழியின்பால் வைத்த தலையாய அன்பினால் ஐயர் ஆதரித்துத் தொகுத்திருந்த அருந்தமிழ்க் குறிப்புக்கள் அனைத்தையும், அவர் புதல்வர், சென்னையில் அமைந்துள்ள கீழைநாட்டுக் கையெழுத்து நூல் நிலையத்திற்கு (Madras Oriental Manuscript Library) அன்பு கூர்ந்து அனுப்பி வைத்தார். அப்பொதிகளில் அமைந்த குறிப்புக்களை ஆராய்ந்த தமிழ்ப் புலவர்கள் புதியதோர் அகராதி வெளியிடுதல் நன்று என்று சென்னை அரசாங்கத்தார்க்கு அறிவித்தார்கள். அப்பொழுது தென்னாட்டில் வதிந்த 'சாண்ட்லர்' என்னும் ஆங்கிலப் பாதிரியார் ஒரு செவ்விய முறை வகுத்துச் சென்னை அரசியலார்க்கு அனுப்பினார். அரசாங்கத்தார் அம்முறையை ஆதரித்துப் புதிய அகராதி அச்சிடும் வகைக்கு நூறாயிரம் ரூபாய் உதவ இசைந்தனர். ஐந்தாண்டளவில் முற்றுப்பெறுமென்று அரசாங்கத்தார் கருதிய பேரகராதி 1913-ஆம் ஆண்டு தொடங்கி

இன்றளவும் இடையீடின்றி நடந்து வருகின்றது. ஒன்பதாண்டுகள் இதன் பதிப்பாளராய் அமர்ந்து பணி செய்த 'சாண்ட்லர்' என்பார், எழுபதாம் வயதில் இளைப்பாறக் கருதி வேலையினின்று விலகிக்கொண்டார். இப்பேரகராதியின் உரிமையை அரசாங்கத்தார் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளித்துள்ளனர். பதினெண்மர் அடங்கிய ஒரு குழுவினரால் இப்பொழுது அகராதி வேலை கண்காணிக்கப் பெற்று வருகின்றது. பல்லாயிரம் ரூபாய் செலவு செய்து பல்கலைக்கழகத்தின் ஆதரவில் வெளியிடப்படும் இவ்வகராதி பயன் விளைக்குமென்பதில் ஐயமில்லை.

வீரமாமுனிவர் காலத்திற்குப் பின்னர் ஐரோப்பிய அறிஞர் சிலர் தமிழ் மொழியின் பல துறைகளையும் ஆராய்ந்தறியத் தலைப்பட்டனர். மொழி நூல் (Philology) முறையில் தமிழ் மொழியை ஆராய்ந்து அதன் தனிப்பெருமையை உணர்த்தினர் சிலர். தமிழகத்தில் முற்காலத்தில் வழங்கிய வட்டெழுத்தின் வரலாற்றையும், பிற்காலத் தமிழ் எழுத்தின் வடிவங்களையும் ஆராய்ந்து தமிழின் தொன்மையை விளக்கினர் சிலர். ஆழிவாய்ப்பட்ட பழந்தமிழ் நாட்டின் பரப்பையும் சிறப்பையும் ஆராய்ந்து அறிவித்தனர் சிலர். கல்லிலும் செம்பிலும் அமைந்த சாசனங்களைக் கற்றும், மண்ணுள் மூழ்கி மறைந்து கிடந்த பழம் பொருள்களை அகழ்ந்தெடுத்தும் தமிழகத்தின் பழைய வரலாற்றை அறிய முயன்றனர் சிலர். தமிழ் மொழியில் அமைந்த விழுமிய அறநூல்களை மேலைநாட்டு மொழிகளில் பெயர்த்தமைத்தனர் சிலர். இவ்வாறு பல துறைகளிலும் முயன்று அருந்தமிழ் மொழியின்

ஆழத்தையும் அகலத்தையும் அறிவுறுத்திய ஐரோப்பிய அறிஞர்களுக்குத் தமிழகத்தாரது நன்றி என்றும் உரியதாகும்.

பெரும்பாலும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பணிசெய்யப்போந்த இவ்வறிஞர்களின் வரலாற்றை அறிவதன் முன்னமே, அக்காலத்தில் தமிழ் மொழி இருந்த நிலையினை அறிந்துகொள்ளுதல் நன்றாகும். தொன்று தொட்டு இந்நாட்டில் வழங்கிவரும் தமிழ் மொழியை 'ஆதிசிவன் தோற்றுவித்தான்' என்று ஆன்றோர் கூறி அமைந்தனர். முத்தமிழ் முனிவராய அகத்தியர் இறைவன் அருள்பெற்று, மூன்று கவடாய் முளைத்தெழுந்த முதுமொழிக்கோர் விரிந்த இலக்கணம் அருளிப்போந்தார் என்றும், அம்முனிவரது நன் மாணவராகக் கருதப்படும் தொல்காப்பியனார், தொல்காப்பியம் என்னும் பெயரால் ஒரு சிறந்த இலக்கணம் செய்தருளினார் என்றும் கூறுவர். அகத்தியமும் தொல்காப்பியமும் தமிழ் மொழியில் எழுந்த காலத்தில், ஆரியமொழி பெரும்பாலும் பாரத நாட்டின் வடபால் அமைந்த நாடுகளில் பரவி நின்றது. வடநாட்டில் வழங்கிய மொழியை வடமொழி என்றும், தென்னாட்டில் வழங்கிய மொழியைத் தென்மொழியென்றும் பெரும்பான்மை பற்றி வழங்கினார்கள். வடமொழியையும் தென்மொழியையும் அக்காலத்து அறிஞர் இருவேறு தனி மொழிகளாகக் கருதினர் என்பதில் ஒருசிறிதும் ஐயமில்லை. தென்மொழி போலவே வடமொழியும் தொன்மை சான்ற மொழியென்றும், செம்மை சான்ற மொழியென்றும் கருதுவாராயினர்; வடமொழியைப் பாணினி முனிவற்கு வகுத்தருளிய

இறைவனே, தென்மொழியைக் குறுமுனிக்கு அறிவுறுத்தான் என்று கூறி மகிழ்ந்தனர்; தமிழ் மொழியில் ஒப்புயர்வற்ற நூலாய் விளங்கும் திருக்குறளைத் தமிழ்மறை என்றும், பொதுமறையென்றும் போற்றினர். 'செய்யாமொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த பொய்யாமொழிக்கும் பொருள் ஒன்றே,' என்று ஒரு புலவர் புகழ்ந்துரைத்தார். ஆகவே, இரு மொழியும் நிகர் என்னும் கொள்கையே சங்கத்துச் சான்றோர் கொள்கையென்பது இன்னோரன்ன சான்றுகளால் இனிது விளங்கும். தமிழ் நாட்டிற்பரவிய சாக்கிய மதத்தையும் சமணமதத்தையும் வேரறுத்து, மீண்டும் சிவநெறியைப் பரப்பத்தோன்றிய சைவச்சான்றோரும், வைணவநெறியை நிலை நிறுத்திய ஆழ்வார்களும், ஆரியத்தையும் அருந்தமிழையும் வேற்றுமையின்றிப் போற்றுவாராயினர். பண்ணார்ந்த பைந்தமிழில் பாமாலை பாடிய சைவப்பெரியார் ஒருவர், 'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்' என்று இறைவனைப் போற்றும் முறையே அன்னார் மனப்பான்மையை அறிதற்குப் போதிய சான்றாகும்.

இருமொழியும் நிகர் என்று கருதிய இப்பெரியார் காலத்திற்குப்பின், வடமொழி தெய்வமொழியென்னும் கருத்து மெல்ல மெல்லத் தமிழ் நாட்டில் நுழைவதாயிற்று. வடமொழியில் அமைந்த இதிகாசங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. வான்மிகமுனிவர் வடமொழியில் எழுதிய ஆதி காவியத்தைத் தமிழ் மொழியில் அமைக்கப்போந்த கல்வியிற்பெரிய கம்பர், "தேவ பாடையின் இக்கதை செய்தவர்" என்று

முதனூல்செய்த முனிவரைப் புகழ்ந்துரைத்தார். வடமொழி வானவர் மொழியாதலால் விழுமிய மொழியென்றும், தமிழ் மொழி மக்கள் மொழியாதலால் தாழ்ந்த மொழியென்றும் தரமிட்டுக் கருதும் வழக்கம் நாளடைவில் எழுந்தது. வடமொழியிலமைந்த புராண நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கப் புகுந்தனர் சிலர். முதனூல்களாகத் தமிழில் எழுந்த நூல்களுக்கும் வடமொழியில் முதனூல் உண்டென்று கூற முற்பட்டனர் சிலர். வடநூல் கொள்கைகளுக்கிணங்க வலிந்தும் நலிந்தும் தமிழ்ப்பெருநூல்களுக்கு உரை செய்யத் தலைப்பட்டனர் சிலர். வீரசோழியம் இயற்றிய புத்தமித்திரனும், நன்னூல் செய்த பவணந்தியாரும், சின்னூல் செய்த குணவீரனும் வடமொழி இலக்கணப் போக்கைத் தழுவி நூல்கள் இயற்றுவாராயினர். தமிழ்நாட்டிலமைந்த ஊர்ப்பெயர் மலைப் பெயர்களையும் வடமொழியிற்பெயர்த்து வழங்கத் தலைப்பட்டனர் பலர். இதைக்குறித்துத் தமிழ் நாட்டுச் சாசனங்களை ஆராய்ந்த டாக்டர் பர்னல் என்பார் கூறும் மொழிகள் ஈண்டுக் கருதத்தக்கனவாம். சாசனங்களில் வடமொழி வடிவம் புனைந்து வழங்கும் தமிழ்ப் பெயர்களை நான்கு கூறுகளாக அவர் வகுத்துரைத்துள்ளார். சில தமிழ்ப் பெயர்கள் முற்றும் வடமொழியில் பெயர்க்கப்பட்டுள்ளன என்றும், சில தமிழ்ப் பெயர்கள் தவருக வடமொழியில் பெயர்க்கப்பட்டுள்ளன என்றும், மற்றும் சில தமிழ்ப்பெயர்கள் அரைகுறையாக வடமொழியில் பெயர்க்கப்பட்டுள்ளன என்றும்,இன்னும் சில தமிழ்ப்பெயர்கள் இயற்பொருள் இழந்து வடநூற்கதைகளையேற்றுத் திரிந்து வழங்கு

கின்றன என்றும் டாக்டர் பர்னல் கூறுகின்றார்.

இவ்வாறாக வடமொழி உயர்ந்ததென்றும் தமிழ் மொழி தாழ்ந்ததென்றும் கற்றாரும் கல்லாரும் கருதினமையால், தமிழ் என்னும் சொல்லே வட மொழிச் சிதைவு என்ற கொள்கை தமிழ் நாட்டில் பரவுவதாயிற்று. திராவிடம் என்னும் வடசொல் திராமிடம், திராமிளம், திரமிளம், தமிளம், தமிழ் என்று ஆயிற்றென்று இலக்கண நூலோர் சிலர் எடுத்துரைப்பாராயினர். இன்னும், தமிழ் இலக்கணம் வடமொழி இலக்கணத்தைத் தழுவி எழுந்ததே என்று பிரயோகவிவேகம் என்ற இலக்கண நூல் கூறுவதாயிற்று. தமிழ் தனிமொழியன்றென்றும், வடமொழியே தமிழுக்குத் தாய்மொழியென்றும் இலக்கணக்கொத்துரைத்த தேசிகர் எழுதுவாராயினர்.

*" ஐந்தெழுத் தால்ஒரு பாடையும் உண்டென*
*அறையவும் நாணுவர் அறிவுடை யோரே;*
*வடமொழி தமிழ்மொழி யெனுமிரு மொழியினும்*
*இலக்கணம் ஒன்றே என்றே எண்ணுக."*

என்று தமிழ் மொழியைத் தனிமொழியென்று கருதும் கொள்கையைத் தேசிகர் இழித்துரைத்தார். பிரயோக விவேகமும் இலக்கணக் கொத்தும் பதினேழாம் நூற்றாண்டில் எழுந்தனவாகும்.

இத்தகைய கொள்கைகள் வேரூன்றி நின்ற தமிழ் நாட்டில், பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலை நாட்டின் கலை ஒளி வீசுவதாயிற்று. காலையில் எழும் கதிரவன்போல, கால்டுவெல் என்னும் மொழி நூற் புலவர் இந்நாட்டில் தோன்றினார். தென்தமிழ் நாடாகிய திருநெல்வேலியிலமைந்த இடையன்குடியென்னும்

சிற்றூரைத் தம் இருப்பிடமாகக் கொண்ட இவ்வறிஞர், உலக வழக்கினும் நூல் வழக்கினும் அமைந்த அருந்தமிழ் மொழியை ஆர்வமுறப் பயின்றார். இவ்வாறு கால்டுவெல் தமிழ் மொழியைக் கற்றுவருங் காலத்து, மலையாளமொழியைக் குந்தார்த்தர் என்னும் மேலை நாட்டறிஞர் மொழிநூல் முறையில் ஆராயத் தலைப்பட்டார். கர்னாடக நாட்டில் வழங்கும் கன்னட மொழியைக் கிட்டல் என்னும் கலைவாணர் கற்கத் தொடங்கினார். ஆந்திர மொழியை ஆர்டன் முதலிய மேலை நாட்டறிஞர் ஆராய முற்பட்டனர். தமிழ் மொழியின் ஆழத்தையும் அகலத்தையும் ஆராய்ந்தறிந்த கால்டுவெல் ஆசிரியர், நாற்றிசையினின்றும் நல்லொளி வீசக்கண்டு மகிழ்ந்தார். தமிழோடு மிக்க தொடர்புடைய மலையாள மொழியை முட்டறக் கற்ற குந்தார்த்தர் என்னும் மொழிநூற் புலவர், மலையாள இலக்கணமும் மலையாள அகராதியும் எழுதிப் போந்தார். கன்னட மொழியை நிலைகண்டுணர்ந்த கிட்டல் என்னும் கலைவாணர், தாம் ஆராய்ந்தறிந்த உண்மைகளை அரிய கட்டுரைகள் வாயிலாக வெளிப்படுத்தினார். ஆந்திர மொழியை ஐயமறக் கற்றுணர்ந்த ஆர்டன் என்னும் ஆசிரியர், தெலுங்கு மொழியின் இலக்கணத்தைத் தெரிவிப்பாராயினர். இவ்வாராய்ச்சிகளின் பயனாக, கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையாளமும் தமிழ் மொழியோடு நெருங்கிய தொடர்புடைய மொழிகள் என்பது வெள்ளிடை மலை போல விளங்குவதாயிற்று. இந் நான்கு சிறந்த மொழிகளும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளே என்பதும், இவற்றுள் மிக்க

தொன்மையும் செம்மையும் வாய்ந்த மொழி தமிழே என்பதும் ஆசிரியர் கால்டுவெல் உள்ளத்தில் தெளி வாய் விளங்கின.

தென்னாட்டில் வழங்கி வரும் திருந்திய மொழி களும் திருந்தாத மொழிகளும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளே என்று முதன்முதற் கண்டு உணர்த்திய பெருமை கால்டுவெல் ஆசிரியருக்கே உரியதாகும். தமிழ் மொழியின் தொன்மையையும் செம்மையையும் ஐயந்திரிபற உணரக்கருதும் அறிஞர் கள், ஏனைய திராவிட மொழிகளின் இலக்கண அமைதி களையும் ஆராய்ந்தறிதல் இன்றியமையாததென்று இவ்வாசிரியர் வலியுறுத்திப் போந்தார். தமிழ் இலக் கணத்தைத் திட்பமாகவும் நுட்பமாகவும் பயின்ற தமிழறிஞர் திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணத்தை யும் உணர்வாராயின் பல நுண்ணிய பொருள்களைத் தெள்ளிதின் உணர்வர் என்று திருத்தமாக எடுத் துரைத்தார். மேலைநாட்டு மொழிநூல் முறையில் இவ்வாசிரியர் எழுதியமைத்த 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் விழுமிய நூலின் அடிப்படை இன்றும் அசைவுறுதிருக்கின்றது.

ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் இத் தகைய ஒப்புயர்வற்ற நூலியற்றித் தமிழ் மொழிக்குக் காலத்தில் உதவி செய்த கால்டுவெல் ஆசிரியர் கருத்துக்களைச் செவ்வையாக ஆராய்ந்து பழையன கழித்துப் புதியன புகுத்திப் பழந்தமிழ் மொழிக்குப் பணி செய்தல் கற்றறிந்தோர் கடமையாகும்.

# பரங்கியர் போன வழி

பாரத நாட்டைவிட்டுப் பரங்கியர்* வெளியேறும் காலம் நெருங்கிவிட்டது. அவர் போனாலும் தமிழ் நாட்டிலுள்ள பரங்கிமலை போகாது; பரங்கிக்காய் போகாது; பரங்கிப்பேட்டை போகாது; 'பரங்கியைத் துரை யென்ற காலமும் போச்சே' என்ற பாட்டும் போகாது.

பரங்கியர் தமிழகத்திற் போந்து தமிழ் மக்களொடு கலந்து பழகிய காலத்தில் சில பரங்கிச் சொற்கள் பழகு தமிழில் புகுந்து வழங்கலாயின. அவற்றுள் ஒன்று வீடுதோறும் உள்ள சன்னல். 'பின்னல் இல்லாத தலையில்லை; சன்னல் இல்லாத வீடில்லை,' என்று பெண்கள் பேசிக்கொள்வதுண்டு. சன்னல் என்பது பரங்கியர் சொல் என்றால், அன்னார் வருவதற்கு முன் சன்னல் வைத்து வீடு கட்டும் வழக்கம் தமிழ் நாட்டில் இல்லை என்று எண்ணிவிடலாகாது. பழங்காலத்தில் சிறப்புற்று விளங்கிய காவிரிப்பூம் பட்டினத்தின் கடற்கரையில் 'காலதர்' வைத்த மாளிகைகள் கண்ணுக்கினிய காட்சியளித்தன என்று செந்தமிழ்க் காவியமாகிய சிலப்பதிகாரம் கூறுகின்றது. 'காலதர்' என்பது சன்னல். கால் என்பது காற்று; அதர் என்பது வழி. வீட்டினுள்ளே காற்று வரும் வழியைக் காலதர் என்றனர் பண்டைத் தமிழர். 'விண்டோ' என்ற ஆங்கிலச் சொல்லுக்கும் பொருள் அதுவே என்பர். பல கண்களையுடைய காலதருக்குப்

---

* பரங்கியர் என்பார் போர்ச்சுகீசியர்.

'பலகணி' என்பது பெயர். இவற்றோடு 'சாளரம்' என்ற சொல்லும் முன்னாளில் வழங்கி வந்தது. "சாளரந் தோறும் தோன்றும் சந்திர வுதயம் கண்டார்" என்று பாடினார் கம்பர். இப்போது இம்மூன்று சொற்களும் பெரும்பாலும் ஏட்டுத் தமிழில் அடங்கி விட்டன; சன்னல் என்பது வீட்டுத் தமிழாய் விட்டது.

வீடுதோறும் உள்ள தாப்பாளை (தாழ்ப்பாளை)த் திறப்பதற்குப் பயன்படும் கருவியைத் திறவுகோல் என்பர் தென்னாட்டார். மலையாள நாட்டில் அதனைத் தாக்கோல் (தாழ்க்கோல்) என்பர். ஆயினும், இப்பொழுது 'சாவி'யே நாடெங்கும் வழங்குகின்றது. பூட்டைத் திறப்பது சாவி; கடியாரத்திற்குக் கொடுப்பது சாவி. இந்தச் 'சாவி' பரங்கியர் தந்த சொல். இதனோடு 'கீ' என்ற ஆங்கிலச் சொல்லும் கிளிமொழி போல வழங்கி வருகின்றது.

கோழி தமிழ் நாட்டுப் பழம்பொருள். தென்னிந்திய மொழிகளில் எல்லாம் கோழி என்ற சொல் உண்டு. சோழ நாட்டின் பழைய தலைநகராகிய உறையூருக்குக் கோழி என்பது மறு பெயர். மேல் கடற்கரையிலுள்ள ஓர் ஊரின் பெயர் கோழிக்கோடு. தமிழ் மொழியின் சிறப்பெழுத்தாகிய ழகரம் பரங்கியர் வாயில் நுழையவில்லை. அவர் அதனை ரகரமாக்கினர். அதனாலன்றோ சோழ மண்டலம் என்ற அழகிய சொல் 'கோரமண்டல்' ஆயிற்று?

தமிழ் நாட்டுக் கோழியின் பண்பும் பயனும் அறிந்த பிறநாட்டார், அதனைத் தம் நாடுகளில்

கொண்டு வளர்ப்பாராயினர். கோழிப் பண்ணை பெருகிற்று. மத்திய ஆசியா வழியாக ரஷ்யாவுக்கும் சென்றது தமிழ் நாட்டுக் கோழி. ரஷ்ய மொழியில் கோழியைக் குறிக்கும் 'கூர்' என்னும் சொல் கோழியின் சிதைவே என்பர் ஆராய்ச்சியாளர்.

இவ்வாறு கோழிச் செல்வத்தைப் பேணி வளர்த்த தமிழ் நாட்டில் புது வகையான கோழிக்குலமொன்று வந்து சேர்ந்தது. அதனைக் கொண்டு வந்தவர் பரங்கியர். நாட்டுக் கோழியினும் பெரியதாய், விசிறி போன்ற சிறகுடையதாய் விளங்கிய பரங்கிக் கோழி, வான்கோழி என்று தமிழ் நாட்டில் பெயர் பெற்றது. கப்பல் வழியாகப் பரங்கியர் கொண்டு வந்த இக் கோழியைக் 'கப்பற்கோழி' என்றும் வழங்கினர்.

மேலை நாட்டு மொழியில் 'டர்க்கி' என்னும் பெயரால் குறிக்கப்படும் இக்கோழி, தமிழ் நாட்டிலே தருக்கும் செருக்கும் தலைக்கொண்டு திரிந்தது; நாட்டுக் கோழியுடன் கலந்து பழகாமல் தன்னை உயர்ந்த இனமாகக் கருதிற்று; மயிலும் தானும் ஒரு குலம் என்னும் மமதை கொண்டது; பூஞ்சோலையில் கான மயில் தோகையை விரித்து ஆடக் கண்டு தானும் அதன் அருகே தன் விசிறிச் சிறகை விரித்து வீசி வீசி ஆடிற்று. இக்காட்சியைக் கண்டார் ஒரு கவிஞர். அவர் நெஞ்சம் பொறுக்கவில்லை. கவியரங்கத்தில் மேதையரோடு பேதையரும் களி நடமாடும் காட்சி அவர் நினைவிற்கு வந்தது. அந்நிலையில் எழுந்தது ஓர் அருமையான பாட்டு.

*" கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி*
*தானும் அதுவாகப் பாவித்துத்—தானும்தன்*
*பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே*
*கல்லாதான் கற்ற கவி."*

என்ற பாட்டு இப்போது கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாகும்.

இப்பாட்டு ஔவையார் இயற்றியதாகக் கருதப் படும் 'மூதுரை'யில் காணப்படுதலால் ஓர் ஆராய்ச்சி கிளம்பிற்று. தமிழ் நாட்டிற்கு வான்கோழியைக் கொண்டு வந்தவர் பரங்கியர். அக்கோழிப் பண்ணை இந்நாட்டிலே பெருகி வளர்ந்த பின்னரே இப் பாட்டுப் பாடப்பட்டிருத்தல் வேண்டும். ஆதலால், பரங்கியர் வந்த காலத்திற்குப் பின்னும் ஓர் ஔவை யார் இருந்தார். பழங்காலத்தில் ஓர் ஔவையார், இடைக் காலத்தில் ஓர் ஔவையார், பிற்காலத்தில் ஓர் ஔவையார் என்று முடிவு கட்டினர்.

இத்தகைய ஆராய்ச்சியைத் தமிழகத்தில் எழுப் பிய வான்கோழி வாழ்க என்று வாழ்த்துகின்றோம்! வீட்டுக்குச் சன்னலும், பூட்டுக்குச் சாவியும் தந்து நாட்டைவிட்டு வெளியேறும் நிலையிலுள்ள வெள்ளைப் பரங்கியரையும் உள்ளங்கனிந்து வாழ்த்துகின்றோம்!

# மேடைப் பேச்சு

மேடைப் பேச்சுக்கு இப்போது பஞ்சமில்லை. கடற்கரையிலும் காலியிடங்களிலும், கொட்டகையிலும் கோவில்களிலும் மேடைப் பேச்சு நிகழ்கின்றது. முடியரசு நாடுகளைக்காட்டிலும் குடியரசு நாடுகளில் மேடைப் பேச்சு மிக மோடியாக நடைபெறும். பாரத நாட்டில் வேற்றரசு வீற்றிருந்த நாளில் மேடைப் பேச்சுத் தங்கு தடையின்றி நடந்ததில்லை. 'இம்மென்ருல் சிறை வாசம்! ஏன் என்ருல் வனவாசம்!' என்று பாரதியார் பாடிய வன்கண்மையைக் கண்கூடாகக் கண்டது இந்நாடு. குடியரசு நடைபெறுகின்ற இந் நாளில் பேச்சு மேடை பெருகிவருகின்றது. அரசியல் மாநாடுகள், அறிவியல் மாநாடுகள், இவற்றில் கார சாரமான பேச்சுக்களைக் கேட்கலாம். கரை புரண்டு ஓடும் வெள்ளம்போல வரை கடந்து செல்லும் சொற் பொழிவுகளும் உண்டு. இவற்றை அதிகப் பிரசங்கம் என்பர் அறிவுடையோர்.

மேடைப் பேச்சிலே பல வகையான நடைகள் உண்டு. காலால் நடக்கும் விதம் பல திறப்பட்டு விளங்குதல் போன்று சொல்லால் நடக்கும் நடையும் பல திறப்பட்டதாகும். அன்னப் பறவையின் நடையைக் கவிஞர்கள் அணிந்துரைப்பார்கள். அன்ன நடை போன்ற அழகிய நடையையும் மேடைப் பேச்சிலே காணலாம். அரிமாவுக்கு ஒரு தனி நடை உண்டு. விலங்கினங்கள் வாழும் கானகத்தில்

பெருமிதமாக நடந்துசெல்வது அரிமாவின் இயற்கை. திருவள்ளுவர் அந்நடையைப் புகழ்ந்துள்ளார். 'ஏறு போல் பீடு நடை' என்பது வள்ளுவர் வாக்கு. பீடு நடையிலே நிகழும் பெரும்பேச்சைப் பத்திரிகை உலகம் 'முழக்கம்' என்று பாராட்டும். கடற்கரை யிலோ, காந்தி மைதானத்திலோ நின்று முழக்கம் செய்வதற்கு அரிமாவின் மனத்திட்பம் வேண்டும். சபையைக் கண்டு அஞ்சாத நெஞ்சம் உடைய அறி ஞர்களே மேடையிலே நின்று பீடு நடையிற் பேச வல்லவர் ஆவர். இத்தகைய ஆற்றல் வாய்ந்தவர் பதினாயிரத்தில் ஒருவர் என்றும், நூறாயிரத்தில் ஒரு வர் என்றும் கவிஞர் கூறுவர்.

"ஆர்த்தசபை நூற்றொருவர்
ஆயிரத்தொன் றாம்புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர்"

என்று பாடினார் ஔவையார். "போர்க்களத்தில் பகைவர் முன் நின்று போர் செய்வதற்கு மனத்திட்பம் வேண்டும். அதனினும் அதிகமான மனத்திட்பம் வேண்டும் சபையின் முன்னே நின்று பேசும் அறிஞருக்கு," என்ற கருத்தைத் திருவள்ளுவர் எடுத்துரைத்தார்.

"பகையகத்துச் சாவார் எளியர், அரியர்
அவையகத்து அஞ்சா தவர்."

என்பது அவருடைய வாய் மொழி.

மேடைப் பேச்சிலே மெல்லிய பூங்காற்றுப் போன்ற இனிய நடையுண்டு; ஆற்றொழுக்குப் போன்ற அழகிய நடையுண்டு; கோடையிடி போன்ற

ஓசையுண்டு; கொண்டல் எனப் பொழியும் சொல் மாரியுண்டு; இன்னும் எத்தனையோ வகையான நடைகள் உண்டு. இக்காலத்தில் 'சொற்பொழிவு' என்ற சொல்லைத் தமிழறிஞர்கள் வழங்குகின்றார்கள். வானத்து நின்று பொழியும் மழை போல, மேடையினின்று பொழியும் சொல் மாரியைச் சொற்பொழிவு என்ற சொல் உணர்த்துவதாகும். முப்பது ஆண்டுகளுக்கு முன்னே 'சொற்பொழிவு ஆற்றுப்படை' என்ற நூலை இயற்றினார் ஒரு தமிழறிஞர். சொற்பொழிவு செய்யும் முறைகளை எடுத்துரைத்துப் பேச்சாளருக்கு நெறி காட்டுவது அவ்வுரைநடை நூல். ஆயினும்,சொற்பொழிவு என்னும் சொல், புதுச்சொல்லாய் இருந்தமையால், அந்நூலை ஏளனம் செய்யத் தலைப்பட்டனர் பலர். சின்னாளில் இறந்துபட்டது அந்நூல். ஆனால், சொற்பொழிவு என்பது வழக்காற்றில் வந்துவிட்டது. நல்ல சொற்பொழிவு, சபையின் நீர்மைக்குத் தக்க நடையில் அமையும். திருவள்ளுவர் அதன் சீர்மையை அறிவுறுத்துகின்றார்.

*"கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்*
*வேட்ப மொழிவதாம் சொல்."*

என்பது அவர் அருளிய திருக்குறள். கேட்போர் உள்ளத்தைக் கவர்ந்து மகிழ்விக்கும் நடையே சிறந்த நடையாகும். நாவன்மையுடைய சொற்பொழிவாளர் ஒருவர் பேசும் பொழுது சபையில் உள்ளார் அனைவரும் ஒரு முகமாக அவரையே நோக்குவர்; அவர் சொல்லும் சொற்களையே செவியில் ஏற்று இன்புறுவர். அக்கம் பக்கம் பார்க்கமாட்டார்; இங்குமங்கும் எழு

கின்ற ஓசைகளைக் கேட்கமாட்டார்; காலம் செல்வதை உணரமாட்டார்; கடும்பசியின் கொடுமையையும் அறியமாட்டார். இத்தகைய சொற்பொழிவைத்தான் "கேட்டார்ப் பிணிக்கும் சொல்" என்று கூறினார் திருவள்ளுவர்.

கேட்பவர்களின் ஆர்வமே நல்ல பேச்சாளருக்கு ஊக்கம் அளிப்பதாகும். சபையோர் முகம் மலர மலர, சொற்பொழிவின் தரம் உயரும்; நடையும் ஓங்கி உச்ச நிலையடையும். நயமுறப் பேசும் நாவலன் ஒருவனைத் தனியே ஓர் அறையிலே வைத்துப் பேசச் சொன்னால் பேச்சு ஓடாது; நடை நன்றாக அமையாது. எனவே, சபையாரிடமிருந்து பேச்சாளர் பெறுகின்ற உணர்ச்சியும் உள்ளக் கிளர்ச்சியுமே மேடைப் பேச்சின் நடையை உருவாக்குகின்றன என்பது மிகையாகாது.

மேடைப் பேச்சு ஒரு கலை. 'சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்,' என்று கூறினார் ஒரு கவிஞர். நூறு மேடையேறிய அறிஞனுக்கு சபையின் நாடி அடிக்கும் முறை நன்றாகத் தெரியும். நாட்டு மருத்துவன் கையின் நாடியைப் பார்த்து உடம்பின் நிலையை அறிந்துகொள்ளுதல் போன்று, சபைப் பழக்கம் உள்ள நாவலன் கேட்போர் முகக் குறிகளால் அவரது அகத்தின் தன்மையை அறிந்து கொண்டு அதற்கேற்ற நடையில் பேசுவான். சபையறிந்து பேசாத பேச்சு, சுவையற்றதாகும். இதனை லன்றோ திருவள்ளுவர்,

"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தாம்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு."

என்று பாடினார்?

தமிழ் மேடையிலே நிகழும் பேச்சில் தமிழின் பண்பு திகழ்தல் வேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வர். தமிழின் பண்பு என்பது யாது? இனிமையே தமிழின் பண்பாகும். 'யாம் அறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்!' என்று பாடினார் பாரதியார். தேமதுரத் தமிழோசையைக் கேட்கும் பொழுது தமிழ்ச் செவி திளைக்கும்; தமிழ் உள்ளம் தழைக்கும். அத்தகைய பேச்சு ஒன்றைக் கேளுங்கள்:

"நம் மக்கள் வாழ்வே தமிழ் வாழ்வு. அவர்கள் கண்டது தமிழ்; கேட்டது தமிழ்; உண்டது தமிழ்; உயிர்த்தது தமிழ்; உற்றது தமிழ். அத்தமிழ் அமிழ்தம் கொண்டநாடு இந்நாடு. இது நினைவில் உறும்போது உறும் இன்பத்தை என்னென்பேன்! என்னென் பேன்! அவ்வின்பம் நுகர்ந்த இக்காலத் தமிழ்ப் பாவலர் பெருமானாகிய நம் பாரதியார், 'செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே' என்றுகூறியிருத்தல் காண்க. இன்பத்தமிழ் நாட்டில் பிறந்த நாம் இதுபோழ்து தமிழின்பம் நுகர் கின்றோமா? இல்லையே! காரணம் என்னை? உரிமை இழந்தோம்! தமிழை மறந்தோம்! மீண்டும் உரிமை உணர்வு பெற யாண்டுப் போதல் வேண்டும்? தமிழ்த் தாயிடம் செல்வோமாக," என்று தமிழர் மகாநாட் டிலே பேசினார் ஒரு தமிழ் நாவலர்.

செவிக்கும் சிந்தைக்கும் இன்பந்தரும் செஞ்சொற்கள் தமிழ் மொழியில் ஏராளமாயிருக்க, அவற்றை விடுத்துப் பிற சொற்களை எடுத்தாளுதல், கனியிருக்கக் காயை விரும்பி அருந்துதல் போல ஆகுமன்றோ? வான ஊர்தியாகிய ஆகாய விமானத்தை ஓட்டுபவனுக்கு 'வலவன்' என்ற பெயர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய இலக்கியத்தில் உண்டு. அப்பழஞ் சொல்லை விடுத்து 'பைலட்' என்ற ஆங்கிலச் சொல்லை வழங்குதல் பண்புடைமையாகுமா? கடற்கரையிலே நின்று கப்பலுக்குத் துறை காட்டும் உயரிய விளக்கைக் 'கலங்கரை விளக்கம்' என்று செந்தமிழ்க் காவியமாகிய சிலப்பதிகாரம் குறிக்கின்றது. ஓசை நயமும் பொருள் நயமும் ஒருங்கே வாய்ந்த அச் சொல்லை வழங்காமல் 'தீப ஸ்தம்பம்' என்று ஏன் சொல்ல வேண்டும்? 'மார்க்கட்' என்ற ஆங்கிலப் பதத்திற்கு நேரான தமிழ்ச்சொல் 'அங்காடி' என்பது. பகற்பொழுதில் நடைபெறுவது 'நாளங்காடி' என்றும், அந்தி மாலையில் நடைபெறுவது 'அல்லங்காடி' என்றும் தமிழ் இலக்கியத்தில் குறிக்கப்படுகின்றன. 'மார்க்கட் விலை' என்பதற்குப் பதிலாக 'அங்காடி விலை' என்றால் என்ன கேடு? சென்னையிலுள்ள மூர்மார்க்கட்டை, 'மூரங்காடி' என்று சொன்னால் தமிழோசை சிறக்கவில்லையா? தமிழ் மொழி மறு மலர்ச்சி பெற்று வரும் இந்நாளில் மேடைப் பேச்சாளர்கள் இனிய பழஞ்சொற்களை எடுத்தாண்டு தம் நடையை அழகு செய்கின்றார்கள்.

நல்ல பேச்சாளரின் நாவசைந்தால் நாடசையும். இவ்வுண்மையைத் திருவள்ளுவரும் கூறுகின்றார்.

"விரைந்து தொழில்கேட்கும் ஞாலம், நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்."

என்பது அவர் திருவாக்கு. ஆங்கில நாட்டுக் கவிஞருள் தலைசிறந்தவராகிய ஷேக்ஸ்பியரும், தமிழ்நாட்டுக் கவியரசராகிய கம்பரும் இவ்வுண்மைக்குச் சான்று காட்டுகின்றார்கள். ஜூலியஸ் சீசர் என்பது ஷேக்ஸ்பியர் எழுதிய சிறந்த நாடகங்களுள் ஒன்று. சீசர் என்பவன் வீரருள் வீரன்; தன்னிகரில்லாத் தலைவன்; மின்னல் வேகத்தில் படையெடுத்து மாற்றாரை வென்று புகழ் பெற்றவன். இத்தகைய சீசரைக் குத்திக் கொன்றது ஒரு சதிகாரக் கூட்டம். பொல்லாச் சதிகாரருள் ஒருவன் புரூட்டஸ் என்பவன். அவன் சீசரின் நெருங்கிய நண்பன். அவன்மேடையேறி நகரப்பொது மக்களை நோக்கிப்பேசலுற்றான்: "என் நாட்டுமக்களே, சீசர் என்னுடைய சிறந்த நண்பன். சீசரின் பேராண்மையை வியந்து போற்றினேன்; அவன் பேராசையைக் கண்டு அவன் உயிரைப் போக்கினேன். இது குற்றமாகுமா ?" என்று பேசினான். அவன் பேச்சைக் கேட்ட பொதுமக்கள், "கொடுங்கோன்மை வீழ்ந்தது! புரூட்டஸ் வாழ்க !" என்று கொக்கரித்தார்கள். அப்போது சீசரின் உடல் அங்குக் கொண்டு வரப்பட்டது. அதனை எடுத்து வந்தவர்களுள் ஒருவன் 'மார்க் அந்தோணி' என்னும் அறிஞன். அவனும் சீசரின் உற்ற நண்பன்; சிறந்த பேச்சாளன். அவன் மேடை ஏறினான்; "நண்பர்களே, என் நாட்டு மக்களே, என் பேச்சுக்குச் செவி கொடுங்கள்: நான் சீசரைப் புதைக்க வந்துள்ளேன்; அவரைப் புகழ வந்தேனல்லேன்," என்று தொடங்கி, சீசர் நாட்டுக்குச் செய்த தன்னல

மற்ற சேவைகளைச் சீராக எடுத்துரைத்தான். அப் பேச்சு சபையோர் உள்ளத்தைக் கவர்ந்தது. வீரா வேசத்தை ஊட்டியது. புருட்டஸ் முதலியோர் வஞ்சக மாகச் சீசரைக் கொலை புரிந்தனர் என்று முடிவு கட்டினார்கள் பொது மக்கள். சொல் வன்மையின் பெருமையை இப்பேச்சு வாயிலாகப் புலப்படுத்து கின்றார் ஷேக்ஸ்பியர்.

தமிழ்க் கவியரசராகிய கம்பர் சொல் வன்மைக்குச் சான்றாக அனுமனை எடுத்துக் காட்டுகின்றார். அனுமன் கல்வி கேள்விகளிற் சிறந்தவன்; நயமுறப் பேசும் நாவலன். அவன் பேசும் பொழுதெல்லாம் நல்லறி வும் சொல் நயமும் நடம் புரியக் காணலாம். அவற் றுள் ஒன்றைப் பார்ப்போம்: இராவணன் தம்பியாகிய விபீஷணன் இராமனைச் சரணடையக் கருதி வந்தான். அப்போது பகைவன் உடன் பிறந்தவனாகிய அவனைக் கொள்ளுவதா, அன்றித் தள்ளுவதா என்ற கேள்வி எழுந்தது. பாசறையில் ஒரு சபை கூடிற்று. இராமன் தலைமையில் நிகழ்ந்த அச்சபையில் வீரப் பெருமக்கள் ஒருவர் பின் ஒருவராய்ப் பேசினர். எல்லோரும் ஒரு கருத்தையே வற்புறுத்தினர். "இலங்கையரசன் நம் பகைவன்; அவன் தம்பி விபீஷணன், இங்கு வஞ்சக மாக வந்தவனேயன்றித்தஞ்சமடைய வந்தவனல்லன். ஆதலால், அவனை ஏற்றுக்கொள்ளல் ஆகாது," என்று அழுத்தமாகக் கூறினார்கள். அந்நிலையில் அனுமன் எழுந்தான்; சபையை நோக்கித் தலை வணங்கினான்; அவையடக்கம் கூறினான்; "ஐயனே, இச்சபையில் பேசுதற்குரிய பெருமக்கள் எல்லோரும் பேசிவிட்டார்கள். நான் சொல்ல என்ன இருக்

கின்றது? ஆயினும், ஒன்று சொல்ல விரும்புகிறேன்,'' என்று தொடங்கி, ''விபீஷணன் அரக்கர் குலத்தில் பிறந்தவன் ஆயினும், அறநெறியில் வாழ்பவன்; பண் பாட்டிற்சிறந்தவன்,'' என்று அழகாகப் பேசினுன். மாறுபட்ட கருத்தினர் எல்லாம் மனந்திரும்பினர். இராமன் முடிவுரை கூறும்பொழுது, ''மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி!'' என்று பாராட்டினன். வணங்கிய வாயும் வளமார்ந்த செஞ்சொல்லும் உடைய அனுமனைச் 'சொல்லின் செல்வன்' என்று போற்றிப் புகழ்கின்றது செந்தமிழ் உலகம்.

# கொச்சைத் தமிழ்

பச்சைக் குழந்தைகள் பேசும் பொழுதும் பாமர மக்கள் பேசும்பொழுதும் கொச்சை மொழிகளைக் கேட்கலாம். பாமரமக்கள் பேசும் தமிழில் பொருளற்ற அடுக்குச் சொற்கள் மிகுந்திருக்கும். "பல்லுகில்லு தேச்சாச்சா? காப்பிகீப்பி சாப்பிட்டாச்சா? வீடுகீடு கிடைக்குமா ? மழைகிழை உண்டா ?" என இவ்வாறு வரும் அடுக்குச் சொற்கள் பலப்பல. இவற்றில் முதல் சொல்லுக்குப் பொருள் உண்டு. அடுத்து, எதுகையாக வரும் சொல்லுக்குப் பொருளில்லை. இப்படி வெற்று எதுகையில் வரும் சொற்கள் ககர வர்க்கத்திலே தொடங்கக் காணலாம்.

இன்னொரு வகையான அடுக்குப் பேச்சும் தமிழிலே உண்டு. 'வம்புதும்புக்குப் போகாதே; தக்குப் புக்கிண்ணு நடக்காதே; தண்டாமுண்டா பண்ணுதே; காச்சுப்பீச்சிண்ணு கத்தாதே'—இவை போன்ற அடுக்குச் சொற்களிலும் முதற்சொல்லை அடுத்துவரும் சொல்லுக்குப் பொருள் இல்லை. ஆயினும்,தொடர்ந்து வரும் சொல் ககர வர்க்கத்திலேதான் தொடங்க வேண்டும் என்ற கட்டுப்பாடில்லை. இத்தன்மை வாய்ந்த அடுக்கு மொழிகள் மெல்ல மெல்ல இக்காலப் பாட்டிலும் உரையிலும் ஏறிவிட்டன. 'வாட்டசாட்டமாய், திட்டவட்டமாய், கொஞ்சநஞ்சம், பாக்கிசாக்கி, சால மாலம்' முதலிய சொல்லடுக்குகளை நவீன நூல்களிற் காணலாம்.

இவற்றைப் பார்க்கும் போது எதுகைப் பேச்சில் பாமரமக்களுக்கு உள்ள மோகம் நன்ருகத் தெரி கின்றது. எதுகையும் மோனையும் பாட்டுக்குத்தான் அழகு என்பதில்லை; பேச்சுக்கும் அவை நன்று என்று பொது மக்கள் கருதுகின்ருர்கள். அதனாலன்ருே, எதுகை மோனை என்பதை 'எகனைமொகனை' என்று ஆக்கினுர்கள்? மோனை என்ற சொல்லோடு இசை யும் வண்ணம் எதுகை என்னும் இலக்கியப் பதத்தை 'எகனை' என்று ஆக்கிவிட்டார்களே!

இவ்வாறு எதுகை நயத்திற்காக மாற்றப்பட்ட மற்ருெரு சொல் 'நன்மைதின்மை' என்பது. நன் மைக்கு மாருனது தீமை என்று இலக்கியத் தமிழ் கூறும். ஆயினும், நன்மை தீமை என்று சொல்லும் பொழுது எதுகை நயம் இல்லையல்லவா? அதற்காகத் தீமை என்பதைத் தின்மை என்ருக்கி,நன்மை தின்மை என்று நாடோடித் தமிழில் வழங்கலாயினர். நாளடை வில் நன்மை தின்மை என்பது இலக்கியத் தமிழிலும் இடம் பெற்றுவிட்டது. கவியரசர் என்று போற்றப் படும் கம்பரே அதை எடுத்து ஆண்டுவிட்டார் என்பர்.

> " நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
> தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே "

என்ற பாட்டில் நன்மையும் தின்மையும் எதுகையில் அமைந்து அழகு செய்கின்றன.

கொச்சைத் தமிழில் பல வேறு தொழில்களுக்கும் உரிய சொற்கள் கலந்திருக்கும். சேலை துணிகளுக் குச் சாயம் ஏற்றுதல் தமிழ் நாட்டுப் பழமையான தொழில். சாயம் ஏற்றுபவனுக்குச் சாயக்காரன் என்

பது பெயர். சாயத்தில் கெட்டியானதும் உண்டு; மட்டமானதும் உண்டு. கெட்டிச் சாயம் சலவைக்கு நிற்கும். மட்டச்சாயம் ஒரு சலவையில் கரைந்து போகும். இதிலிருந்து 'சாயம் வெளுத்துப் போச்சு' என்ற வசனம் எழுந்தது. ஒருவனுடைய போலித் தன்மை நீங்கி உண்மை துலங்கும் போது அவன் சாயம் வெளுத்துப் போச்சு என்பார்கள். இதைப் போலவே கொச்சைத் தமிழில் வழங்கும் மற்றொரு வாசகம் 'காது குத்துதல்' என்பது. காது குத்து தல் தட்டார் தொழில். காதிலே கடுக்கன் தோடு முதலிய நகைகளை அணிவதற்காக இளமையிலே காது குத்தும் வழக்கம் இந்நாட்டில் உண்டு. காது நகையில் எவ்வளவுதான் ஆசையிருப்பினும் காதைக் குத்தும் பொழுது நோகத்தானே செய்யும்! கூர்மை யுள்ள கருவியைக் கையிலே தாங்கி, 'காது குத்தப் போகிறேன்' என்று சொல்லிக்கொண்டு தட்டார் வரு வாராயின், குழந்தைகள் காதைப் பொத்திக்கொண்டு கதறி அழத் தொடங்கிவிடும். இதற்காகக் காது குத்த வரும் தட்டார்கள் கைக்குள்ளே கருவியை மறைத்து வைத்துக்கொண்டு, காதைப் பார்ப்பவர்கள் போல நெருங்கி வந்து, வெடுக்கென்று குத்திவிடுவார்கள். இதிலிருந்து காது குத்துதல் என்ற பதத்திற்கே ஏமாற்றுதல் அல்லது வஞ்சித்தல் என்ற பொருள் வந்துவிட்டது. இப்படியே, 'காக்காய் பிடித்தல், குல்லாப் போடுதல், கம்பி நீட்டுதல்' முதலிய சொற்க ளும் கொச்சைத் தமிழில் வழங்கக் காணலாம்.

சென்னையில் கொச்சைத் தமிழ் வழக்கு அதிகமாக உண்டு. 'காலாடி, கில்லாடி, லம்பாடி' முதலிய சொற்

களை அடிக்கடி கேட்கலாம். காலாடி என்பது சோம்பேறியைக் குறிக்கும். சோதா என்றும் அப்பேர்வழியைச் சொல்வதுண்டு. சென்னைக்கு அருகேயுள்ள திருவொற்றியூரில் காலாடிப்பேட்டை என்ற பகுதியொன்று உள்ளது. காலாடிகளுக்கும் அவ்வூருக்கும் பெயர்ப் பொருத்தத்தைத் தவிர வேறு எவ்விதப் பொருத்தமும் இருப்பதாகத் தெரியவில்லை. நெசவுத் தொழில் செய்யும் மக்களே பெரும்பாலும் அப் பேட்டையில் வாழ்கின்றார்கள். 'அப்படியானால் காலாடிப் பேட்டை என்ற பெயர் அதற்கு எப்படி வந்தது ?' என்றால், அது ஒரு விந்தையான செய்தி. சென்னைத் துரைத்தனத்தில் 'காலெட்' என்ற ஆங்கிலேயன் மூன்று ஆண்டுகள் கவர்னராய் இருந்தான். தன் பேரை நிலைநாட்டுவதில் அவனுக்குப் பேராசை. திருவொற்றியூரில் புதிதாக ஒரு பேட்டையை உண்டாக்கி, 'காலெட் பேட்டை' என்று அதற்குப் பெயர் கொடுத்தான். 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது,' என்பது போல, 'காலெட் பேட்டை' காலாடிப்பேட்டையாய்விட்டது.

ஏட்டுத் தமிழுக்கும் பேச்சுத் தமிழுக்கும் எத்தனையோ வகைகளில் வேறுபாடு உண்டு. அவற்றுள் ஒன்றைப் பார்ப்போம். பொருளுடையவனைச் செல்வன் என்பது ஏட்டுத்தமிழ்; பணக்காரன் என்பது பேச்சுத்தமிழ். இரவலன் என்பது ஏட்டுத்தமிழ்; பிச்சைக்காரன் என்பது பேச்சுத்தமிழ். இவ்வாறு பல சொற்களில் 'காரன்' என்பது ஆண்பாற்பெயர் விகுதியாகவும் 'காரி' என்பது பெண்பாற்பெயர் விகுதியாகவும் வழங்கக் காணலாம். வீட்டுக்காரன், வேலைக்

காரன், தோட்டக்காரன், சமையற்காரன் - இவை ஆண்பாற்பெயர்கள். வீட்டுக்காரி, வேலைக்காரி, தோட்டக்காரி, சமையற்காரி-இவை பெண்பாற்பெயர் கள். ஆங்கிலவாடை அதிகமாக வீசும் இடங்களில் வேலைக்கார், தோட்டக்கார், சமையற்கார் என்று ஈறு கெட்டு வழங்குதலும் உண்டு. இதற்கும் மேலாகக் கொச்சைத் தமிழ் சென்னையில் கொழுந்து விட்டு வளர்ந்திருக்கின்றது. அண்ணன், தம்பி, அப்பன், மாமன் இவர்களை முறையே 'அண்ணங்காரன், தம்பிக் காரன், அப்பங்காரன், மாமங்காரன்' என்று கூறு வதைக் கொச்சைத் தமிழிலே கேட்கலாம். அப்படியே அக்காளை 'அக்காக்காரி' என்றும், அம்மையை 'அம்மைக்காரி' என்றும், மாமியை 'மாமிக்காரி' என்றும் வழங்குவர்.

நல்ல சில சொற்களில் வேண்டாத எழுத்துக்கள் புகுந்து விகாரப்படுத்தும் பொழுது அவை கொச்சைத் தமிழாய்விடும். எண்பது என்பது ஒரு நல்ல சொல். அதை 'எண்பளது' என்று விகாரப்படுத்துவர் தஞ்சை நாட்டார். இப்படியே 'சேவை, கோவை, தேவை' என்னும் சொற்கள், முறையே 'சேர்வை, கோர்வை, தேள்வை' என்று கொச்சைத்தமிழில் வழங்குகின்றன.

தமிழின் சிறப்பெழுத்து என்று பாராட்டப்படு கின்ற ழகரம் கொச்சைத்தமிழில் மெத்தச் சிதையும். பாமர மக்கள் நாவில் ழகரம் திட்டவட்டமாக வருவ தில்லை. திருவிழாவைத் 'திருவிஷா' என்பர் சோழ நாட்டார். சென்னையில் பழம் பயமாகும்; கழுதை கயிதையாகும்; கிழவி கேவியாவாள்; கேழ்வரகு கேவரகாகி, கூவரகாகும்.

இன்னும் கொச்சைப் பேச்சிலே எழுத்துக்கள் முறை பிறழ்ந்து ஒலிக்கும். மதுரையை 'மருதை' என்றும், குதிரையைக் 'குருதை' என்றும் கொச்சைத் தமிழர் கூறுவர். அபராதம் என்பதை 'அவதாரம்' என்பர். காஷாயம் என்ற வடசொல் காயாசம் ஆகும்.

'ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத்தாழ்ப்பாள்,' என்பது போல ஒரு பொருளைக் குறிப்பதற்கு இரு சொற்கள் கொச்சைத் தமிழில் வழங்கும். கூறைப் புடைவை என்பது அப்படிப்பட்ட சொல். தமிழ் நாடெங்கும் கூறை என்ற சொல் முன்னாளில் வழங்கிற்று. புடைவை என்பது அதன் பொருள். புடைவை நெய்யும் நாட்டிற்குக் கூறைநாடு என்ற பெயர் அமைந்தது. அதுதான் மாயூரத்திற்கு அருகேயுள்ள 'கொர நாடு'. நாளடைவில் கூறை என்பது அரும்பதமாய் விட்டது. அதன் பொருள் மழுங்கிவிட்டது. அதனால், கூறைப் புடைவை என்று இப்போது வழங்குகின்றது. பழுதை என்பது ஒரு பழமையான சொல். கயிறு என்பது அதன் பொருள். இப்போது இரண்டையும் சேர்த்துப் 'பழுதைக்கயிறு' என்று கூறுகின்றார்கள்.

இவ்வாறு இரு வேறு மொழிச் சொற்களை இணைத்துப் பேசும் முறையும் கொச்சைத் தமிழில் உண்டு: 'கேட்டு வாசல், சாப்புக்கடை' முதலிய வார்த்தைகளில் ஆங்கிலமும் தமிழும் இணைந்து வருகின்றன. 'நல்லவருக்கு அடையாளம் சொல்லாமல் பறையாமல் போவது' என்று தென்னாட்டிலே ஒரு பழமொழியுண்டு. 'சொல்லாமல்பறையாமல்'என்பதில்

சொல்லாமல் என்பது தமிழ்; பறையாமல் என்பது மலையாளம்.

ஆண் குழந்தையை 'ஆம்பளப்பிள்ளை' என்றும், பெண் குழந்தையைப் 'பொம்பளப் பிள்ளை' என்றும் கொச்சைத் தமிழ் கூறும். ஆண் பிள்ளை என்ற சொல்லில் பிள்ளை என்பது குழந்தைப் பருவத்தைக் குறிப்பதாகும். அப்படியே பெண்பிள்ளை என்ற சொல்லிலும் பிள்ளை என்பது குழந்தை நிலையைக் குறிக்கும். நாளடைவில் ஆண் பிள்ளையின் சிதைவாகிய ஆம்பளை என்பதும், பெண் பிள்ளையின் சிதைவாகிய பொம்பளை என்பதும் பருவத்தைக் குறியாது பொதுவாக ஆண் வர்க்கத்தையும் பெண் வர்க்கத்தையும் குறிப்பனவாயின. ஆகவே, குழந்தைகளைக் குறிப்பதற்கு மேலும் பிள்ளை என்ற சொல்லைச் சேர்க்க வேண்டியதாயிற்று. அப்படிச் சேர்த்ததனால் ஆம்பளைப் பிள்ளை பொம்பளைப் பிள்ளை என்ற கொச்சைப்பதங்கள் வழங்கி வருகின்றன.

இவ்வாறு கொச்சைத் தமிழில் சிதைந்து வழங்கும் சொற்களால் சில வேளைகளில் விபரீதமும் விளைவதுண்டு. சென்னையில் ஹாமில்டன் வாராவதி, ஆமிட்டன் வாராவதியாகி, அம்பட்டன் வாராவதி எனச் சிதைந்து, ஆங்கிலத்தில் 'பார்பர்ஸ் பிரிட்ஜ்' என்று மொழி பெயர்க்கப்பட்டிருப்பது நாடறிந்த செய்தியன்றோ? கும்பகோணத்திற்கு அருகே உப்பிலியப்பன் கோயில் என்னும் திருமால் திருப்பதி ஒன்று உள்ளது. அங்குள்ள பெருமாள் உப்பிலியப்பன் என்று வழங்கப்படுதலால், உப்பில்லாத நிவேதனம் அப்பெருமாளுக்கு அளிக்கப்படுகின்றது. இவ்வாறு

செய்ய நேர்ந்ததற்குக் காரணம் கொச்சைத் தமிழ் தான். 'ஒப்பிலியப்பன்' என்ற பெருமாள் திருப்பெயரை 'உப்பிலியப்பன்' என்று சிதைத்தது கொச்சைத் தமிழ்; தனக்கு உவமையில்லாத் தலைவனாகிய இறைவனை ஒப்பிலி என்னும் சொல் உணர்த்துவதாகும். 'நின்னொப்பார் பிறரின்றி நீயே ஆனாய்' என்று ஈசனைத் தேவாரம் பாடியது போன்று, திருவாய் மொழியிலே 'தன்னொப்பார் இல்லப்பன்' என்று பாடினார் நம்மாழ்வார். அவர் வாக்கின் அடியாக ஒப்பிலியப்பன் என்ற பெயர் பெருமாளுக்கு வழங்கலாயிற்று. அப்பெயர் உப்பிலியப்பன் எனச் சிதையவே, உப்பில்லாப் பண்டத்தை ஏற்கும் நிலை இறைவனுக்கு ஏற்பட்டு விட்டது.

கர்வம் பிடித்தவனை 'அகராதி பிடிச்சவன்' என்று கொச்சைத் தமிழிலே கூறுவதுண்டு. அகம்பாவத்திற்கும் அகராதிக்கும் என்ன தொடர்பு? இவ்விரண்டுக்கும் ஒரு தொடர்பிருப்பதாகப் பாமரமக்கள் கருதுகிறார்கள். 'அகராதியை ஒருவன் முற்றும் படித்துவிட்டால் எல்லாம் தெரிந்துவிட்டது என்ற மண்டைச் செருக்கு உண்டாகிவிடும்,' என்பது அவர்கள் கருத்து. 'கல்லாடம் படித்தவனோடு சொல்லாடாதே,' என்னும் பழமொழி புலவருலகத்தில் வழங்குதல் போல, 'அகராதி படித்தவனை அணுகாதே,' என்ற எச்சரிக்கை பாமர உலகத்தில் எழுந்தது போலும்!

என்பது கொச்சைத் தமிழிலே வழங்கும் மற்றொரு சொல். 'விஞ்ஞானம்' என்ற அருமையான சொல்லே 'விண்ணாணம்' என்று சிதைந்திருப்

பதாகத் தோன்றுகின்றது. வக்கணையாகவும் தோரணை யாகவும் பேசும்பேச்சுக்கு விண்ணாணம் என்பதுபெயர். குற்றாலக் குறவஞ்சி நாடகத்தில் சிங்கி என்னும் பெயருடைய குறத்தியை 'விண்ணாணச் சிங்கி' என்று கூறுகின்றான் அவள் காதலனாகிய குறவன். விண்ணாணம் பேசும் சிங்கியைக் காணாமல் கவலை யுறும் குறவன் பாட்டுச் சாலவும் இனியதாகும்.

கொச்சைத் தமிழிலே பல ஆங்கிலச் சொற்கள் கலந்து வழங்கக் காணலாம். 'ஓசி' என்பது அத்தகைய சொற்களில் ஒன்று. 'நாசிக்குப் பொடி ஓசி; வெறு வாய்க்கு வெற்றிலை பாக்கு ஓசி. ஓசி என்பது சும்மா கிடைப்பது; விலை கொடாமல் பெறுவது. இந்தச் சொல்லின் வரலாற்றைப் பார்த்தால் ஏறக்குறைய இரு நூறாண்டுகளாக இந்நாட்டில் இது வழங்கி வரு கிறது என்பது விளங்கும். ஆங்கிலக் கம்பெனியார் இந்நாட்டில் ஆட்சி செலுத்திய பொழுது அக் கம்பெனியின் சார்பாக அனுப்பிய அஞ்சல் கடிதங்களில் ஓ. சி. எஸ். என்ற முத்திரை இட்டார்கள். ஓ. சி. எஸ். என்பது 'ஆன் கம்பெனி சேர்விஸ்' (On Company Service) என்பதன் குறுக்கம். ஓ. சி. எஸ். தபால்கள் பில்லை ஒட்டாமல் எங்கும் சென்றமையால், ஓ. சி. யில் போகிறது என்ற சொல்லுக்குச் சும்மா போகிறது என்னும் பொருள் வந்தது. சீட்டுக் கச்சேரியில் ஆடுதன் என்ற சொல் அடிக்கடி வரும். ஆடுதன் என்பது (Hearts) என்ற ஆங்கிலச் சொல்லின் சிதைவு. வாட்டசாட்டமாயிருப்பவனைப் பார்த்து 'ஆடுதன் ராஜா மாதிரி இருக்கிறான்' என்று சொல்வதுண்டு.

நாட்டுப்புறங்களில் 'ஏட்டையா' என்பவரைக் கண்டால் ஒரே ஓட்டந்தான். 'ஏட்டையா' என்பவர் எட்கான்ஸ்டெபிள். ஆங்கிலச் சொல்லாகிய (Head) என்பது 'ஏட்டு' என்று சிதைந்து வழங்குகின்றது. இவ்வாறு வழங்கும் கொச்சைத் தமிழ்ச் சொற்களை ஆராய்ந்தால் பாமரமக்களின் மனப்பான்மையும் தமிழின் நீர்மைக்குத் தக்கவாறு அவர்கள் பிறமொழிச் சொற்களை எடுத்தாளும் பெற்றியும் நன்கு விளங்கும்.

# ஒலிச்சித்திரம்

'இனவேற்றுமை வேண்டற்பாலதன்று,' என்று இந்நாளில் அறிஞர் எல்லாரும் பறைசாற்றுகின்றனர். ஆயினும், இனவேற்றுமை இருந்தே தீரும் என்று அழுத்தந் திருத்தமாகக் கூறுகின்றது தமிழ் இலக்கணம். மெய்யெழுத்துக்களில் வல்லினம் ஆறு, மெல்லினம் ஆறு,இடையினம் ஆறு. எழுத்துக்களின் ஓசை பற்றி எழுந்தது இந்த வேற்றுமை.

ஓசைக்கும் ஒலிக்கும் உள்ள வேறுபாட்டை நுணுக்கமாக உணர்ந்தவர் தமிழர். எங்கும் நிறைந்த பரம்பொருளாகிய இறைவனை "ஓசை ஒலி யெலாம் ஆனாய் நீயே; உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே," என்று பாடிய திருப்பாட்டில் ஓசை வேறு, ஒலி வேறு என்பது நன்கு காட்டப்படுகின்றது. தமிழுக்கே சிறப்பாக உரிய ஒலிகளும், அவற்றைக் குறிக்கும் எழுத்துக்களும் தமிழகத்தின் தனிப்பெருஞ் செல்வம். மெல்லென்ற சொல்லால் மேலான பொருளைச் சொல்லுதல் ஓர் அழகு என்று தொல்காப்பி யம் கூறுகின்றது. "இழுமென் மொழியால் விழு மியது நுவலல்" என்று இவ்வழகைக் கூறும் நூற் பாவிலேயே மூன்று ழகரம் முறையாய் அமைந்து செவிக்கு இன்பம் பயக்கின்றது.

பழமுதிர் சோலை என்னும் அழகர் மலையைப் பாடு கின்றார் நக்கீரர். அம்மலையிலே ஒல்லென ஒலிக்கும்

அருவியை ஒரு சொல்லோவியமாக அவர் எழுதிக் காட்டுகின்றார்.

> "இழும்என இழிதரும் அருவிப்
> பழமுதிர் சோலை மலைகிழ வோனே"

என்ற இரண்டு அடிகளில் நான்கு ழகரம் நன்றாய் அமைந்து நல்லின்பம் தருகின்றன.

குழந்தைகள் பேசும் மழலைச் சொற்களைக் கேட்டு மகிழ்ந்தார் திருவள்ளுவர். "குழல் இனிது யாழ் இனிது என்பர், தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர்" என்று அழகாகப் பாடினார். சிலப்பதிகாரக் கதாநாயகி யாகிய கண்ணகியின் மதுரமான மழலைச் சொல்லை அவள் காதலன் வாயிலாக வியந்து புகழ்கின்றார் இளங்கோவடிகள். செல்வக் குடியிலே பிறந்து, செல்வனாகிய கோவலனை மணந்து, செழுமையாய் வாழ்ந்த கண்ணகி, இளங்கிளிகளைக் கையிலே வைத்துக்கொண்டு இங்கிதமாய்ப் பேசுகின்றாள். அவள் பேசப்பேச அப்பசுங்கிளிகளின் முகம் வாடு கின்றது. அப்போது அங்கு வருகின்றான் கோவலன்; கிளிகளின் வாட்டத்திற்குக் கண்ணகியின்மெல்லென்ற இனிய சொல்லே காரணம் என்று உணர்கின்றான்; உடனே தன் காதலியின் சொல் நயத்தைப் பாராட்டு கின்றான்.

> "அளிய தாமே சிறுபசுங் கிளியே
> குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தநின்
> மழலைக் கிளவிக்கு வருந்தின"

என்று பேசுகின்றான்; "கண்ணகீ! குழலின் ஒலியும் யாழின் இசையும், அமிழ்தின் சுவையும் வெல்லும்

இனிமை வாய்ந்தது உன் தமிழ்ச் சொல். எத்தனை நாள் முயன்ருலும் உன்னைப் போல அழகாகப் பேச இயலாதே என்ற ஏக்கத்தால் உன் கையில் உள்ள கிளிகள் வாடி வருந்தின,'' என்று புகழ்கின்ருன்.

தமிழ் இலக்கணத்தில் சிறப்பு ழகரம் என்று குறிக்கப்படும் இவ்வொலி, ஆதியில் தென்னிந்திய மொழிகளில் எல்லாம் வழங்கிற்று. ஆனல், நாளடைவில் தெலுங்கும் கன்னடமும் இவ்வொலியை இழந்து விட்டன. மலையாளமும் தமிழும் சிறப்பு ழகரத்தை இன்றளவும் பாதுகாத்துப் போற்றி வருகின்றன. "எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி என்றென்றும் வாழியவே!'' என்ற பாரதியார் பாட்டைப் பாடும் பொழுது தமிழ் மக்கள் செவியில் சிறப்பு ழகரத்தின் இன்பத் தேன் வந்து பாய்கின்றது என்பதில் ஐயமுண்டோ ?

கம்பர் கவிதையில் ஒலியோவியங்கள் நூற்றுக் கணக்காக உண்டு. ஒன்றைப் பார்ப்போம்: பஞ்சவடிச் சாலையை நோக்கி வருகின்ருள் சூர்ப்பணகை; தன் இயற்கை உருவத்தை மறைத்து, இனிய வடிவம் புனைந்துகொண்டு, மினுக்கும் தளுக்குமாகப் பர்ண சாலையின் அருகே வருகின்ருள். அவள் நடந்து வரும் கோலத்தை ஓர் ஒலிச்சித்திரமாக எழுதிக் காட்டுகின்ருர் கம்பர்.

*"பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம்அ னுங்கச்*
*செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி*
*அஞ்சொல்இள மஞ்ஞையென அன்னமென மின்னும்*
*வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்."*

என்பது கம்பர் இசைத்த இன்கவி. மெல்லோசை உடைய சொற்கள் நிறைந்து இருத்தலால் சிறந்த இன்பம் தருகின்றது இப்பாட்டு. இதனை 'மெல்லிசை வண்ணம்' என்பர் தொல்காப்பியர்.

தமிழ் எழுத்துக்களில் வல்லினம் என்றோர் இனம் உண்டு. வீரம் கோபம் முதலிய வன்மையான உணர்ச்சிகள் உள்ளத்திலே பொங்கி எழும்பொழுது வல்லோசையையுடைய சொற்கள் இயற்கையாகவே வாயிற் பிறக்கும். சிலப்பதிகாரத்தில் உள்ள வல்லோசைச் சித்திரங்களைச் சிறிது பார்ப்போம்: மதுரை மாநகரில் தன் கணவன் கொலையுண்டான் என்று கேட்ட பொழுது கண்ணகியின் உள்ளத்தில் சீற்றம் பொங்கி எழுந்தது. குற்றம் ஒன்றும் செய்யாத தன் நாயகனைக் கொடுமையாகக் கொன்றானே மதுரை மன்னன் என்று கோபம் கொண்டாள் அக் கற்பரசி; கனலும், புனலும் சொரியும் கண்களோடு தலை விரி கோலமாய் அரண்மனையை நோக்கிச் சென்றாள்; அங்கு அரசனுடைய காவலாளனைக் கண்டாள். நீதியற்ற கொடுங்கோல் மன்னனது மாளிகையைக் காத்து நின்ற காவலனைக் கண்ட நிலையில் அவளது கடுஞ்சினம் பொங்கி எழுந்தது. வல்லோசை செறிந்த சொற்களை வீசி எறிந்தது அவள் வாய்.

> *"வாயி லோயே ! வாயி லோயே!*
> *அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து*
> *இறைமுறை பிழைத்தோன் வாயி லோயே!"*

என்று அவள் பேசிய மொழிகளில் ஆறு றகரங்கள் நின்று பொரிகின்றன. 'குழலும் யாழும் அமிழ்

தும் குழையப் பேசிய கண்ணகிதானா இப்படிப் பேசு கின்றாள்!' என்று திகைக்கின்றோம்.

மேலும், கண்ணகியின் வல்லோசை நிறைந்த மொழிகளை வஞ்சினத்திலே கேட்கின்றோம். "அற நெறிக்கு மாறாய் நடந்த அரசன் அழிந்தான். அது மட்டும் போதாது. மன்னனைத் தீநெறியிற் செலுத் திய தீயவரும் மதுரை மாநகரில் உள்ளனர். அவரும் ஒழிய வேண்டும்!" என்று எண்ணினாள் கண்ணகி. வெடித்த சொற்களால் தன் உள்ளத் தீயை அள்ளி வீசினாள்.

*"மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்*
*பட்டாங் கியானும்ஓர் பத்தினியே யாமாகில்*
*ஒட்டேன் அரசோடு ஒழிப்பேன் மதுரையையும்!"*

என்ற வீரப் பேச்சில் டகரமும், றகரமும், தகரமும் செறிந்து வல்லோசையின் ஆற்றலைக் காட்டுகின்றன. இவ்வாறு ஓசையாலும் ஒலியாலும் உள்ளத்தில் எழு கின்ற உணர்ச்சிகளைக் காட்டும் கவிதையைத் தமிழிலக் கியத்திலே காண்பது ஓர் இணையற்ற இன்பம்.

# ஆடையும் அணியும்

ஆடையும் அணியும் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் நாட்டில் உண்டு. 'ஆடையில்லாதவன் அரை மனிதன்,' என்பது இந்நாட்டுப் பழமொழி. ஆடை நெய்யும் தொழில் நினைப்பிற்கு எட்டாத நெடுங்கால மாகத் தமிழகத்தில் நடந்து வருகின்றது. பட்டு நூலாலும், பருத்தி நூலாலும், கம்பளத்தாலும் பல வகைப்பட்ட ஆடைகள் நெய்யும் தொழிலாளர்கள் பண்டைத் தமிழ் நாட்டில் சிறந்து வாழ்ந்தார்கள் என்று சிலப்பதிகாரம் முதலிய செந்தமிழ் நூல்கள் கூறுகின்றன. அந்நாளில் நெசவுத் தொழில் சிறப்பாக நடைபெற்ற இடங்களிற் சிலவற்றைத் தெரிந்துகொள்வதற்கேற்ற சான்றுகள் உண்டு. கொரநாடு என்பது தமிழகத்திலுள்ள ஓர் ஊரின் பெயர். அங்கு நெய்யப் படும் புடைவை கொரநாட்டுப் புடைவை என்று இன்றும் வழங்குகின்றது. 'கொரநாடு எங்கே உள்ளது? அதற்குக் கொரநாடு என்ற பெயர் எப்படி வந்தது?' என்று பார்ப்போமானால், நெசவுத் தொழில் முன்னாளில் எத்துணை விரிவாய் நிகழ்ந்தது என்பது ஒருவாறு விளங்கும். மாயவரம் என்னும் மாயூரத்திற்கு அருகே உள்ளது கொரநாடு. கூறை நாடு என்ற பெயரே கொரநாடு என மருவி வழங்குகின்றது. கூறை என்பது ஆடை. இப்போது அச்சொல் வழக்காற்றில் இல்லை. ஆனால், முற்காலத்தில் அது பழகு தமிழில் வழங்கிய

சொல்; பாட்டிலும் உரையிலும் பயின்ற சொல். தேவாரம் அச்சொல்லை எடுத்தாளுகின்றது.

*''இம்மை யேதரும் சோறும் கூறையும்*
*ஏத்த லாம்இடர் கெடலுமாம்*
*அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு*
*யாதும் ஐயுற வில்லையே.''*

என்பது சுந்தரர் பாடிய தேவாரம். 'இறைவனுகிய ஈசனை உள்ளன்போடு வழிபட்டால் இம்மையில் உண்ண உணவும், உடுக்க உடையும் கிடைக்கும்; மறுமையில் சிவலோக வாழ்வும் சித்திக்கும்,' என்பது இப் பாட்டின் கருத்து.

இப்பாட்டிலே உள்ள கூறை என்ற சொல்லைத் தமிழ் நாட்டார் இப்பொழுதும் அறவே மறந்துவிடவில்லை. கூறைச்சேலை என்ற தொடர் மொழியிலே அச்சொல்லைக் காணலாம். கூறைச்சேலை என்பது முழுத்த வேளையில் மணமகள் உடுத்துக்கொள்வதற்காக மணமகன் வீட்டார் கொடுக்கும் சேலை. கூறை என்பதற்கும் சேலை என்பதற்கும் பொருள் ஒன்றுதான். ஆயினும், கூறை என்ற பழைய சொல்லின் பொருள் மழுங்கிவிட்டமையால், சேலை என்ற சொல்லையும் அதனேடு சேர்த்து இக்காலத்தினர் கூறைச்சேலை என்று வழங்குகின்றனர். கூறை நெய்யும் நாடாகத் தமிழ் நாட்டில் முற்காலத்தில் பேரும் புகழும் பெற்றிருந்த கூறை நாடு இப்பொழுது பேரும் மாறி, சீரும் குன்றி, ஒரு சிற்றூராய் இருக்கின்றது.

ஆதியில் மரப்பட்டைகளையும் விலங்கின் தோல்களையும் மக்கள் ஆடையாகச் செய்து உடுத்தார்கள்

என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். பழந்தமிழ் இலக்கியத்தில் மரவுரி ஆடை குறிக்கப்படுகின்றது. மாதவம் புரிந்த முனிவர் ஒருவரை 'மரவுரி உடையன்' என்று மணிமேகலை கூறுகின்றது. சீரை என்ற சொல்லும் மரவுரியைக் குறிக்கும். திருஆவினன்குடி என்னும் பழனி மலையில் முருகனை வழிபடப் போந்த முனிவர்கள் சீரை உடுத்திருந்தனர் என்று திருமுருகாற்றுப்படை குறிக்கின்றது.

மலை நாட்டில் வாழ்ந்த மக்கள் இலைகளாலும் தழைகளாலும் செய்யப்பட்ட ஆடையை முன்னுளில் உடுத்திருந்தார்கள். மரவுரியும் பசுந்தழையும் மலை நாட்டில் வாழும் மக்களுக்குரிய உடைகள் என்று ஒரு குறத்திப் பாட்டுக் கூறுகின்றது. பொதியமலைக் குறவஞ்சி பாடுகின்றாள்:

''பழம்பிழிந்த கொழுஞ்சாறுந் தேறலும்வாய் மடுப்போம்
பசுந்தழையும் மரவுரியும் இசைந்திடவே யுடுப்போம்.''

என்னும் பாட்டில் பசுந்தழையையும் மரவுரியையும் உடுத்த மலை நாட்டு மக்களின் வாழ்க்கை நன்கு எடுத்துக் கூறப்படுகின்றது.

காட்டு விலங்குகளாகிய மான், புலி, யானை முதலியவற்றின் தோல்களும் ஆடைகளாக உடுக்கப்பட்ட செய்தி பழம்பாடல்களால் தெரிகின்றது. ஈசன் புலியின் தோலை ஆடையாகவும் யானையின் தோலைப் போர்வையாகவும் கொண்டான் என்று சைவ நூல்கள் கூறுகின்றன. எல்லா உலகமும் தானே ஆகி நின்ற ஈசனுக்குக் 'கொல் புலித்தோல் நல்லாடை' ஆயிற்று என்று திருவாசகம் பாடிற்று. தமிழ் நாட்டு

முனிவர்கள் மான் தோலை மேலாடையாகப் போர்த்திருந்தார்கள் என்று திருமுருகாற்றுப்படை கூறும்.

ஆடையைக் குறிக்கும் பழந்தமிழ்ச் சொற்கள் பல உண்டு. கலிங்கம், காழகம், அறுவை, துகில் முதலிய சொற்களைத் தமிழிலக்கியத்தில் காணலாம். இவற்றுள் கலிங்கம் என்ற சொல்லைப் பார்ப்போம். பாரத தேசத்திலுள்ள ஐம்பத்தாறு நாடுகளுள் கலிங்கம் என்பதும் ஒன்று. தமிழ் நாட்டில் சோழ மன்னர்கள் சிறப்புற்று வாழ்ந்த காலத்தில் கலிங்க நாடு தமிழ் அரசனுக்குத் திறை செலுத்தும் நாடாய் இருந்ததென்பது வரலாற்று உண்மை. கலிங்க நாட்டு அரசன் வழக்கம் போலத் திறை செலுத்தாமையால் குலோத்துங்க சோழன் அந் நாட்டின்மேல் படை எடுத்து வெற்றி மாலை சூடிய செய்தி கலிங்கத்துப் பரணி என்னும் தமிழ்ப் பாட்டால் விளங்குகின்றது. இத்தகைய சீர்மை வாய்ந்த கலிங்கத்தில் நெய்யப்பட்ட ஆடை கலிங்கம் என்றே பெயர் பெற்றிருந்தது போலும்! தமிழ்க் கவிஞர்கள் கலிங்கம் என்ற சொல்லை நயமாக எடுத்து ஆண்டுள்ளார்கள். இரட்டைப் புலவர் என்று தமிழ் நாட்டில் இருவர் இருந்தனர். அவ்விருவரும் ஊர் ஊராய்ச் சென்று கவி பாடுவர். ஒரு நாள் மதுரை மாநகரிலுள்ள பொற்றாமரைக் குளத்தில் இருவரும் நீராடச் சென்றனர். ஒருவர் கரையிலிருந்தார். மற்றவர் படியில் இறங்கி ஆடைகளைத் துவைக்கத் தொடங்கினர். அப்போது அவருடைய ஆடைகளில் ஒன்று படியிலிருந்து நழுவித் தண்ணீரில் விழுந்து குளத்தினுள்ளே சென்று கொண்டிருந்தது. கரையிலிருந்து புலவர் அதைக் கண்டார். 'ஐயோ! கலிங்கம் போகிறதே!' என்று

கூவினர். படியில் துவைத்துக்கொண்டிருந்த ஆடைகளில் ஒன்று தண்ணீரில் மிதந்துபோவதை அறிந்தார் கவிஞர்; ஆனால், அதற்காக மன வருத்தப்படவில்லை; சுவையாக மறுமொழி அளித்தார். 'இக்கலிங்கம் போனால் போகட்டும்; கவலையில்லை. இப்பதியிலே சொக்கலிங்கம் துணை இருக்கின்றார். நமக்கு என்ன குறை?' என்ற கருத்தை அமைத்து ஒரு கவி பாடினர்.

*''இக்கலிங்கம் போனலென்? ஏகலிங்க மாமதுரைச்*
*சொக்கலிங்கம் உண்டே துணை.''*

என்ற பாட்டைக் கேட்டுக் கரையில் இருந்த புலவரும் களிப்புற்றார்.

பல வகைப்பட்ட ஆடைகள் தமிழ்நாட்டில் உண்டு. பொன்னாடை உண்டு. பூவாடை உண்டு. பாவாடை உண்டு. சிற்றாடை உண்டு. கல்லாடை உண்டு. மேலாடை உண்டு. இன்னும் பல ஆடைகளும் உண்டு. இவற்றுள் சில ஆடவர்க்குரிய உடைகள். சில பெண்டிருக்குரியவை. இக்காலத்தில் கலைவாணருக்குப் பொன்னாடை போர்த்தும் பழக்கம் தலையெடுத்து வருகின்றது. தெய்வங்களுள் திருமாலுக்குரியது பொன்னாடை. 'பொலம்பூவாடையில் பொலிந்து தோன்றும் செங்கண் நெடியோன்' என்று திருமாலைச் சிலப்பதிகாரம் பாடிற்று. பொன்னாடையைப் பீதாம்பரம் என்றும் சொல்வதுண்டு. பூவாடை என்பது அழகிய வேலைப்பாடுடைய ஆடை. பாவாடையும் சிற்றாடையும் இளம்பெண்களுக்குரிய உடைகள். கல்லாடை என்பது காவித்துணி; துறவியர்க்குரியது அவ்வாடை. மேலாடை என்ற சொல் நளவெண்

பாவிலே நயமுற எடுத்தாளப்பட்டுள்ளது. மேலாடை இப்பொழுது அங்கவஸ்திரம் என்று சொல்லப்படு கின்றது.

ஆடை என்றாலும் உடை என்றாலும் பொருள் ஒன்றே. உடுக்கின்ற ஆடையை உடுக்கை என்றார் திருவள்ளுவர். 'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு,' என்பது அவர் அருளிய திருக்குறள். உடுக்கை என்பதும் உடுப்பு என்பதும் ஒரே அடிச்சொல்லினின்றும் பிறந்தனவே யாயினும், அவற்றின் இடையே பொருள் வேற்றுமை உண்டு. இடுப்பில் உடுத்தும் உடை உடுக்கை என்றும், மேலே அணியும் சட்டை உடுப்பு என்றும் இக்காலத்தில் வழங்கப்பெறுகின்றன. முற்காலத்தில் மெய்ப்பை என்பது உடுப்பின் பெயர். பணத்தைப் பாதுகாக்கும் பையைப் பணப்பை என்பது போல உடம்பைப் பாதுகாக்கும் உடையை மெய்ப்பை என்று குறித்தார்கள்.

வட்டுடை என்ற உடையும் முன்னாளில் இருந்த தாகத் தெரிகின்றது. போர்க்களம் செல்லும் வீரர்கள் இடுப்பிலிருந்து முழந்தாள் வரை உடுக்கும் உடையே வட்டுடை என்று பெயர் பெற்றிருந்தது. சீவகன் என்ற வீரன் போர்க்கோலம் கொண்ட போது வட்டுடை தரித்திருந்தான் என்று சிந்தாமணி கூறு கின்றது.

துகில் என்பது மாதர் அணியும் மெல்லிய ஆடை. கடற்கரைக்குத் தன் காதலனாகிய கோவல னோடு சென்ற மாதவி 'நிறங்கிளர் பூந்துகில் நீர்மை யின் உடுத்திருந்தாள்' என்று சிலப்பதிகாரம் குறிக்

கின்றது. தஞ்சை மாவட்டத்திலே துயிலி என்ற ஊர் ஒன்று உண்டு. அவ்வூரில் நெய்யப்படும் மெல்லிய ஆடையும் துயிலி என்றே வழங்குகின்றது. நேர்த்தியான துகில் நெய்யப்பட்டதனால் அவ்வூர் துகிலி என்ற பெயர் பெற்று, அப்பெயர் நாளடைவில் துயிலி என்று மருவியதோ என்பது ஆராய்தற்குரியதாகும்.

ஆடையைக் குறிக்கும் பல அருமையான சொற்கள் இப்பொழுது பேச்சுத் தமிழில் இல்லை. அத்தகைய சொற்களில் ஒன்று அறுவை என்பது. ஆடை நெய்யும் தொழிலாளரை அறுவையர் என்று மணிமேகலை குறிக்கின்றது. இத்தகைய சொற்களை ஆராயும் பொழுது முன்னாளில் கைத்தறியிலேயே ஆடைகள் நெய்யப்பட்ட முறை நன்றாக விளங்கும். தறியினின்றும் துணிக்கப்பட்டது துணி; அறுக்கப்பட்டது அறுவை; கூறுக்கப்பட்டது கூறை; எனவே, ஆடையின் வரலாறு இந்நாட்டுக் கைத்தறியின் சீர்மைக்கு ஒரு சிறந்த சான்றாய் அமைந்துள்ளது.

இனி, உடம்பினை அழகு செய்யும் அணிகலன்களைச் சிறிது பார்ப்போம். அவற்றை நகை என்பர் இக்காலத்தார். பொன்னாலும் மணியாலும் நகை செய்து மேனியை அலங்கரித்துக்கொள்ளும் வழக்கம் இந்நாட்டில் மிக்க பழமை வாய்ந்தது. பெண்கள் சிறப்பாகத் தலை முதல் தாள் வரை நகையணிந்து கொள்ள ஆசைப்படுவார்கள்.

இத்தகைய நகை பிறந்து வளர்ந்த வரலாற்றைத் தெரிந்துகொள்வதற்குத் தமிழ் நாட்டில் வழங்கும் சில நகைப் பெயர்கள் சிறந்த கருவியாகும். பாண்டி நாட்டிலே நகையைத் தடையம் என்பார்கள். மணம்

பேசும்போது, "பெண்ணுக்கு என்ன தடையம் போடு வீர்கள்?" என்று மணமகனைச் சேர்ந்தோர் கேட்கும் வழக்கம் இன்றும் நாட்டுப்புறங்களில் உண்டு. தடை யம் என்ற சொல்லை ஆராய்ந்தால் நகை பிறந்த முறை ஒருவாறு விளங்கும். தடையம் என்றாலும் தடை என்றாலும் பொருள் ஒன்றே. நிலை என்பது நிலையம் என்று வழங்குதல் போலவே தடை என்பது தடையம் ஆயிற்று. பேய் பிசாசுகளால் மக்கள் உடம்பிற்கு நோய் நொடிகள் வரும் என்ற அச்சம் ஆதி காலத்தில் உலகமெங்கும் பரவி இருந்தது. ஆதலால், அவற் றைத் தடை செய்வதற்கு மந்திர ஓலைச் சுருள்களைக் கழுத்திலும் கையிலும் இடுப்பிலும் காலிலும் கட்டினார்கள். பீடைகளும் பிணிகளும் வாராமல் அவை தடுத்தமையால் அவற்றிற்குத் தடையம் என்ற பெயர் வந்தது. இக்காலத்தில் கையில் அணியும் நகை ஒன்றையும், காலில் அணியும் நகை ஒன்றையும் ஆராய்ந்து பார்ப்போம். திருமணம் முதலிய நற் செயல்களைத் தொடங்கும் பொழுது காப்புக் கட்டிக் கொள்ளும் வழக்கம் இன்றும் உண்டு. அதன் கருத் தென்ன? இடையூறு வாராமல் எடுத்த காரியம் இனிது நிறைவேறுவதற்குக் கையில் கட்டும் நூலே காப்பாகும். பீடைகளைத் தடுத்துப் பாதுகாத்தலா லேயே அது காப்பு என்று பெயர் பெற்றது. ஆதியில் நூலாகக் கட்டிய காப்பு இப்பொழுது தங்கம் முதலிய விலை உயர்ந்த பொருள்களால் செய்யப்படும் ஒரு நகை யின் பெயராயிற்று.

கையிற் காப்புக் கட்டியது போலவே காலிலும் தடை கட்டினார்கள். அத்தடைதான் தண்டை என்று

பெயர் பெற்றது. பூடு என்பது பூண்டு என்றும், அடு என்பது அண்டு என்றும் வழங்குதல் போலவே தடை என்பதும் தண்டையாயிற்று. ஐம்பொன்னால் தண்டை செய்து குழந்தையின் காலில் அணிந்தால் பீடை அணுகாது என்ற நம்பிக்கை இன்றும் தமிழ் நாட்டில் உண்டு.

இவ்வண்ணம் கழுத்தில் தடையாக அணிந்த நூல், தாலி என்று பெயர் பெற்றது. தாலிக்கே நூல் என்ற பெயர் உண்டு. தாலியிழந்த பெண்ணை நூலி ழந்தவள் என்பர். கவியரசராகிய கம்பர் இறந்த பொழுது கலைமகள் நூலிழந்தாள் என்று பாடினார் ஒரு புலவர். "பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருக்க நாமடந்தை நூல்இழந்த நாள்" என்ற பாட்டிலே நூல் என்பது மங்கல நாணாகிய தாலியைக் குறிக்கின் றது. இக்காலத்தில் தாலி பொன்னால் செய்யப்பட்டுப் பொற்றாலி என்று பெயர் பெற்றாலும், அதனுள்ளே மங்கல நாணாகிய நூலை இடும் வழக்கம் இன்றும் உண்டு. குழந்தைகளுக்கு நோய் வாராதிருப்பதற்காக ஐம்படைத் தாலி கட்டும் வழக்கம் முன்னாளில் இருந் தது. காக்கும் தெய்வமாகிய திருமாலின் ஐந்து படைக்கலங்களும் எழுதி நூலிலே கோத்துக் கழுத் திலே அணிந்தால் பீடை அணுகாது என்பது பண் டையோர் கொள்கை. இதனாலேயே இழை என்னும் பெயர் நகைக்கு அமைந்தது. நூலின் பெயராகிய இழை என்பது நகையின் பெயராயிற்று.

பழந்தமிழ் நாட்டின் பண்பாட்டிற்கு ஒரு சான்றாக நிற்பது நகை. அந்நாளில் மாதர் அணிந்திருந்த

நகைகளை அழகாகக் கூறுகின்றது சிலப்பதிகாரம். கண்ணகி அணிந்திருந்த சிலம்பும், மாதவி அணிந்திருந்த பல வகையான நகைகளும் அழகிய வேலைப்பாடுடையனவாய் அம்மாதராரின் அழகுக்கு அழகு செய்தன என்பது சிலப்பதிகாரத்தால் நன்கு விளங்குகின்றது.

சிலப்பதிகாரத்திலே குறிக்கப்படும் நகைகளுள் வளையலை மட்டும் சிறிது பார்ப்போம். தங்க வளையலும், சங்கு வளையலும், பவழ வளையலும் மாதவியின் கையில் அமைந்து அழகு செய்தன என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இக்காலத்தில் வயிர வளையல் முதல் கண்ணாடி வளையல் வரை பல திறப்பட்ட வளையல்கள் காணப்படுகின்றன. ஆயினும், ஆதியில் வெண்மையான சங்கு வளையல்களையே மாதர்கள் அணிந்தார்கள். சங்கறுத்து வளையல் செய்யும் பணியாளர் பழந்தமிழ் நாட்டில் இருந்தனர். "சங்கறுப்பது எங்கள் குலம் சங்கரனார்க்கு ஏது குலம்?" என்று நக்கீரர் பாடினார் என்பர். சீதை சங்கு வளையல் அணிந்திருந்தாள் என்பது, "சங்கிற் பொலிந்த கையாள்" என்று கம்பர் பாடுதலால் தெரிகின்றது. திருஞானசம்பந்தர் தேவாரமும் சங்கு வளையலைக் குறிக்கின்றது. "வெள்வளை சோர என் உள்ளங்கவர் கள்வன்" என்பது அவர் திருப்பாட்டு. எனவே, ஆதி வளையல் சங்க வளையல்; பின்னே வந்தன தங்க வளையல், பவழ வளையல், வயிர வளையல் முதலியன. இந்த வகையில் தமிழ் நாட்டு நகைகள் சொல்லும் கதையை அறிந்துகொள்வது ஓர் ஆனந்தம்.

# நறுமணம்

இன்ப சுகத்தை நாடுவது உயிர்களின் இயற்கை. இனிய காட்சிகளைக் காண்பது கண்ணுக்கின்பம். இனிய ஒலிகளைக் கேட்பது காதுக்கு இன்பம். இன் சுவைப் பொருள்களை அருந்துவது நாவிற்கு இன்பம். நறுமணங்களை நுகர்வது மூக்கிற்கு இன்பம். நல்ல பொருள்களைப் பொருந்துவது உடலுக்கு இன்பம். இவ்வாறு கண்ணினால் கண்டும், காதினால் கேட்டும், நாவினால் சுவைத்தும், மூக்கினால் மோந்தும், மெய்யினால் தொட்டும் மக்கள் அடையும் இன்பமே இம் மாநிலத்திற் சிறந்த இன்பமாகும். இவ்வின்பத்தைத் திருக்குறள் குறிக்கின்றது. 'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலன்' என்பது வள்ளுவர் வாக்கு. இந்த வகையில் உயிர்த்தறியும் புலனுக்கு இன்பம் தருவன வாசமுள்ள பொருள்கள். வாசம் என்றாலும் மணம் என்றாலும்பொருள் ஒன்றே. மணமுடைய இயற்கைப் பொருள்களைச் சிறிது பார்ப்போம். பூவிலே மணமுண்டு. சந்தனம் போன்ற சில மரங்களில் மணமுண்டு. மருக்கொழுந்து போன்ற சில தழைகளில் மணமுண்டு. நன்னாரி போன்ற சில வேர்களிலும் மணமுண்டு.

என்றும் தமிழ் நாட்டார்க்குப் பூவிலே மெத்தப் பிடித்தம். பூவையர் என்று சிறப்பித்துக் கூறப்படும் பெண்களுக்குப் பூவிலுள்ள ஆசைக்கோர் அளவில்லை. பூச்சூடுதற்காகவே பெண்கள் கூந்தலைப் பேணி

வளர்ப்பார்கள். பூவில்லாத கொண்டை மதியில்லாத மண்டையை ஒக்கும் என்பது அன்னோர் கொள்கை. தமிழ் நாட்டிலே ஆண்டாள் என்னும் பெண் தெய்வப் பாவையாய் விளங்கினாள். அவள் நாள்தோறும் நல்ல பூக்களைப் பறித்து, மாலையாகத் தொடுத்து, தன் தலையிலே சூடி அழகு பார்த்து, பின்பு தன் மனத்திலே கணவனாக வரித்த திருமாலுக்குக் கொடுத்தனுப்பினாள். அதனால் சூடிக் கொடுத்த நாச்சியார் என்று வைணவ உலகம் அத்தெய்வ மங்கையைப் போற்றுகின்றது.

மணமில்லாத மலரை முன்னாளில் மாதரார் சூடுவதில்லை. முல்லைப் பூச்சூடுவரேயன்றி முருங்கைப் பூச் சூடமாட்டார்; தாழம்பூவும் மகிழம்பூவும் அணிவரேயன்றி, காகிதப்பூவும் கனகாம்பரமும் அணியமாட்டார். 'பூவிலே மணம் உண்டு; வாசமுண்டு' என்று சொன்னால் இக்காலத்தில் எல்லோருக்கும் புரியும். ஆனால், 'பூவிலே நாற்றம் உண்டு' என்று சொன்னால் குற்றமாகத் தோற்றும். 'சாக்கடையில் அன்றோ நாற்றம் உண்டு? சென்னையிலுள்ள நெய்க்கடையில் அன்றோ நாற்றம் உண்டு? பூவிலே நாற்றம் ஏது?' என்று உடனே கேட்பர். உண்மைதான். இக்காலத் தமிழில் நாற்றம் என்பது வீச்சத்தையே குறிக்கின்றது. ஆனால், முற்காலத் தமிழில் நாற்றம் என்ற சொல் மணம் என்னும் பொருளிலே வழங்கிற்று. 'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்றைந்தின் வகை தெரிவான் கட்டே உலகு' என்ற திருக்குறளில் நாற்றம் என்பது நறுமணமேயாகும். 'பூவின் நாற்றம்' என்று கம்பரும் பாடுகின்றார். நலமெலாம் ஒருங்கே வாய்ந்த

சீதை, பொன்னின் ஒளியும், போதின் நாற்றமும், தேனின் சுவையும், செஞ்சொற்கவியின் இன்பமும் கலந்தாற்போன்றதோர் இனிய காட்சி அளித்தாள் என்று கூறுகின்றார் அக்கவிஞர்.

பூக்களிலே இரண்டு வகையுண்டு: மணமுள்ள பூக்கள் ஒருவகை; மணமற்ற பூக்கள் மற்றொரு வகை. மணமுள்ள பூவை நாறும் பூ என்பது முற்காலத்து முறை. நாறும்பூ நாதன் என்பது தென்னாட்டில் ஒரு தெய்வத்தின் பெயர். அப்பெயர் கொண்ட ஆடவர் இந்நாளிலும் சிலர் உண்டு. மணமுள்ள பூவை நாறும் பூ என்றாற்போல, மணமற்ற மலரை நாறா மலர் என்றார்கள். இச்சொல் திருக்குறளிலே ஆளப்பட்டுள்ளது.

*"இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்ற*
*துணர விரித்துரையா தார்."*

என்பது வள்ளுவர் வாக்கு. தாம் கற்றுணர்ந்த பொருள்களைப் பிறர்க்கு எடுத்துரைத்து விளக்கும் திறமில்லாதவர் மணமற்ற மலரை ஒப்பார் என்பது திருவள்ளுவர் கருத்து. இக்கருத்தை மேலும் விரித்துரைத்து விளங்க வைத்தார் குமரகுருபர அடிகள்.

*"எத்துணைய ஆயினும் கல்வி இடமறிந்து*
*உய்த்துணர் வில்லெனின் இல்லாகும்;—*
*உய்த்துணர்ந்தும்*
*சொல்வன்மை இன்றெனின் என்னாம்? அஃதுண்டேல்*
*பொன்மலர் நாற்றம் உடைத்து."*

என்பது நீதிநெறி விளக்கத்திலே அவர் பாடிய பாட்டு. இப்பாட்டிலும் நாற்றம் என்ற சொல் மணம் என்ற பழம்பொருள் கொண்டு விளங்குகின்றது.

இவ்வாறு நாற்றம் என்பது மணத்தைக் குறித் தமையாலேயே நறுமலர், நறுநெய், நறும்புகை, நறும் புனல் முதலிய சொற்றொடர்கள் எழுந்தன. வாச முள்ள பூவே நறுமலர் ஆகும். வாசனையுள்ள நெய்யே நறுநெய் எனப்படும். வாசனைப் புகையே நறும் புகை. வாசமுள்ள நீரே நறும்புனல். நாறங்காய் என்பது வாசமுள்ள ஒரு காயின் பெயராகத் தென் னாட்டு மொழிகளில் வழங்குகின்றது. மலையாளத் திலும் துளுவ மொழியிலும் நாறங்காய் என்று வழங் கும் சொல்லே தமிழில் நாரத்தங்காய் என்றாயிற்று. நம் நாட்டு நாறங்காய் கப்பலேறி மேல் நாடுகளுக்குச் சென்றபோது நாரஞ்சு எனச் சிதைந்து, ஆங்கிலத் தில் ஆரஞ்சு ஆயிற்று என்பர் ஆராய்ச்சியாளர்.

பூக்களில் உள்ள இயற்கை மணத்தை அறிந்த மக்கள், செயற்கை முறையில் வாசனைப் பொருள்களை உண்டாக்கினார்கள். வாசனைப்பொடி செய்யும் பழக்கம் பழங்காலத்திலேயே தமிழ் நாட்டில் இருந்ததாகத் தெரிகின்றது. சுண்ணம் என்பது வாசனைப் பொடி யின் பெயர். திருவாசகத்தில் பெண்கள் சுண்ணம் இடிக்கும் முறை பேசப்படுகின்றது. தம் நாயகனாகிய இறைவனது திருமஞ்சனத்திற்காகச் சுண்ணம் இடிக் கும் பெண்கள் ஈசன் புகழைப் பாடிக்கொண்டும் ஆனந்தமாய் ஆடிக்கொண்டும் பணி செய்யும் பான் மையைத் திருவாசகத்திலே காணலாம்.

"சூடகம் தோள்வளை ஆர்ப்ப ஆர்ப்பத்
தொண்டர் குழாம்எழுந் தார்ப்ப ஆர்ப்ப
நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப
நாமும் அவர்தம்மை ஆர்ப்ப ஆர்ப்பப்

பாடகம் மெல்லடி ஆர்க்கும் மங்கை
பங்கினன் எங்கள் பராப ரற்கு
ஆடக மாமலை அன்ன கோவுக்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே."

என்ற பாட்டில் ஈசன் திருமுழுக்குக்காக மங்கையர் சுண்ணம் இடித்தனர் என்பது நன்கு விளங்குகின்றது.

சிவனடியார்களைப் போலவே செல்வப் பெண்களும் முன்னாளில் சுண்ணமிடித்து இன்பமாகப் பொழுதுபோக்கினர் என்பது தெரிகின்றது. செல்வச் செழுங்குடியைச் சேர்ந்த இளம்பெண்டிர் இருவர் தனித்தனியே பொழுது போக்கிற்காகச் சுண்ணம் செய்தனர். அது வரை இணை பிரியாத நண்பராயிருந்த அவ்விருவரிடையே வாசனைப் பொடியால் மனவேற்றுமை உண்டாயிற்று. 'என் பொடிதான் உயர்ந்தது!' என்றாள் குணமாலை. 'அப்படி அன்று; என் பொடிதான் சிறந்தது!' என்றாள் சுரமஞ்சரி. இருவர் பொடிகளின் தரம் தெரிந்து தீர்ப்புரைக்க வல்லான் சீவகன் ஒருவனே என்பதைக் கேள்விப்பட்டு அவனை நாடிச் சென்றனர் இரு மங்கையரும். வேனிற்காலமாதலால், சீவகன் தன் தோழர்களோடு ஒரு சோலையிலே பொழுது போக்கிக் கொண்டிருந்தான். இருவர் பொடியையும் நுணுகி ஆராய்ந்தான் சீவகன். இரண்டும் நல்ல பொடிகளேயெனினும், குணமாலையின் பொடி கோடையில் இடித்த பொடியாதலால் நல்ல சுண்ணமாய் அமைந்தது. சுரமஞ்சரியின் சுண்ணம் மழை நாளில் இடித்த பொடியாதலால் சிறிது மட்டமாய் இருந்தது.

இதனை நுணுக்கமாக உணர்ந்த சீவகன் தன் கருத்திற்குச் சான்றாக அச்சோலையிலே சுற்றிக்கொண்டிருந்த வண்டுகளின்கருத்தையும் அறியவிரும்பினான்; நாள்தோறும் இயற்கைப் பூக்களின் இடையே ஊடாடிப் பல வகையான மகரந்தப் பொடிகளின் மணத்தை நுகர்ந்த வண்டுகள் வாசனைப் பொடிகளைச் சீர்தூக்கும் திறமுடையன என்று கருதினான்; சோலை வண்டினங்களைக் கூவி அழைத்து அவற்றை நோக்கி,

> " சோலை மஞ்ஞை சுரமைதன் சுண்ணமும்
> மாலை என்னும் மாமயில் சுண்ணமும்
> சால நல்லன தம்முளும் மிக்கன
> கோல மாகக் கொண்டுஉண்மின்."

எனச் சொன்னான். " வண்டினங்களே, இங்கே வாருங்கள். இரு மங்கையரின் வாசனைப் பொடிகளை இதோ தனித்தனியே தூவுகின்றேன். இரண்டின் தரத்தையும் நன்றாகத் தெரிந்து சிறந்த பொடியை உண்டு மகிழுங்கள்"என்று சொல்லித் தூவியிட்டான். அவ்வண்டுகள் குணமாலையின் பொடியை உண்டு, அதுவே சிறந்ததென்று தீர்ப்புரைத்தன என்று செந்தமிழ்க் காவியமாகிய சிந்தாமணி கூறுகின்றது.

தமிழ் நாட்டு மலைகளில் மணந்தரும் மரங்கள் பல உண்டு. அவற்றுள் ஆரமும் அகிலும் சிறந்தனவாகும். ஆரம் என்பது சந்தனம். செந்தமிழ் மலையாகிய பொதிகையைச் சூழ்ந்து சந்தனக்காடு செறிந்திருந்ததென்று தமிழ்க்கவிஞர் பாராட்டிப் பாடினர். இன்றும் சந்தன மரங்கள் அம்மலையிலே

உண்டு. சந்தனக் கட்டையைக் கல்லில் அரைத்தால் மணங்கமழும். 'சந்தன மென்குறடு தான் தேய்ந்த காலத்தும் கந்தம் குறைபடாது,' என்று பாடினர் ஒரு தமிழ்க் கவிஞர். அகிற்கட்டையை நெருப்பில் இட்டால் நறும்புகை கிளம்பும். காளத்தி மலையிலே குறவர்கள் அகிற்கட்டையில் தீமூட்டும் பொழுது நறும்புகை எழுந்து வானமெங்கும் மணத்தைப் பரப்பும் என்று திருஞான சம்பந்தர் பாடினர்.

*" கார் அகில் இரும்புகை விசும்பு*
*கமழ்கின்ற காளத்தி மலையே."*

என்பது அவர் பாடியருளிய தேவாரம். ஆரம என்னும் சந்தனமும், அகிலும் பல்லாயிரம் ஆண்டு களுக்கு முன்னமே தமிழகத்திலிருந்து பிற நாடு களுக்குச் சென்ற செய்தியை ஆராய்ச்சியாளர் அறிவித்துள்ளனர்.

தமிழ் நாட்டில் பழங்கால மக்கள் பயன்படுத்திய வண்ண நறும்பொருள்கள் சிலப்பதிகாரம் முதலிய நூல்களிற் பேசப்படுகின்றன. சோழ நாட்டின் தலை நகராகவும், உலகறிந்த துறைமுகமாகவும் இரண்டா யிரம் ஆண்டுகளுக்கு முன்னே விளங்கிய காவிரிப்பூம் பட்டினத்தில் வாசனைப் பொருள்கள் நாள்தோறும் விற்கப்பட்டன.

*" வண்ணமும் சுண்ணமும் தண்ணறுஞ் சாந்தமும்*
*பூவும் புகையும் மேவிய விரையும்*
*பகர்வனர் திரிதரு நகர வீதியும் "*

என்று பாடுகின்றது சிலப்பதிகாரம்.

வாசம் விற்பவர் வாசவர் என்று பெயர் பெற்றனர். தக்கோலம் முதலிய ஐந்து வகையான வாசனைப் பொருள்களை விற்பவர் வாசவர் எனப்படுவார் என்று ஒரு பழம்பாட்டுக் கூறுகின்றது.

செல்வச் செழிப்புடைய ஆண்களும் பெண்களும் வாசநீரிலே முழுகி, வாசப்புகையாலே தலையை உலர்த்தி, வாசப் பொருள்களை உடம்பிலே பூசி இன்பசுகம் நுகர்ந்தார்கள். பெருஞ்செல்வனாகிய கோவலனைச் சேர்ந்து இன்ப வாழ்க்கையின் எல்லை கண்ட மாதவி, நறுமணம் கமழும் வண்ணம் தன் மேனியைக் கோலம் செய்த முறை சிலப்பதிகாரத்தில் விரித்துரைக்கப்படுகின்றது. தலையலங்காரம் செய்யத் தொடங்குமுன்னே அம்மாது, வாச நீரால் தலையை முழுக்காட்டினாள்; வாச நீராட்டிய ஈரத்தலையை நறும்புகையால் உலர்த்தினாள்; ஐந்து வகையாகக் கூந்தலை வகுத்து மான்மதக் குழம்பை ஊட்டினாள்.

*" நாறிருங் கூந்தல் நலம்பெற ஆட்டிப்*
*புகையிற் புலர்த்திய பூமென் கூந்தலை*
*வகைதொறும் மான்மதக் கொழுஞ்சே றூட்டி "*

என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

பன்னீர் முதலிய வாசங்கலந்த சந்தனத்தை முன்னாளிலும் மக்கள் பூசி மகிழ்ந்தார்கள். பனிநீர் என்ற சொல்லே பன்னீர் என மருவி வழங்குகின்றது.

பச்சைக் கர்ப்பூரமும் பனிநீரும் கலந்த சந்தனம் பெரிய புராணத்திலே பேசப்படுகின்றது. சிவனடி

யார்களில் ஒருவராகிய சுந்தரமூர்த்தியார் திருமணக் கோலம் கொள்ளும் பொழுது,

*" தூநறும் பசுங்கர்ப் பூரச்*
*சுண்ணத்தால் வண்ணப் போதில்*
*ஆனதண் பனிநீர் கூட்டி*
*அமைத்தசந் தனச்சே றட்டி*
*மான்மதச் சாந்து தோய்ந்த*
*மங்கலக் கலவை சாத்திப்*
*பான்மறை முந்நூல் மின்னப்*
*பவித்திரம் சிறந்த கையான்."*

என்று பாடுகின்றார் சேக்கிழார். எனவே, பனிநீர் முதலிய வாசங்கலந்த சந்தனத்தின் சுகத்தைப் பழங் காலத் தமிழகம் அறிந்திருந்ததென்பது இனிது விளங்கும்.

எப்போதும் நறுமணம் கமழும் திருமேனியராய்த் திகழ்ந்த சுந்தரமூர்த்தியார் ஒருகால் ஈசனிடம் வாசப் பொருள் வேண்டி விண்ணப்பம் செய்தார்.

*" கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டும்*
*கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே !"*

என்பது அவர் பாடிய தேவாரம்.

தென்னாட்டுத் திருக்கோயில்களில் நறும்புகை யின் மணம் எப்பொழுதும் கமழ்ந்துகொண்டிருக்கும். நறும்புகையைச் சுகந்த தூபம் என்பர் வடமொழியா ளர். சிவாலயத்தில் தூபப் பணிவிடை செய்து அழி யாப் பேறுபெற்ற அடியார் வரலாறு பெரிய புராணத் தில் உண்டு. ஐவகைத் தூபங்களுள் ஒன்றாகிய குங்கிலி யத்தைக் கொண்டு நாள்தோறும் தொண்டு செய்த

அவ்வடியார் குங்கிலியக் கலயர் என்று பெயர் பெற்ருர். நாளடைவில் அவர் செல்வம்தேய்ந்தது; வறுமை வந்துற்றது. அந்த நிலையிலும் அவர் குங்கிலியப் பணிவிடையை முட்டின்றிச் செய்து வந்தார். பட்டினி அவர் வீட்டில் குடிகொண்டது. பசி நோய் பொறுக்க மாட்டாமல் பிள்ளைகள் வாடித் துடித்தார்கள். அவர்கள் நிலைகண்டு மனமுருகிய அன்னை, தன் தாலியைக் கழற்றிக் குங்கிலியக்கலயரிடம் கொடுத்து நெல் வாங்கி வரும்படி வேண்டினுள். நெல்லுக் கடையை நோக்கி அவர் செல்லும் போது குங்கிலியம் விற்றுக்கொண்டு எதிரே ஒருவன் வந்தான். உடனே அவர் அவனிடம் மங்கல அணியைக் கொடுத்துக் குங்கிலியப் பொதியை வாங்கிக்கொண்டு மகிழ்ச்சியோடு திரும்பினுர். அவர் தொண்டின் திறமறிந்த ஈசன் இம்மைப் பேறும் மறுமைப் பேறும் அளித்தான் என்று பெரிய புராணம் கூறுகின்றது.

இக்காலத்தில் சாம்பிராணித் தூபமே பெரும்பாலும் ஆலயங்களிலுள்ள நறும்புகையாகும். சாம்பிராணி என்பது மலேய நாட்டுச் சொல். அந்நாட்டில் சாம்பிராணி என்பது ஒரு மாவட்டத்தின் பெயராகவும் வழங்குகின்றது. கர்ப்பூரமும் சாம்பிராணியும் எல்லாக் கோயில்களிலும் உள்ள நறும்பொருள்களாகும். ஆகவே, தொன்றுதொட்டு இயற்கை மணமும் செயற்கை மணமும் கலந்த இன்ப வாழ்க்கையில் ஈடுபட்டவர் தமிழர் என்பது இனிது விளங்கும்.

# கலைச்சொல்லாக்கம்

அறிவு சான்ற அவைத் தலைவர் அவர்களே! தாய்மார்களே! தமிழ் அன்பர்களே!

இந்நாள் மதி நிறைந்த நன்னாள். 'மதி நலம் நூலோடுடைய' தமிழ் அறிஞர்கள் நூற்றுக்கணக்காக இக்கோவை மன்றத்திலே கூடி இருக்கின்றார்கள். இக்காட்சியைக் கண்டு என் உள்ளம் மகிழ்கின்றது!

அன்பர்களே!

கலைச்சொல் ஆக்கம் இந்நாளில் தமிழ் மொழிக்கு இன்றியமையாத ஒன்று. இதனைக் கோவை மாநகர அறிஞர்கள் முன்னமே நன்கு அறிந்துள்ளார்கள் என்பதற்கு ஒரு சான்று உண்டு. தமிழ் நாட்டில் வேறு எங்கும் இல்லாத 'கலைக்கதிர்' என்னும் திங்கள் வெளியீடு இக்கோவை மாநகரத்தில் பிறந்து ஒளிர்கின்றது. கலைச்சொல் ஆக்கும் முறையில் சில கொள்கைகளை நன்றாக நம் மனத்தில் பதித்துக் கொள்ள வேண்டும் என்பது என் ஆசை. நல்ல புலவர்கள் கூடியிருக்கின்ற இந்த மன்றத்திலே ஒன்று நான் வேண்டிக்கொள்கின்றேன். பழைய தமிழ் இலக்கியங்களில் பதிந்து கிடக்கும் கலைச் சொற்களை அகழ்ந்து எடுத்து ஆட்சியிலே உய்த்தல் வேண்டும். இறந்த சொற்கள் என்று கலைச்சொற் களை விட்டுவிடலாகாது. இதற்கு ஒரு சான்று தருகின்றேன்:

பழந்தமிழ் நாட்டில் கலங்கரை விளக்கம் என்ற சொல் வழங்கிற்று. காலதர் என்ற மற்ருெரு சொல் இருந்தது. சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படுகின்ற கலங்கரை விளக்கம் என்ற சொல்லுக்கு அடியார்க்கு நல்லார் உரை விளக்கம் செய்கின்ருர். ‘கடலிலே மிதந்து வரும் கலங்களைத் துறைமுகத்திற்கு அழைக்கின்ற விளக்கு’ என்ற அழகிய பொருளை அறிந்து இன்புறுகின்ருேம். பழந் தமிழிலே ‘கரைதல்’ என்ற சொல் ‘அழைத்தல்’ என்ற பொருளில் வழங்கிற்று.

> *“காக்கை கரவா கரைந்துண்ணும்; ஆக்கமும்*
> *அன்னநீ ரார்க்கே உள.”*

என்ற திருக்குறளில் கரைதல் என்பது அழைத் தல் என்ற பொருளிலே ஆளப்பட்டிருக்கின்றது. உலகில் வாழும் மாந்தர் ஆக்கம் பெற வேண்டு மாளுல், காக்கை போல் தமது வாழ்க்கையினை நடத்த வேண்டும் என்று கூறுகின்ருர் திருவள்ளுவர். உண்ணும் பொருள் ஏதேனும் கிடைத்தால், காக்கை அதைத் தனித்து உண்பதில்லை; தன் இனத்தைக் கூவி அழைத்துக் கலந்து உண்ணும் என்பது திருவள்ளுவர் காலத்திலிருந்த காக்கையின் இயல்பு என்பது அவர் வாக்கால் தெரிகின்றது.

இத்திருக்குறளை நினைவிலே வைத்துக்கொண்டு சென்னையம்பதியில் வீட்டைச் சுற்றி வருகின்ற சில காக்கைகளை நான் குறிக்கொண்டு பார்ப்பதுண்டு. இப்பொழுதுள்ள காக்கைகள் நம்மைப் பார்த்து வாழப் படித்துக்கொண்டனவோ என்று எண்ணத்

தக்க வகையில் சென்னைக் காக்கைகள் இரை தேடி வட்டமிட்டுக்கொண்டிருக்கின்றன. ஏதேனும் நல்ல பொருளொன்று கிடைத்தால் அக்கம் பக்கம் பார்த்து அதனை மறைவாக ஓர் இடத்திலே பதுக்கி வைத்து விட்டு, பசித்த பொழுது அவ்விடத்திற்குத் தனித்து உண்ணவருகின்ற காக்கையைச் சென்னையிலே நான் கண்டிருக்கின்றேன். உங்கள் கோவைக் காக்கை ஒருகால் நல்ல காக்கையாய் இருக்கலாம். சென்னையிலும் எங்கள் அடையாற்றுக் காக்கைக்குத்தான் அப்பண்பு உரியது என்று பேராசிரியர் மீனாட்சி சுந்தரனார் என் அருகே இருந்து ஒரு குரல் கொடுக்கின்றார். மிக்க மகிழ்ச்சி! அடையாற்றுத் தீய காக்கை அவர்கள் வாழும் சிந்தாதிரிப்பேட்டைக்குச் செல்லாமல் இருக்க வேண்டுமே என்றுதான் நான் கவலையுறுகின்றேன்!

இனி, 'காலதர்' என்ற சொல்லைக் கருதுவோம். அச்சொல்லும் சிலப்பதிகாரத்திலே ஆளப்பட்டிருக்கின்றது. காற்று வருகின்ற வழி என்ற பொருளில் எழுந்தது காலதர் என்ற சொல். திருவள்ளுவர் அருளிய குறள் ஒன்று இங்கே நினைவிற்கு வருகின்றது.

> "ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
> ஊக்க முடையா னுழை."

என்ற திருக்குறளில் அதர் என்பது வழியைக் குறிக்கின்றது. ஊக்கமுள்ள ஒருவனிடம் ஆக்கம் வழி கேட்டுச் செல்லும் என்பது இக்குறளின் கருத்து.

இப்பொழுது காலதரைச் சன்னல் என்று சொல்லுகிறோம். என்ன காரணத்தால் காலதரைக் கைவிட்டோம் என்பது இப்பொழுது தெரியவில்லை! எவ்வளவு முயன்றாலும் இப்பொழுது சன்னலை நம் வீட்டை விட்டு அகற்ற முடியாது. ஆதலால், சன்னலை வைத்துக்கொள்வோம். அதனுடன் காலதர் என்ற சொல்லையும் ஆட்சிக்குக் கொண்டு வர முயல்வதே அறிவுடைமை ஆகும். எப்படிக் கொண்டு வருவது என்று நீங்கள் ஐயுறலாம். அதற்கு ஒரு வழி சொல்கின்றேன். கட்டடக் கலையில் காலதர் என்பதை 'வெண்டிலேட்டர்' என்ற ஆங்கிலச் சொல்லுக்கேற்ற தமிழ்ச் சொல்லாகக் கொள்ளலாமன்றோ ?

வடசொற்களில் சிலவற்றை எடுத்து நம் முன்னோர் தமிழ் இலக்கியத்தில் வழங்கியிருக்கின்றனர். வடசொல்லில் நமக்கு எந்நாளும் வெறுப்பில்லை. சொல்லாக்க முறையில் குறுகிய நோக்கத்தோடு, ஒடுங்கிய சிந்தையோடு நாம் வேலை செய்கின்றோம் என்று எவரேனும் கருதினால், அதைவிடப் பெரிய தவறு வேறொன்றில்லை. தொல்காப்பியனார் வகுத்துள்ள இலக்கணமே அதற்குச் சான்று. தமிழ் மொழியில் வழங்கும் சொற்களை இயற்சொல், திரிசொல், வடசொல், திசைச்சொல் என வகுத்திருக்கின்றார் தொல்காப்பியனார். இவற்றுள் இயற்சொல்லும் திரிசொல்லும் இயற்கையாய்த் தமிழிலே பிறந்த சொற்கள். வடசொல்லும் திசைச்சொல்லும் அயல் மொழிச் சொற்கள். இத்தகைய சொற்கள் வரம்பு

மீறித் தமிழில் வந்து வழங்கலாகாது ; இலக்கண நூலோர் செப்பமாக வகுத்த வாய் மடைகளின் வழியாகவே அவை தமிழ்ப் புலத்திற்சென்று சேர்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் கருத்து. இப்படி வரம்பு கட்டிய காரணத்தாலேயே தமிழ் மொழி இன்றும் தன் நீர்மை குன்றாது தனித்து இயங்க வல்ல மொழியாய் விளங்குகின்றது என்று மொழி நூல் வல்லோர் கூறுகின்றனர்.

தமிழ்மொழியில் ஆளப்படும் சில வடசொற்கள், பொருள் விரிந்தும், சிறந்தும், குன்றியும், திரிந்தும் வழங்குதலைத் தமிழ் அறிஞர்களாகிய நீங்கள் அறிவீர்கள். ஆலயம் என்ற வடசொல்லை எடுத்துக்கொள்வோம். அச்சொல் இறைவன் கோவில் கொண்ட இடத்தைக் குறிப்பதாகும். 'ஆலயந் தொழுவது சாலவும் நன்று,' என்னும் பழமொழி இச்சொல்லாட்சிக்கு ஒரு சான்றாகும். இவ்வாறு உயர்ந்த பொருளில் அமைந்த சொல்லை அலுவலகத்திற்கும், ஆடை விற்கும் கடைக்கும் வழங்குதல் ஆகுமோ ? இப்பொழுது தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சி மொழியாய் நிலவுகின்றது. ஆங்கிலத்தில் 'ஆபீஸ்' என்று இதுகாறும் வழங்கிய சொல் மாறி, 'அலுவலகம்' என்ற தமிழ்ச்சொல் வழக்காற்றில் வந்துகொண்டிருக்கின்றது. 'பணியகம்' என்றும் அதைச் சொல்லலாம். இத்தகைய நல்ல சொற்கள் இருக்க, இந்நாட்டில் ஒரு சாரார் 'காரியாலயம்' என்று அந்நிலையத்தைக் குறிக்கின்றனர். காரியம் நடைபெறுகின்ற இடத்தை ஆலயம் என்று சொல்லுதல் தமிழ் மரபிற்கு ஏற்குமா என்று கேட்கின்றேன்.

இவ்வண்ணமே ஆடை விற்கும் கடையை வஸ்திரா லயம் என்று சிலர் வழங்குகின்றனர். இவ்வாறு ஆலயம் என்ற சொல்லைக் காரியத்தோடும் வஸ்திரத் தோடும் இணைத்து வழங்குதல் தமிழின் நீர்மைக்குத் தகாது என்பது என் தாழ்மையான கருத்து.

வடநாட்டில் நிகழ்ந்த சுவையான நிகழ்ச்சி ஒன்று இப்பொழுது என் நினைவிற்கு வருகின்றது: இந்திய அரசியற்சட்டத்தைப் பாரத நாட்டிலுள்ள பதினன்கு சிறந்த மொழிகளிலும் பெயர்த்து அமைப் பதற்கு ஏற்ற சொற்களை உருவாக்கும் நோக்கத் துடன் டில்லி மாநகரில் ஒரு மாநாடு நடைபெற்றது. தமிழ் மொழியின் சார்பாக நானும், இன்னெரு தமி ழறிஞரும் அம்மாநாட்டிற் கலந்துகொண்டோம். சட்டத்திலுள்ள Fishery என்ற ஆங்கிலச் சொல் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. 'மீன க்ஷேத்திரம்' என்பது அதற்கு நேரான இந்திச் சொல் என்று கூறினர்கள் இந்தியாளர்கள். அது ஏற்ற பதந்தான் என்று வடபுலத்தார் பலரும் ஏற்றுக்கொண்டனர். அங்கே நடுவராய் இருந்த அறிஞர், என்னை நோக்கி, 'இது தமிழுக்கு ஏற்குமோ ?' என்று கேட்டார். அப்பொழுது நான் சொன்னேன் : 'எங்கள் தமிழ் நாட்டில் 'க்ஷேத் திரம்' என்ற சொல் உண்டு. திருக்கோயில் இருக் கும் புனிதமான இடத்தையே அச்சொல் குறிப்பதா கும். அச்சொல்லை மீனேடு இணைத்தால் தமிழ் மக்கள் சிரிப்பார்கள்,' என்று எடுத்துரைத்தேன். எனவே, சொல்லாக்க முறையில் பிற மொழிச் சொற்களை எடுத்து ஆளும்பொழுது வழக்காற்றில் அவை பெற்

றுள்ள பொருளை நன்கு அறிந்துகொள்ள வேண்டும் என்பது என் கருத்து.

இந்நாளில் புதிய சொல்லொன்று பேச்சுமேடைகளில் வழங்கி வருகின்றது. ‘சொற்பொழிவு’ என்பது அச்சொல். பதினைந்து ஆண்டுகளுக்கு முன் சொற்பொழிவு என்ற சொல்லை நாம் கேட்டதில்லை. ‘பிரசங்கம்’ என்ற சொல்லே எங்கும் வழங்கிற்று. புதுச் சொல்லாகிய சொற்பொழிவு எப்பொழுது, யாரால் தமிழ் மொழியிலே சேர்க்கப்பட்டது என்று ஆராய்தல் பயனுடையதாகும் என்று எண்ணுகிறேன். ஒரு சொல் ஒரு மொழியில் என்று வந்து சேர்ந்தது என்பதைப் பெரும்பாலும் வரையறுத்துக் கூற முடியாது என்பது மொழிநூல் வல்லார் கருத்து. ஆயினும், சில சொற்களின் வரலாற்றை நாம் ஒருவாறு தெரிந்துகொள்ளுதல் கூடும். அந்த முறையில் சொற்பொழிவின் வரலாற்றைச் சிறிது பார்ப்போம்: அச்சொல் திருநெல்வேலி நகரத்திலே பிறந்தது. அந்நகரத்தில் நல்ல தமிழறிஞராய் விளங்கினர் பால்வண்ண முதலியார். அவர் தருமை ஆதீனத்தின் அருமைத் தமிழ்ப் புலவர். அவருக்குப் பிரசங்கம் என்ற சொல் பிடிக்கவில்லை. ‘தமிழிலே மேடைப் பேச்சைக் குறிப்பதற்கு ஒரு சொல் இல்லையா ? இல்லையானல், அதனை உண்டாக்கும் திறன் நமக்கு இல்லையா?’ என்று அவருடைய உள்ளம் ஆராயத் தொடங்கிற்று. பல நாள் முயன்று பல சொற்களை அலசிப் பார்த்து, சொற்பொழிவு என்ற சொல்லை ஆக்கினர். ஆனல், அச்சொல்லை நெல்லை நகரத்தார் எப்படி ஏற்றுக்கொள்வரோ

என்ற தயக்கம் ஏற்பட்டது. அச்சொல் அறிஞரிடையே பரவவேண்டும் என்ற ஆசை மட்டும் அவருள்ளத்தை உந்தியது. 'சொற்பொழிவாற்றுப் படை' என்ற நூல் ஒன்றை அவர் இயற்றினர். சொற்பொழிவு எவ்வாறு செய்யப்பட வேண்டும், சொற்பொழிவு செய்கின்றவன் எப்படி நிற்றல் வேண்டும், எப்படிப் பேசுதல் வேண்டும் என்ற முறையெல்லாம் செவ்வையாக அந்நூலிலே சொல்லப்பட்டுள்ளன. அவ்வாற்றுப்படையை விலை இல்லாமல் அவர் எல்லோருக்கும் வழங்கினர். அந்நூலை வாங்கிப் பார்த்த திருநெல்வேலி நகரத்தார், அதற்கு எத்தகைய வரவேற்புக்கொடுத்தனர் என்பதை நீங்கள் அறிய விரும்புவீர்கள். சொற்பொழிவு என்ற சொல்லை அவர்கள் மனமார வெறுத்தார்கள்; அச்சொல்லை ஆக்கிய ஆசிரியரைப் பழித்தும் இழித்தும் பேசினர்கள்; அவருக்கே 'சொற்பொழிவு' என்ற திருப்பெயரைச் சூட்டினர்கள். நன்மைக்கும் தின்மைக்கும் அவர் உறவினர் வீட்டுக்கு வரும்போது, 'அதோ, சொற்பொழிவு வருகிறது!' என்று அவரைச் சுட்டிக் கூறவும் தொடங்கினர்கள். அக்கூற்று அவர் காதிலும் விழுந்தது. ஆயினும், அதை அவர் பொருட்படுத்தவில்லை. அவ்வறிஞர் இறக்கும் வரையில் சொற்பொழிவு என்ற சொல் நம் நாட்டிலே சிறப்பாகப் பரவவில்லை. ஆனல், சென்ற பதினைந்து ஆண்டுகளாக யாண்டும் சொற்பொழிவு களிநடம் புரிந்து வரக் காண்கிறேம்! பிரசங்கம் போன மூலை தெரியவில்லை! தமிழ் நாட்டிலுள்ள வானெலி நிலையங்களிலும் சொற்பொழிவு சென்று சேர்ந்து

விட்டதென்றால், அதனினும் மிக்க பெருமை அச் சொல்லுக்கு வேண்டுமா !

இருபது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மக்கள் வழங்கி வருகின்ற அருமையான சொற்களில் வானொலி என்பதும் ஒன்று. அச்சொல் பல ஆண்டு களாக நம் செவியிலே விழுந்து பழைய ஓசையாய் விட்டது. இந்த நிலையில், தமிழ் நாட்டு வானொலி நிலையங்கள் சில காலமாக ‘ ஆகாஷ் வாணி ’ என்று சொல்வதைக் கேட்கின்றோம். வானொலி என்ற இனிய எளிய தமிழ்ச்சொல் இருக்க, வேண்டாத வடசொல்லை வழங்குதல் முறையன்று என்பது என் கருத்து. வழக்காற்றில் வந்த சொற்கள் நல்ல சொற்களாக—பொருள்பொதிந்த சொற்களாக—அமையுமேயானால், அவற்றை ஒரு காலும் கை விடலாகாது.

இன்னோரன்ன சிறந்த கொள்கைகளை உள்ளத் திற் கொண்டு, தமிழ் விருந்து அளிக்க முன் வந் துள்ள இக்கலைச்சொல் ஆக்க மாநாடு வெற்றி பெறுக என மனமார வாழ்த்துகின்றேன்!

———